# திருப்பூவணநாதர் உலா

மூலமும் - தெளிவுரையும்
விளக்கவுரையும்

இயற்றியவர் :
வித்துவான் வை. இரத்தினசபாபதி
பேராசிரியர், திருப்பாதிரிப்புலியூர்

வித்துவான் திரு. ஐயன்பெருமாள் கோனார்
பேராசிரியர், தூசையப்பர் கல்லூரி, திருச்சி



பழனியப்பா பிரதர்ஸ்

சேப்பாக்கம்,
சென்னை - 5

தெப்பக்குளம்,
திருச்சி - 2

## உள்ளுறை


| | | |
|---|---|---|
| 1. | திருப்பூவணநாதர் உலா மூலம் | 1 |
| 2. | இறைவன் சிறப்பு | 33 |
| 3. | இறைவன் நாள்செயல் | 54 |
| 4. | இறைவன் உலாப்போதலின் சிறப்பு | 67 |
| 5. | i. பேதை | 104 |
| 6. | ii. பெதும்பை | 118 |
| 7. | iii. மங்கை | 133 |
| 8. | iv. மடந்தை | 147 |
| 9. | v. அரிவை | 160 |
| 10. | vi. தெரிவை | 176 |
| 11. | vii. பேரிளம்பெண் | 200 |
| 12. | இறைவன் உலாப்போந்த திறன் | 213 |

# திருப்பூவணநாதர் உலா

## அணிந்துரை

### திருத்தாண்டகம்

"படைமலிந்த மழுவாளும் மானுந் தோன்றும் பன்னிரண்டு
கண்ணுடைய பிள்ளை தோன்றும்
நடைமலிந்த விடையோடு கொடியுந் தோன்றும் நான்மறையின்
ஒலிதோன்றும் நயனந் தோன்றும்
முடைமலிந்த கோவணமும் கீளும் தோன்றும் மூரல்வெண்
சிரமாலை யுலாவித் தோன்றும்
புடைமலிந்த பூதத்தின் பொலிவுதோன்றும் பொழில் திகழும்
பூவணத் தெம் புனிதனார்க்கே."

உலகம் போற்றும் உயர்தனிச் செம்மொழியானது, அமிழ்தினும் இனிய தமிழ்மொழியே எனல் ஆன்றோர் கண்ட முடிபாகும். "தமிழ் என் கிளவி யினிமை செப்பும்" எனவும், "வண்டு தமிழ்ப் பாட் டிசைக்குந் தாமரையே" எனவும், "தமிழ் தழுவிய சாயலவர்" எனவும், பாராட்டப் பெறலால், உரைக்கும்போதும், உணரும் போதும், உணர்ந்தின்பந் துய்க்கும்போதும், எப்போதும் உண்டாம் இனிமை இத் துணைத்தென யாவரால் எடுத்தியம்ப முடியும்? முடி யவே முடியாது. இயற்கைப் பொருளையும், செயற்கைப் பொருளையும், இயலோடு படுத்து இயம்பும் பெற்றி யெம்மொழிக்கும் முற்றவாரா தென்பதும் ஒருதலை. உலகிடைத் தோன்றும் பிறப்பினுள், மிக்க சிறப் புறு பிறப்பு மக்கட் பிறப்பெனத் தக்கவா காண்டல் போன்று, உல கிடை உலாவப் பெறும் மொழிகளில் உன்னதமுற்று இன்றளவும், கன்னித்தன்மை பூண்டிலகுவது தமிழ்மொழியே யாகும். அத்தமிழ் மொழியிடை அறம் பொருள் இன்பம் வீடெனு நாற்பொருளை, யறி வுறுத்தற்குப் பெரியோர் அகம் புறமென விரண்டாக்கி யதனெடும் படுத்து விரித்துரைப்பர்.

"செந்தமிழ் நாடெனும் போதினிலே யின்பத்
தேன்வந்து பாயுது காதினிலே"

எனப் பாரதியாரும் பாராட்டலைப் பார்த்தல் வேண்டும்.

தொல்காப்பியப் பாயிரத் திடைப் பனம்பாரனார், தமிழ்கூறு நல் லுலகத்து வழக்குஞ் செய்யுளுமாகிய நெறியிடைப் படுத்துப் பொறி

யுளங் கொளுமாறு ஐந்திலக்கணம் செந்தமிழ் மொழி யிடைச் செறித்துச் செப்பலைப் பகர்கின்றனர். அவ்வைந்திலக்கணத்துள் நடுவணதாகிப் பொருளிலக்கணத்தே புகலப் பெறுவது நாற்பொருளைப் பற்றியன்றோ! ஆகவே நூல்களால் நுவலப் பெறுவன நாற்பொருளெனல் துணிவுறுத்தப் பெறுகின்றது. அங்ஙனஞ் செப்பப் பெறும் நூல்கள் காப்பியமும் சிறுகாப்பியமு மென்பனவேயாம். சிறுகாப்பியத்திடைச் சில பொருள்கள் குறைத்துக் கூறப்படுகின்றன. சிறுகாப்பியங்களாகிய பிரபந்தங்களோ நால்வகைக் கவிகளில் வித்தார கவியாற் பாடப் பெறும் தொண்ணூற்று ஆறுவகைப் பிரபந்தங்களேயாம். அவைகள் சிறுகாப்பியமெனப் பெயர்பெறும். தொல்காப்பியர் விருந்திடைப் படுத்து விளம்புவர். "விருந்தே தானும் புதுவது புனைந்த யாப்பின் மேற்றே" என்பது சூத்திரம். அவ்விருந்திடைப் பொருந்துவது உலாவென்பதும் ஒன்றாகும்.

இஃது உலாப்புறம் (புறவுலா) என வழங்கப் பெறும்.

உலாவின் இயல்:—பேதை முதல் பேரிளம்பெண் இறுதியாகவுள்ள ஏழ்வகைப் பருவ மகளிரும் கண்டு மயக்கங் கொளும் வண்ணம் நாயகன் (தலைவன்) மறுகின்கண் திருத்தேரில் உலாப் போந்தான் என்று கலிவெண் பாட்டினாற் பாடப்படுவது. இவ்வுலாவின் இலக்கணத்தினைப், பன்னிரு பாட்டியல், வெண்பாப் பாட்டியல், சிதம்பரப் பாட்டியல், இலக்கண விளக்கப் பாட்டியல் முதலிய பாட்டியல் நூல்களிற் பரக்கக் காணலாம். பன்னிரு பாட்டியலின்கண் உலாவின் இலக்கணமானது அடியில் வருமாறு கூறப்பட்டுள்ளன.

(1) முதனிலை பின் னெழு நிலையுலா வெண்கலி

(2) பாட்டுடைத் தலைவ னுலாப்புற வியற்கையும்
ஒத்த காமத் திணையாள் வேட்கையும்
கலியொலி தழுவிய வெள்ளடி யியலாற்
றிரிபின்றி நடப்பது கலிவெண் பாட்டே.

(3) பேதை முதலா வெழுவகை மகளிர்கண்டு
ஓங்கிய வகைநிலைக் குரியா னொருவனைக்
காதல் செய்தலின் வருங்கலி வெண் பாட்டே.

(4) குடிநெறி மரபுகொளல், கொடை விடியல்
நன்னீ ராடல் நல்லணி யணிதல்
தொன்னகர் எதிர் கொளல் நன்னெடு வீதியின்
மதகளி றூர்தல் முதனிலை யாகும்.

(5) 'ஆதிநிலையே குழாங் கொளல் என்றெடுத்து
ஓதிய புலவரு முளவென மொழிப.'

(6) ஏழுநிலையு மியம்புங் காலை
பேதை பெதும்பை மங்கை மடந்தை
அரிவை தெரிவை பேரிளம் பெண்ணெனப்
பாற்படு மகளிர் பருவத் தாதல்
நோக்கி யுரைப்பது நுண்ணியோர் கடனே,

என்பனவாம்.

இலக்கண விளக்கப் பாட்டியல்: ஏழ் பருவ மகளிர்க்கு ஆண்டு வரை யறை யறைகின்றது. அது வருமாறு:

ஐந்து முதலேழ் ஆண்டும் பேதை
எட்டு முதனூன் காண்டும் பெதும்பை
ஆறிரண் டொன்றே யாகும் மங்கை
பதினூன் காதிபத் தொன்பான் காறும்
எதிர்தரு மடந்தை மேல் ஆறும் அரிவை
ஆறுதலை யிட்ட யிருபதின் மேலோர்.
ஆறுந் தெரிவையெண் ணைந்துபே ரிளம்பெண் (என்று)
ஓரும் பருவத் தோர்க்குரைத் தனரே'

என்பதாம்.

உயிர்களில், ஆண் பெண் என்னும் பேதம் இன்றென்பர். உடலினால் அவ்விரு திறனும் பகுத்துணரக் கிடக்கின்றது என்பது ஆராய்ச்சியாளர் அறுதியிடும் முடிவு. உயிர்களாகிய பசுக்களைத் தலைவியாகவும், உயிர்த் தலைவனாகிய ஆண்டவனை நாயகனாகவும் கொண்டுரைப்பதென்பது உள்ளுறையாகும். ஆண்டவனுக்குப் பசுபதி எனும் நாமமே இதனை வலியுறுத்தாநிற்கும். இவ் விலக்கண மெலாம் முற்றவமைந்த பெற்றித்தாய இத்திருப்பூவணநாதர் உலா வானது அக வொழுக்கத்தினைப்பற்றிக் கூறுகின்றதாயினும், அகத் திணைப் பகுதி நெடும் வெண்பாட்டாகக் கொள்ளாமல், புறத்திணைப் பகுதியாகவே கோடல் தகும்.

இதனை 'ஊரொடு தோற்றமும் உரித்தென மொழிப' எனுந் தொல்காப்பியப் புறத்திணை யியல் சூத்திரத்திற்குரைத்த நச்சினார்க் கினியர் உரைகொடு துணியக் கிடக்கின்றது.

இடைக் காலத்தில் கலைகளின் உட்பொருள்கள் பலவும் மலியு மாறு சமய நூல்கள் பல எழுந்துள்ளன. புலவராயினோர் வள்ளற் பெரு மக்களைப்பற்றிய ஞான்று தங்களைப் பெரும்பாணர், சிறுபாணர், பொருநர், விறலியர் ஆக வமைத்துப் பாடியவர்போன்று, இறைவனைப் பதியாகவும் தன்னைச் சதியாகவும் (தலைவன்-தலைவி)(நாயகி நாயக பாவமெனவுங் கூறுவதுண்டு) வைத்துக்கொண்டு பாடும் நெறி ஏற்பட்டுள்ளது. இதற்குச் சான்றாக தூது முதலியவற்றினைக் கோடற்கும்,

உலாவெனும் பிரபந்தத்திடத்தும் கடவுளைத் தலைவனுக அமைத்து, அக்கடவுளே, எழுவகையுற்ற உயிர்நிலைத் தொகுதிகள் நிறைந்த மறுகின்கண் (தெரு அல்லது வீதி) புறவுலா போதருங்கால், புலவன், தானே எழுவகைப் பருவ மாதராக விருப்பதுபோன்று பாவனை பண்ணிக்கொண்டு இறைவன்மேல் காதல்கொள்ளும் முறையாகச் சமயத்துட் கிடைக்கை புலப்படுத்தப் பெறுகின்றது; இஃதோர் வியப்பினும் வியப்பேயன்ருே !

ஈண்டு, எழிற்றிருப் பூவணநாதரே பாட்டுடைத் தலைவர். அப் பூவணநாதரே தேரில் இவர்ந்து உலாவரலாக வரவழைத்தருளினர். அப்பெருமாஞர் உலாப் போதருந்தெரு, உருத்திர கணிகைமாதர் தந் தெரு. இந்நூலை யாத்தருளிய திருப்பூவணம் கந்தசாமிப் புலவர், பேதை முதல் பேரிளம் பெண் ஈருகவுள்ள எழுவகைப் பருவ மாதர் தம்மைப் பலபடியாகச் சிறப்பித்து வருணித்துள்ளனர் என்று கூறலை விடுத்து, புலவர் தாமே அவ்வப் பருவ மாதர்களாகி நமக்குப் பெரிதுங் காட்சி யருளுகின்றனர் எனக் கோடல் சாலப் பொருத்த மாகும்.

நூலாசிரியர், பூவணநாதரின் பெருமையினைப் பகரப் புகுந்தவர், சாத்திரத்தின் முற்றிய கருத்தினை எங்ஙனம் இயம்புவதென மயங் கும் முடிவினை மிகவும் தெளிவுற ". ஆரணம் சொல், எல்லாப் பொருளும், இது பொருள் என்ருேர் பொருண்மேல், இல்லாப் பொருளும் யான் என்போன்" என்பதனுள் அடக்கிக் காட்டியமை கலைப் புலவர் உளங்கொளற்கு ஏதுவாகும். திருப்பூவ ணத்து இறைவன் ஒருவனை மாத்திரமே உலாவிற்கு அழைத்து வந்தார் கந்தசாமிப் புலவர் என்பதைவிட, பணைக்கை மாமுகன் மூடிகத் தேரேறியதுமுதல் இந்திரன் அயிராவதத் தேர் இவர்ந்தது வரை கூறிப் பல தேர்களையும் உலாவருமாறு அமைத்துள்ள நயம் ஆய்தற்குரியது. உலாவில் உடன்வருபவர் பகுதி ஒரு புகைப்பட நிகழ்ச்சி போன்று என்றும் அறிவின்பம் தருவ தொன்ரும்.

ஏழ்வகைப் பருவ மாதர்களையும் புலவர் அமைத்தருளிய நிலை இயற்கையொடு பட்ட உள நூல் கண்கொண் டுணரற்பாற்ரும். அப் பெற்றித்தாய உளநூற் குறிப்புக்கள் இந் நூலுரையின்கண் ஆங்கு ஆங்குக் குறிப்பிடப் பெற்றுள்ளன போற்றற்குரியனவாம்.

உலாவிற் பெதும்பைப் பருவமானது அறிந்தும் அறியாப் பருவ மாகலின், அப்பருவ நிகழ்ச்சிகளைத் தெளியவெடுத்துரைத்தல் கடின மாதலின், " பேசும் உலாவிற் பெதும்பைப் புலி " என்ற ஔவைப் பிராட்டியார் வாக்கு எழுந்தது. திருப்பூவணம் கந்தசாமிப் புலவர்

தாம் சிறந்த வேடராகவே இருந்து, அப்புலியை, எளிதிற் படியுமாறு வைத்தார் எனக் கொள்ளுதல் அமைவுடைத்தாகும்.

செய்யுள், செய்யுளாகத் திகழப்பெறல் வேண்டுமாயின் எத்துணை யணிநலங்களும் பொருணலங்களும் உவமைச் சிறப்புக்களும் அமைந்து தோன்றப் பெறல் வேண்டுமோ, அத்துணை நலங்களும் ஒருங்கே யமைந்து இலகுவது இவ்வுலாவெனக் கோடல் பொருந்தும். இவ்வுலாவின் கண், ''என்றும் சிறியவர்க்கு இனியது காட்டார்'' என்ற வுலகியலும் ''பொதியின் மலைப்புலியை வாலுருவி விட்டான்'' என்ற பழமொழியும் ஏற்ற பெற்றியாக ஆடல் (நடனம்) புரிகின்றன.

திருப்பூவண நாதரை, தெய்வீகப் பலாவின் கனியாகவும், மங்கையை மலர்வனமாகவும், பேரிளம் பெண்ணினைக் கொன்றையாக வும் ஆக்கிக் கூறலானது என்றும் மறவா இன்பம் பயப்பதோடு இவருக்கு இயற்கைப் பொருள்கண் மாட்டு அமைந்துள்ள அறிவின் மாண்பு நன்கு தெரியவரும்.

பேதைப் பருவ எழில்நலம், பெதும்பைப் பருவ எழில்நலம் ஆய வற்றினை அணியுறவமைந்த போக்கு இவர்தம் உளக் கூற்றொடு பட்ட உடற்கூற்று ஆய்வுத் திறனை நன்கு விளக்குவது ஆகும்.

உலாவினுள், காலத்தாலும் கருத்தாலும் முற்பட்ட ஆதி யுலா வாகிய திருக்கைலாய ஞான வுலாவினைப் போன்று, கருத்தாலும் பிற நலங்களாலும் சீருற்றுத் திகழ்வது திருப்பூவண நாதருலாவெனக் கொள்வது பொருந்தும்.

உலாவின் முடிவில் பாட்டுடைத் தலைவன் அருள்செய்து சென்ற தாகக் கூறலும், அருள்புரியாமலே போந்ததாகக் கூறலும் ஆகிய விருவகை நிலைகளையும் கவிஞர்கள் அமைத்துள்ளனர். இறைவனைப் பாட்டுடைத் தலைவராகக்கொண்டு பாடுமிடத்து தங் குறையினை அறிவுறுத்த வெண்ணி அருள்காட்டாது சென்றதாகவே கவிஞர்கள் கண்டுள்ளனர். ஆயினும், இந்நூலாசிரியராகிய திருப்பூவணக் கந்தசாமிப் புலவர்,

> ''அருள் தாராய் என்றனை நோக்கி யிடர்நோக்கிச் சம்பரனை
> வென்றனை யீசன் விலக்கினன்''

என்ற குறிப்பிலிருந்து பாட்டுடைத் தலைவன் அருள்புரிந்து சென்ற தாகவே கூறியுள்ளமை தெளியப்பெறும், என்றாலும்,

> ''நின்றாள் அப்பேதை முதலாப் பேரிளம்பெண் ஈறாக
> மாதர் பலர் மயங்க''

என்றது முரணுருதோவெனின் முரணுருதென்க. ஒவ்வொரு பருவத்தும் ஒருத்தியையே அருள்செய்து அவ்வப் பருவத்து ஏனையர் பலர் மயங்க மாதேவன் உலாப் போந்தான் எனக் கூறலின்.

இத்தகைய சிறப்பு வாய்ந்த நூலுக்கு உரைகண்டார், திருச்சிராப்பள்ளி உயர்திருவாளர் திரு. ஐயன்பெருமாள் கோனார் அவர்களும் உயர் திருவாளர் வை. இரத்தினசபாபதி அவர்களுமாவார். கோனாரவர்கள் ஆங்கிலக் கல்லூரியில் பயிலும் மாணவர் தமக்குரிய தமிழ் நூல்கட்கு நல்லுரை கண்டு அவர் தம்மைத் தமிழிற் பெரும் பற்றுச் செய்தாற் போன்று தனித் தமிழ் பயிலும் வித்துவான் வகுப்பு மாணவர் பயன்பெறத் தம் மதிநுட்பத்தால் திரு வை. இரத்தினசபாபதியின் உறுதுணையோடு திட்ப உரையொன்று கண்டுள்ளனர். இந்நூலுரையானது தமிழர்கட்கும் தமிழ் மாணவர்கட்கும் பெரு விருந்தாகும் என்பது ஒருதலை. இவர்கள் மேலும் மேலும் தமிழ் வித்துவான் தேர்விற்குரிய இலக்கிய இலக்கண நூல்கட்கு நல்லுரை கண்டு தருவாராயின் தமிழுலகம் பெரிதும் நன்றி பாராட்டும். இவ்வுரை நூலைச் சிறந்த முறையில் அச்சிட்டுக் குறைந்த விலைக்கு வழங்கும் உயர்திரு. செ. மெ. பழனியப்பச் செட்டியாரது தமிழன்பு பாராட்டுதற்குரியது.

பண்டித வித்துவான்
திருமுறைச் செல்வர் சித்தாந்தச் செம்மணி.
இராம. கோவிந்தசாமிப் பிள்ளை
தமிழ்ப் பேராசிரியர்.

திருவையாறு
1—8—57

# நூலாசிரியர் கந்தசாமிப் புலவர் வரலாறு

இவர் ஊர் பாண்டி மண்டலத்துள்ள திருப்பூவண நகராகும். சமயம் சைவம். காலம் இற்றைக்கு நூற்றைம்பது வருடங்கட்கு முன்னென்பர். யமகம், திருக்கு, மடக்கு முதலியன பாடுதலில் வல்லுநர். ஆப்பனூர்ப் புராணம், பூவணப் புராணம், பூவண உலா முதலியன செய்தவர். இந்நூல்களை யன்றிப் புட்பவனநாதர் வண்ணம், தல வகுப்பு, தீர்த்த வகுப்பு, மூர்த்தி வகுப்பு, திருப்புனவாயிற் புராணம் முதலியவற்றினையும் யாத்துள்ளனர் என்பர். இவர் வரலாறு வேறு வகையாகவும் கூறுவதுண்டு.

" திருவால வாயரெலாம் வலசித்தர் இரசவா தஞ்செய் தற்கா
வருவாரை வணங்கவவர் மணிமுறுவல் சிறிதரும்பி மலர்க்கண்
[நோக்கக்
கருவாகிப் பொன்னனையாள் பெற்றெடுத்த புத்திரனோர்
[கந்தசாமி
பெரு வாய்மைப் பூவையுலாப் பாடியதெம் போலியர்கள்
[பிழைக்கத்தானே "

இஃதோர் பழைய செய்யுளாகும். இதனானும் ஒரு வரலாறு புலப்படாநிற்கும்.

இவர் பாடிய திருவாப்பனூர்ப் புராணத்திலுள்ள பாயிரச் செய்யுள் ஒன்று பின்வருமாறு :—

கனியினைப் பிழிந்து செந்தேன் கண்டென ஆப்பனூர்எம்
பனிமதி மிலைந்த நாதன் பன்னரும் புராணந் தன்னைப்
புனிதன்மெய்க் கந்தசாமிக் கவிஞன்பூ வணத்தான் பார்மேல்
இனிதெனப் புலவர்கூற இன்றமிழ்ப் புணர்த்தினனே "

என்பதாம்.

இந்நூலாசிரியரைப் புனிதனெனவும், மெய்க் கந்தசாமி யெனவும், கவிஞன் எனவும், பூவணத்தான் எனவும், இப்பாட லறிவுறுக்கின்றது. அன்றிப் பொன்னனையாள் ஈன்ற புதல்வன் எனக் குறிப்பிக்கவில்லை. சீரிய தவநிலையினளாகிய பொன்னனையாள் புதல்வராக இருந்திருப்பின், சிவபிரானருளுற்றவர், கருவிற்றிருவுடையவர் என்றிவ்வாறெல்லாம் புலவருரை மலிந்திருக்கும். இவர், எம் பொன்னனையாள் என்றுரைத்தது, தான் பிறந்த குலத்துரிமை பற்றியும், கோடல் தகும். 'எம்போலியர் பிழைக்கப் பூவையுலாப் பாடினன்' என்றுரைத்தது, உருத்திர கணிகை யொருத்தியின் புதல்வராய்த் தோன்றி, தண்டமிழ்த்தேனைப் புலவர் உள்ளமெனும் வண்டுகள்

மொண்டருந்துமாறுதவும் புலமைத் தேவதருவாய் இலகியமை குறித்து எழுந்த அன்பின் ஈடுபாட்டினுல் என்று கோடற்கும் இடனுண்டு.

சேரமான் பெருமாணுயனுரால் இயற்றப்பட்ட ஆதியுலாவும், தத்துவராயரால் இயற்றப்பெற்ற ஞான விநோதன் உலாவும், கவிச் சக்கரவர்த்தியாகிய ஒட்டக் கூத்தரால் இயற்றப்பெற்ற மூவருலாவும் முறையே தத்தம் புலமைத் திறத்திற்கேற்பக் கருத்துக்களைத் தொடர்புபெற அமைத்து விரித்து தாம் வழிபடு தெய்வங்களின் மீதும், தம் ஆசிரியர் மீதும், தம்மை யாதரித்த உபகாரிகள் மீதும் பாடப் பெற்றுள்ளன. அன்னவாறே இப்பூவண நாதருலா தாம் வழி பட்ட தெய்வத்தினைப் பற்றியதாக வமைந்த பண்பாடு பெரிதும் போற்றற் பாலதாகவுள்ளது.

இந் நூலாசிரியருடைய வரலாறு புலவர் சரித்திரத்திலும் திருப் பூவணநாதருலாக் குறிப்புரை நூலிலும் சுருக்கமாகக் காணப்படு கின்றது. இவர் காலம் சற்றேறக் குறைய நூற்றைம்பது ஆண்டு கட்டு முன்னர் என்பது ஆராய்ச்சியாளர் துணிபாம். இவர் இரு மொழிப் புலமையும், நிலையுற்ற கலைப் புலமையும் மீக்கூர்ந்தவர் என்பதும், அடியவர் பத்தியிலும், திருமுறை யாராய்ச்சியிலும் ஈடு பட்டிருந்தவரென்பதும், இவ்வுலாவினின்று நன்கு தெரிந்து கொள்ள லாம். இவர் தம் கவிவன்மை குறித்துச் சில செய்யுட்களைக் குறிப் பிடுவோம். (1) ஆப்பனூர்ப் புராணம் :—

"பெருமுலைப் பாலகன் பிரமன்கண்டறியாப் பெருந்தகை மேற்
பொருமுலைப்பான் மெழுகினுளம் புரைந்துருகத் தமிழ்ப்பாடும்
மருமுலைப்பா லரும்பனைய மணிமுறுவன் மலைமகளார்
திருமுலைப்பான் மணங்கமழ்வாய்ச் செல்வனையாம்
[ பரவுவாம் "

(பெரு முலைப் பாலகன் – விட்ணு. முலைப்பால் அரும்பு—முல்லை யின் வெண்மையான அரும்பு)

(2) பூவணப் புராணம் :—

"சேய்கணின்றவைக் கீன்றவை முத்தமே சிற்றில் கோலச்
[சிதைப்பது முத்தமே.
பாய்புனற்றிரை சேர்வது பண்ணையே பாடலெங்கும் பயில்வது
[ பண்ணையே.
வாய்திறந்து வழங்குவ வள்ளையே மானனூர்கடம் வார்காதும்
[ வள்ளையே.
ஓய்மருங் குலுடுப்பது சேலையே உற்றகண்க ளொப்பது
[சேலையே."

(சேய்கள் - பிள்ளைகள், அவை – தாய், பண்ணை – வயல், சவை- வள்ளை- உலக்கைப் பாட்டு, வள்ளைக் கொடி. சேல் - ஒருவகை மீன்.)

(3) திருப்பூவண உலா-தெரிவைப் பருவம் :—

(1) பூவண வானனஞ்சொற் பொன்னனையாட் கன்றளித்த
மாவணக் காதை வகுத்தெழுதி–ஓவியத்திற்

(2) காட்டுகென நிறைபொன் கைக்கொடுப்ப வோர்படத்தில்
தீட்டி யவ னவள் முன்சென்றிருந்து–தோட்டலர் மென்

(3) போதரசு கையிற்செய் பொன்னனையாய் பொன்னனையாள்
மாதரசு வாழ்பொன் மனையிதுபார்–கோதை
பிடித்த விரதப் பெரும்பேறு பாவைக்
கடுத்த விசேட மதுபார்—முடித்த குழல்.

இது தெரிவைப் பருவத்தாட்குச் சித்திரக்காரன் ஒருவன் பொன்னனையாள் என்னும் உருத்திர கணிகையுடைய வடிவம், வீடு முதலியவைகளைச் சித்திரப் படாத்திலே தீட்டி ஒவ்வொன்றையுந் தனித் தனிச் சுட்டிக் காட்டி, இது இது எனக்கூறும் பாகம். இவள் சிவனடியார்க்குச் செய்யும் விருந்தோம்பலை வியந்து சிவஞான முனிவரர் அவர்களும்,

“பொன்னனையாள் அன்பருக்கே போனக மீந்துன்னருளாசி
சொன்னமிகப் பெற்ருள் சோமேசா—பன்னில்
வருவிருந்து வைகலும் ஓம்புவான் வாழ்க்கை
பருவந்து பாழ்படுதலின்று” என்ருர்.

# திருப்பூவணத்தல வரலாறு

## திருஞானசம்பந்தர் தேவாரம்.

நன்று தீது என்று ஒன்றிலாத நான்மறையோன் கழலே
சென்று பணியேத்த நின்ற தேவர்பிரான் இடமாம்
குன்றி லொன்றி யோங்க மல்கு குளிர் பொழில்சூழ் மலர்மேல்
தென்றல் ஒன்றி முன்றிலாரும் தென்திருப் பூவணமே.

செந்தமிழ்ப் பாண்டி வளநாடு தமிழோடு சைவத்தையும் வளர்த்த பெருமையுடையது.

மொழியானது அறிவை வளர்க்கிறது. வளரும் அறிவுக்குக் கலைக ளாகிய இரைகள் பலவற்றை ஆக்கித் தருகிறது அது. இத்தகைய கலைகளை நுகர்ந்தவுடனேயே போதும் என்ற நிலையைப் பெற்று, தனது முழுப் பயனையும் அடைந்துவிட்டதாக எண்ணிக்கொண்டு அத்துடன் அமைந்து விடுகிற அறிவு நிலையும் உண்டு; இந்நிலை மிக எளிமையுடையது. இவைகள் போதாக்கால மேலும் மேலும் தாக்குதல் செய்யும் அறிவுக்கு மொழியானது தன்னையே இரையாக்க நேர்ந்து விடுகிறது. மொழியையே இரையாகப் பெற்ற அறிவு அதை நுகர்ந்தவுடன் இதுவே தனது முழுப் பயன் என்று எண்ணி அம் மொழி யாராய்ச்சியுடனேயே நின்றுவிடும் அறிவு நிலையை இடை நிலை அறிவெனக் கொள்ளுதல் பொருத்தமும் அமைவும் உடைத்து. மொழி தரும் கலை பலவற்றையும் நுகர்ந்து, அத்துடன் அமையாது மொழியையே தனக்கு இரையாகப் பெற்று ஆராய்ந்து நுகர்ந்து, மேலும் பசித்து நிற்கும் அறிவுக்கு மொழி எதைக் கொடுப்பது என்று புரியாது நிற்கின்றது. தன்னுல் தோற்றிய குழந்தை தன்னையே உண்டபிறகும் கூட, அமைதிபெருது பசித்து நிற்பதைக் கண்ட மொழித் தாய், தன்னுல் காணமுடியாத ஒன்றைக் கண்டு பிடிக்கு மாறு ஏவிவிட்டுத் தன் வலியிழந்து அடங்கி விடுகின்றது. அறிவு தன் ஆற்றல் முழுவதையும் கொண்டு மொழியால் சுட்டப் பெற்ற பொருளை அறிய முயல்கிறது. சுட்டப்பெற்ற பொருளை முழுதும் அறி யும் ஆற்றல் தனக்கு இன்மையின் அறிந்தவரை உணரும் நிலை யுடைத்தாய் அப்படியே அப்பொருளடியில் தன்னுணர்வின்றித் தாழ்ந்து கிடக்கின்றது. இதுவே அறிவின் முடிவுநிலை. எனவே கலை யுணர்வு ஏட்டுப் படிப்பு ; மொழி யுணர்வு இயற்கைப் படிப்பு; இவை கட்கு அப்பாற்பட்ட நிலையே இறையுணர்வு. கலையுணர்வும், மொழி

யுணர்வும் இறையுணர்வுக்கு அடிப்படை கோலியபோதுதான் அறிவு ஒரு நிலை பெற்றது எனக் கொள்ளமுடியும். இதனையே,

" கற்றதனால் ஆய பயன் என்கொல் வாலறிவன்
நற்றாள் தொழாஅ ரெனின். "

என்பதனுள் விளங்க அமைத்துக் காட்டினார் வள்ளுவப் பெருந் தகையார்.

இத்தகைய பெருமையோடு தமிழ் தன்னினும் அரிய—உயர்ந்த—தன்னாலும் காணமுடியாத ஒரு சமயத்துப் பொருளையும் படைத்துத் தன்னோடு வளர்த்து வந்தது. இக்கருத்தின் அடிப்படையில்தான் சங்க காலத்து மொழி சமயத்தோடு நீக்கமற நிறைந்து மாதொரு பாகனைப் போன்றே நிலவியது. இந்நிலையில் முச்சங்கம் முறையுறத் திகழ்ந்த பாண்டி வளநாட்டில் ஆவினுக்குப் பாலின் தன்மை அங்க முழுதினும் நிறைந்து தோன்றினும், பெற்றுப் பயனடைவான் பொருட்டுக் காம்பினிடமாகத் தோன்றல்போல், எவ்விடத்தும் இறை நிறைந்துளன் ஆயினும் மக்களும் பிறவும் வணங்கி யுய்வான் பொருட்டு அருளே திருமேனியாக் கொண்டு எழுந்தருளியுள்ள தலங்கள் பதினான்கு என்ப.

கூடல் புனல்வாயில் குற்றாலம் ஆப்பனூர்
ஏடகம் நெல்வேலி இராமேசம்—ஆடானை
தென்பரங் குன்றஞ் சுழியல் தென்திருப்புத் தூர்கானை
வன்கொடுங் குன்றம் பூவணம்.

இவற்றுள் இறுதியில் நின்ற சிறப்பிற்றாய் விளங்குவது திருப் பூவணம். இப்பாடல் முறையே பாண்டி நாட்டுத் தலங்களைத் திருப் பூவண நாதர்உலாவின் கண்ணிகளில் (297 முதல் 311 வரை) ஆசிரியர் அமைத்துக் காட்டுகின்றார்.

திருப்பூவணம் மூவர் முதலிகள் எனப் பெற்ற சம்பந்தர், நாவரசர், சுந்தரர் ஆகிய மூவராலும் பாடப் பெற்றது. மூவர் பதிகங் களை ஒருசேரக் கொண்டு நோக்குங்கால், இது சேர, சோழ, பாண்டியர் எனப் பெற்ற மூவராலும் வணங்கப்பெறும் நிலையமைந்து, இயற்கை வளமும் தெய்வ மணமும் கமழப் பெற்றிருந்தது என்பது புலனாம்.

## பொன்னனையாள் செயல்

இத்தலத்தில் உருத்திர கணிகையர் வகுப்பினளாய், சிவநெறி பற்றி ஒழுகிவந்த பொன்னனையாள் என்பவளின் விருப்பத்தைத் தீர்க்க இறைவன் சித்த வடிவங்கொண்டு வந்து இரும்பைப் பொன் னாக்கிச் சென்றான் என்ற செயல் இவ்வுலாவில் சிறப்பித்துப் பேசப்

பெறுகிறது. இவ்வரலாற்றை இரசவாதம் செய்த திருவிளையாடல் எனப் பரஞ்சோதியாரும், பொன்னனையாளுக்கு அருள்புரிந்த திருவிளையாடல் என்று பெரும்பற்றப் புலியூர் நம்பியும் குறித்துச் சென்றார்கள். ஆயின் இந்நிகழ்ச்சி தேவாரம் பாடிய மூவர் காலங்கட்கும் பிற்பட்டதாதல் வேண்டும் என்று தெரிகிறது. திருப்பூவணத்தின் சிறப்புக்களையெல்லாம் விளக்கிப் பாடிய தேவாரத் திருமுறை ஆசிரியர் மூவரும் இந்நிகழ்ச்சியைக் குறிப்பிடவில்லை. மாணிக்கவாசகர் தமது தேனில்,

> " பூவண மதனிற் பொலிந்தினி தருளித்
> தூவண மேனி காட்டிய தொன்மையும் "

என்று குறித்தார். இதனுள் "தூவணமேனி காட்டிய தொன்மை" என்பதற்குப் பேராசிரியர் கா. சுப்பிரமணியப் பிள்ளை அவர்கள் பிற சான்றோர் குறிப்புக்களையும் உள்ளிட்டு " பூவண மென்னும் திருப்பதியிலே சித்தராகத் தோற்றங் கொண்டு அடியவள் வீட்டில் வீற்றிருந்தருளித் தூய பொன்வண்ணத் திருவடிவம் காண்பித்த பழைய முறையும்" என்று உரை யெழுதிப் போந்தார். எனவே இந்நிகழ்ச்சி மூவர் காலங்கட்குப் பின்னும், மாணிக்கவாசகர் காலத்திற்கு முன்னும் நடந்ததாகக் கொள்ளுதற் கிடமுண்டு. இவ்வாறு ஆய்தற்குரித்து.

இனி, திருப்பூவணம் இறைவன் கோயிற் பெரியநந்தி சிறிது சாய்ந்திருப்பதைக் கொண்டு, " வையை நதியில் உள்ள மணல்கள் சிவலிங்கங்களாகத் தமக்குத் தோற்றியமையின் அவற்றை மிதித்துத் தாண்டித் திருப்பூவணம் செல்வதற்கு அஞ்சி அக்கரையிலேயே நின்ற திருஞான சம்பந்தமூர்த்தி நாயனார் முதலியோர்கள்பொருட்டு சிவபெருமான் திருநந்திதேவரைச் சிறிது சாய்ந்திருக்கும்படிக் கட்டளையிட அவர் அப்படியே சாய்ந்திருந்தனரென்று பெரியோர் சொல்கின்றனர். அத்தோற்றம் இன்றும் உண்டு," என்று பெரும் புலவர் திரு. உ. வே. சா. அவர்கள் கூறிச் சென்றார்கள். இதற்குச் சான்றாகப் புட்பவனநாதர் வண்ணத்திலுள்ள,

> " செப்பு மூவர்சொல் தமிழ்துதிக்க விருப்பமொடு வந்து வையை
> மணற் சிவலிங்கமென மனத்தெணி முன்பு வடகரைக்கு அவர்
> நின்று தமிழ்பாடு பொழுதே இடப மாமுதுகு சாயும் வகையே
> செய்துமுன் மூவர் தரிசிக்க மகிழ் நேசர் "

என்ற செய்யுளைக் காட்டினர். ஞானசம்பந்தப் பெருமான் முதலிய மூவரும் தம் குறிப்பை வரலாற்றை யொட்டி இயன்றவரை பாடிச் செல்லும் பண்பினரென்பதைத் தேவாரங்களை ஒரு சேர நோக்குங்கால் உணரலாம். இத்தகைய நிகழ்ச்சி வருமேயாயின் பூவணத்துக்

கோலத்தையே காட்டியிருப்பர் இறைவனுர். தலத்துட்புக்குப் பதிகம் பாட இயலாக் காலை நேரில் இறைவனே வந்து கோலங் காட்டிய நிகழ்ச்சிகளை ஞானசம்பந்தர் வரலாற்ருல் அறியலாம். இந் நிகழ்ச்சி வரலாற்றுப் பேராசிரியராய சேக்கிழார், தலங்கள்தோறும் சென்று கல்வெட்டு முதலியவற்றை ஆய்ந்துணர்ந்து புராணம் பாடிய சேக்கிழார் குறித்தாரில்லை. மேலும் அவர், " 'திருஞானசம்பந்தர் புராணத்தில்' பற்ருர்தம் பரங்கள்மலைச் சிலையால் செற்ற பரமனுர் திருப்பத்தூர் பணிந்துபோந்து புற்ருரும் பணிபூண்ட புனிதனுர்தம் பூவணத்தைப் புக்கு இறைஞ்சிமீப் புகழ்ந்து பாடி" என்று குறித்தார். இதுவேயன்றி, திருநாவுக்கரசரைக் குறிக்கும் போது,

"கொடிமாடம் நிலவுதிருப் பூவணத்துக் கோயிலினுள்
நெடியானுக்கு அறிவரியார் நேர்தோன்றக் கண்டிறைஞ்சிய"

தாகக் குறிக்கிருர். சுந்தரர் பெருமானும் மூவேந்தர் புடைசூழத் திருப்பூவணம் சென்று வணங்கியதைக் கீழ்வரும் செய்யுள் கூறுகிறது,

"சென்று திருப்பூவணத்துத் தேவர்பிரான் மகிழ்கோயில்
முன்றில் வலங்கொண்டு இறைவர் முன்வீழ்ந்து பணிந்தெழுந்து
நின்று பரவிப் பாடி நேர்நீங்கி உடன்பணிந்த
வென்றிமுடி வேந்தருடன் போந்தங்கண் மேவினுர்."

(கழறிற்றறிவார் புராணம் 99).

இவற்றையெல்லாம் ஒருசேரக் கொண்டு நோக்குங்கால் புட்பவனநாதர் வண்ணம் குறிக்கின்ற "நந்திசாய்வு" நிகழ்ச்சி எத்துணையளவு உண்மையென்பதை அறிஞர்கள் ஆய்ந்து முடிபு காண்க.

இனி, திருப்பூவணம் சம்பந்தரிடம் வாதிட்டுத் தோற்றுப்போன சமணர்கள் கழுவேறிய இடம் என்ற குறிப்பு, திருவாலவாயுடையார் திருவிளையாடலால் தெரிகிறது. அப்புராணம் இதனைக் "கழுவர் படை வீடு" எனக் குறிக்கின்றது. இதற்கும் பிற ஆதாரங்கள் ஏதும் இன்று.

மூவர் காலங்களில் பாண்டி நாட்டுப் பழம் பதிகளுள் ஒன்ருய்ச் சிறப்புற இருந்த திருப்பூவணம், கால மாறுபாடுகளால் குன்றி, விழாவற்று வெறுவியதாய் அமைந்திருக்குமெனக் கருத இடமுண்டு. இதனுல்தான் பின்னர் வந்த பொன்னனையாள் இறைபணி புரிவதிலும் திருவுருவம் சமைப்பதிலும் முக்கியக் கருத்துக்கொள்ள வேண்டியவளானுள். திருவுருவம் இறைவன் திருவருள் செயலால் முற்றுப்

பெறவே இவள் தேர்விழா ஏற்பாடுகள் செய்யலானுள் எனத் தெரி கிறது. இதனை,

“ மழவிடை யுடையான் மேனி வனப்பினை நோக்கி யச்சோ
அழகிய பிரானே வென்னு அள்ளி முத்தம் கொண்டு அன்பிற்
பழகிய பிரானை ஆனுப் பரிவினல் பதிட்டை செய்து
விழவுதேர் நடாத்திச் சின்னுள் கழிந்தபின் வீடு பெற்ருள். ”
—பரஞ்சோதி திருவிளையாடல்.

“ ஒள்ளிழை விழாவும் கற்பித்து உரியன சிறக்கச் செய்தாள். ”
—திருவாலவாயுடையார் திருவிளையாடல்.

என்பனவற்ருல் அறியலாம். பல வேறுபாடுகள் கொண்டு திகழும் இரு திருவிளையாடல்களும் ஒத்துக் கூறும் கருத்துக்களை நாம் மறுக்க வேண்டியதில்லையன்ரே ?

இவ்வாறு புதிய சிறப்புக்கள் தோன்றவே அப்போதிருந்த கந்தசாமிப் புலவர் உலாப் பாடிச் சிறப்பிக்க வேண்டிய அவசியமும் தோன்றியிருக்கும். இத்தகைய புதுமைத் திருப்பணிகளில் பங்கு கொண்டு மண்டபங்கள் கட்டுதல், திருக்குளத்துத் திருப்படி யமைத்தல் ஆகிய செயல் செய்தவர்களையும், திருவாபரணம் செய்து தந்தவர்களையும் தம் உலாவில் சிறப்பித்துப் பாட முற்பட்டார்.

திருப்பூவணத்தில் பொன்னனையாள் அடியார்களுக்கு உணவு வழங்கிய இடமாகக் கருதப்பெறும் பொன்னனையாள் மடமும், அவளுக் காக இறைவன் சித்தவுருவம் கொண்டுவந்து இரும்பைப் பொன் ஞக்கிய இடம் என்று கருதப்பெறும் பொன்னனையாள் மண்டபமும் ஆகிய இரண்டு கட்டிடங்கள் இருக்கின்றன.

கோரக்கசித்தருடைய ஆலயமொன்றும் உள்ளது.

இத்தலத்தில் எலும்பு, மலர் அல்லது சிலை ஆக ஆகும் என்பது ஐதீகம்.

இத்தலத்தைப்பற்றித் தமிழ், வடமொழி ஆகிய இரண்டிலும் புராணங்கள் உண்டு. இவையேயன்றிப் புட்பவனநாதர் வண்ணம் முதலியனவும் இத்தலச் சிறப்புணர்த்தும்.

தல விநாயகர்கள் : கற்பக விநாயகர், மணிமந்திர விநாயகர், ஒட்டுக்கல் வெள்ளை விநாயகர்.

இறைவன் திருப்பெயர்கள் : புட்பவனநாதர், பாற்கரபுரி ஈசர், பிதிர்மோட்சபுரீசர், பிரம்மபுரீசர், இரகசிய சிதம்பரேசர், திருப்பூவ ணேசர், அடைவார் வினை தீர்ப்பவர் என்பன. சன்னிதி கிழக்கு.

இறைவி திருப்பெயர்கள்: சுந்தரநாயகி, தடிதம்பை. சுவர்ண வல்லி, அன்னபூரணி, அழகியநாயகி, அழகியமின், மின்னனையாள், மின்னம்மை, மின்னாள் என்பன. இறைவி திருக்கோயில் இறைவரது திருக்கோயிலுக்கு வலப்பக்கத்தே உள்ளது.

நாயகர் திருப்பெயர்கள்: சௌந்தர நாயகர், அழகிய நாயகர், அழகுக்கு ஆரும் ஒவ்வாதவர் என்பனவாம். பொன்னனையாளின் நகத்தழும்பைப் பெற்றருளியவர்; அத்தழும்பைத் திருவுருவத்தில் காணலாம்.

தலத்தின் திருப்பெயர்கள்: புட்பவனம், புட்பவனகாசி, புட்பபுரம், பாற்கரபுரி, பிதிர்மோட்சபுரி, பிரமபுரி, இரகசிய சிதம்பரம், திருப் பூவணம், திருப்பூவணக்காசி என்பனவாம். பூவை என்றும் வழங் கும். தற்காலம் திருப்புவனம் என்னும் பெயராலேயே வழங்கப் பெறுகின்றது.

தீர்த்தங்கள்: வையை, மணிகர்ணிகை அல்லது மணிகுண்டம், தேவிகுண்டம், பாவநாசம், பிரமதீர்த்தம், இலக்குமி தீர்த்தம், மார்க்கண்டேய தீர்த்தம், நள தீர்த்தம், விட்டுணு தீர்த்தம், வசிட்ட தீர்த்தம் முதலியனவாம்.

தலவிருட்சம்: பலாமரம்.

வழிபட்டு நற்பேறுற்றோர்கள்: பிள்ளையார், உமையம்மையார், திருமால், திருமகள், பிரமதேவர், அகத்தியர், காளி, சூரியன், சந்தி ரன், திரணசனர், தருமஞ்ஞர், சுசோதி மன்னர், மார்க்கண்டேயர் வசிட்டர், இந்திரன், நளவேந்தன், சாகாசனர், பொன்னனையாள் முதலியோராவர்.

———

# திருப்பூவண நாதர் உலா

## காப்பு

காப்பு-காத்தல். பு-தொழிற்பெயர் விகுதி. இந்நூலாசிரிய ராகிய திருப்பூவணம் கந்தசாமிப் புலவர் இந்நூல் இனிது முடிதற் பொருட்டு விநாயகக் கடவுள்மேல் காப்புச் செய்யுள் அருளியிருக் கிறார்.

நேரிசை வெண்பா

சேவையுலாக் கொண்ட திருப்பூ வணர்மேல்வெண்
பாவையுலாம் பூவையுலாப் பாடவே—கோவைச்
சிரத்தந்தத் தந்திவண்ணன் செம்மலென வந்த
கரத்தந்தத் தந்திவண்ணன் காப்பு.

### சொல்லுரை

சே ஐ உலா கொண்ட திருப்பூவணர்மேல் - காளையை ஊர்தியாகக் கொண்டு உலவிவரும் தொழிலை மேற்கொண்ட திருப்பூவணம் என்ற ஊரின் தலைவராம் திருப்பூவணர் மேல், வெண்பாவை உலாம்— கலைமகள் விரும்பி உலவும், பூவை உலா - திருப்பூவண நாதர் உலா வை, பாட - பாடுவதற்கு, சிரம் தந்தத்து கோவை அந்திவண்ணன் - தலைகளோடு பன்றிக் கொம்பு முதலியவற்றையும் சேர்த்துக் கட்டப் பெற்ற மாலையை அணிந்தவனும் அந்திக் காலத்திய செவ் வானத்தை ஒத்த நிறமுடையவனும் ஆகிய சிவபெருமானுடைய, செம்மல் என வந்த - பிள்ளையெனத் தோன்றிய, கரத்து அந்தம் தந்தி - துதிக்கையினால் அழகுபெற்ற யானைமுகக் கடவுள், வள் நல் காப்பு - வள்ளல் தன்மை பொருந்திய நல்ல காவலாக அமைவர்.

### கருத்துரை

திருப்பூவணநாதர் மேல் உலாப் பாடுவதற்கு அந்தி வண்ணன் பிள்ளையாம் விநாயகக் கடவுளே வள்ளல் தன்மை பொருந்திய நல்ல காவல் ஆவர்.

### விளக்கவுரை

சே – காளை. அது இரண்டன் உருபு கொள்ளும்போது வகர உடம்படு மெய் பெற்றுச் 'சேவை' என நின்றது.

திருப்பூவணர்—திருப்பூவணம் என்னும் ஊரில் கோயில் கொண்டெழுந்தருளியிருக்கும் சிவன். சிவன் காளையை ஊர்தி

யாகக் கொண்டான் என்பது சைவசமய நூல்கள் மூலமாகவன்றிப் புதைபொருள் ஆராய்ச்சியாளரால் கண்டு வெளிப்படுத்திய மோ ஹஞ்சதாரோ-ஹாரப்பா நகர நாகரிகங்களாலும் அறியலாம்.

வெண்பாவை—கலைமகள். வெள்ளைக் கலையுடுத்தி, வெள்ளைப் பணிபூண்டு, வெள்ளைக் கமலத்தில் வீற்றிருப்பவளாதலின் அவ்வாறு குறிக்கப் பெற்ருள். கலைமகளும் விரும்பி வந்து மகிழ்ந்து உலவக்கூடிய முறையில் தமிழ் மணம் கமழும் தன்மையுடையதாய் இவ்வுலாநூல் அமைய வேண்டும் என்று விநாயகரை வணங்கினுர் ஆதலின், ''வெண்பாவை உலாம் பூவையுலா'' என்று குறித்தார். இதனுலேயே ''கலைமகள் விரும்பி உலவுவதற்குக் காரணமாகிய இப் பூவையுலா'' என்று உரை செய்யப் பெற்றது. மேலும், ஏனைய அரசர் முதலியவர்களின் உலாப்போல் அல்லாமல் இவ்வுலாவின் பாட்டுடைத் தலைவன் இறைவன் ஆதலின் கலைமகளும் உலாப் போவோரில் ஒருத்தியாக வருகிருள் என்ற கருத்தை உட்கொண்டு 'வெண்பாவை உலாம் பூவையுலா' என்று கூறினுரெனினும் அமையும். இனி, உலாப் பிரபந்தம் கலிவெண்பாவினுல் பாடப்பெற வேண்டிய ஒரு நெடும் பாட்டாதலின் வெண்பா என்னும் ஒருவகைப் பாட்டினைக் கருவியாகக் கொண்டு செய்யப்படும் பூவையுலா என்னும் கருத்துத் தோன்ற ''வெண்பாவை உலாம் பூவையுலா'' எனக் கூறினுர் எனினும் அமையும்.

பூவையுலா - திருப்பூவணநாதர் உலா. பூவை - திருப்பூவணம். திருப்பூவணர்மேல் உலாப் பாடுதற்கு என்று சொன்னுலே போதுமானது. அவ்வாறிருக்க மீண்டும் பூவையுலா என்று சொல்வது பொருட் சிறப்பில்லை என்று கருதிப் 'பூவையுலா' என்பதைப் பூ+ஐ+உலா எனப் பிரித்து, சிறப்பும், மேன்மையும் பொருந்திய உலா எனப் பொருள் கொள்வாரும் உளர். பாட்டின் இயல்பை நோக்குங்கால் பேராசிரியர் திரு. உ. வே. சா. அவர்களின் குறிப்பே சிறப்புறத் தோற்றுவதால் பூவையுலா என்பதற்குத் திருப்பூவண நாதர் உலா என்றே உரை செய்யப் பெற்றது.

சிவன் தலைகளையும் பன்றிக் கொம்புகள் முதலியவற்றையும் சேர்த்துக் கட்டப் பெற்ற மாலையை உடையவனுய்ச் செம்மை நிறத்தவன் ஆக இருப்பவனுதலின், 'சிரம் தந்தத்துக் கோவை அந்தி வண்ணன்' என்ருர். அந்தி - மாலை. மாலைக் காலத்துச் செவ்வானம் போன்ற சிவப்பு நிறத்தன் ஆதலின் அந்தி வண்ணன் எனப் பெற்ருன்.

செம்மல் - பிள்ளை. இறைவனுக்குப் பிள்ளைகள் இருவர் ஆயினும், பிள்ளையார் என்று குறித்தவுடனேயே விநாயகரே குறிக்கப் பெறுவர். இத்தகைய சிறப்புடைமை கருதியே 'செம்மலென வந்த' என்று

குறித்தார். கரத்து+அந்தம்+தந்தி - துதிக்கையினுல் அழகு பெற்ற யானைமுகக் கடவுள் என்பதாம். அந்தம் - அழகு. தந்தி - யானை; இங்கே யானை முகத்தையுடைய கடவுளைக் குறித்தது. சைவ சமயத்து ஏனைக் கடவுளரினும் 'ஓம்' என்ற பிரணவ மந்திர அமைப்பை உணர்த்துவது போன்ற முக அழகு பெற்றவர் விநாயகர் ஒருவரே. இத்தகைய உயர்வழகு பெறத் துதிக்கையே காரணமாக இருந்ததால் 'கரத்து அந்தத் தந்தி' என்ருர். இனிக் 'கரத்தந்தத் தந்தி' என்பதைக் கரம்+தந்தம்+தந்தி எனப் பிரித்து ஒரு கையில் தந்தத்தைக் கொண்டுள்ள யானைமுகக் கடவுள் என்றும் பொருள் கொள்ளலாம். வியாச முனிவர் பாரதம் புகன்ற காலத்தில் விநாயகர் மேருமலையை ஏடாகக் கொண்டு, தன் தந்தங்களுள் ஒன்றை ஒடித்து எழுத்தாணியாகக் கொண்டு எழுதினுர் என்ற வரலாறும், 'கூர் கொம் பெழுத்தாணி கொண்டு மகாபாரதம் குறிப்பெழுதி வைத்த பொருளே' என்ற முன்னேர் மொழியும் அதற்குச் சான்றுகள். இனி, கரம் - துதிக்கையையும், தந்தம் - கொம்புகளையும் உடைய, தந்தி வண்ணன் - யானை உருவத்தினன் எனப் பொருள் கொள்வதில் ஒரு பொருட் சிறப்பின்மையை நோக்கி யுணர்க.

வண்ணன் காப்பு என்பதை வள்+நல்+காப்பு எனப் பிரித்து உரை எழுதப் பெற்றது. வள்ளல் தன்மை பொருந்திய நல்ல காவலாக அமைவர் என்பது பொருளாம். தம்மை நினையாது தொடங்கிய தொழிலை இடையூறுண்டாக்கித் தடுப்பதும், நினைந்து தொடங்கிய தொழிலை இடையூறு நீக்கிக் காப்பதும் விநாயகரின் செயல் ஆதலின் அவரே வள்ளன்மையுடைய நல்ல காவலாக அமைவர் என்று குறிப்பிட்டார்.

## நூல்

பொன்பூத்த வுந்திப் பொலந்தா மரையாற்கும்
மன்பூத்த கஞ்ச மறையவற்கும் - மின்பூத்த 1

இந்திரற்குந் தேவர்க்கு மியாவர்க்கு மாதவர்க்கும்
சந்திரற்குஞ் சூரியர்க்குந் தம்பிரான் - அந்தமிலாப் 2

பல்கோடி யண்டம் படைப்போன் பரிப்போனப்
பல்கோடி யண்டம் பரந்தழிப்போன் - பல்கோடி 3

நாரணரு நான்முகரு நாளற் றழியினுந்தன்
காரண நேத்திரத்தாற் கண்டிருப்போன் - ஆரணஞ்சொல் 4

எல்லாப் பொருளு மிதுபொருளென் ருேர்பொருண்மேல்
இல்லாப் பொருளு மியானென்போன் - எல்லாநீ 5

## தலவிசேடம்

என்னனை யாரிடத்தி லென்றுமிரான் மின்னனையாம்
என்னனை யாரிடத்தி லேயிருப்போன் - முன்னர் 6

இமகிரிக் கெய்திமணந் தெம்பெரு மாட்டி
உமைதழுவச் சின்னு ளுறைந்து - சிமையக் 7

கயிலைமலைக் கெய்தியங்குக் காமுற் றுறைநாள்
குயிலை மலைக்கரசன் கொம்பைப் - பயில்வொரீஇ 8

ஈசன் வெகுளவுமை யேதென்ன நீதக்கன்
நாசமகம் பார்க்க நடந்தநாட் - பேசியவெம் 9

வார்த்தை யவமதித்தாய் மாதே யறிந்துசெயும்
ஆர்த்தகொடும் பாவமீ தாகையால் - தீர்த்தலரி 10

தெற்குரியை யல்லைநீ யேகுழியே கென்னவுமை
தற்குரிய நாதனிரு தாடுதிப்ப - நற்கருணை 11

வள்ள றிருவாய் மலர்ந்தருளிப் பாண்டிநாட்
டுள்ளநுகர் பூவணமென் றூர்தலமுண் - டொள்ளிழையே 12

அத்தலத்தி லல்லா லறிந்து செயும்பாவம்
எத்தலத்துந் தீராதங் கேகென்னக் - கைத்தலத்தால் 13

ஈசனைப் போற்றி யெழுந்தருளித் தென்றிசையில்
வாசமலி புட்ப வனத்தெய்தித் - தேசுவளர் 14

செம்பொற் றருவொன்று செங்கையால் வைத்துவளர்த்
தம்பொற் றருவி னடிநீழற் - கொம்பர் 15

தெருளார் பெருந்தவமுன் செய்ய வெளிப்பட்
டருளே திருமேனி யானோன் - பிரியா 16

ஒருபதம் வேண்டிமணி யோடைகண்ட வெய்யோற்
கிருபதங் காட்டியரு ளீந்தோன் - பெரியசத 17

பத்திர வேதனைமுன் பற்றி வருஞ்சாபம்
அத்திர மாக வருள்செய்தோன் - மெத்தத் 18

தருக்குதிர ணுசனனுர் தம்மருக்க ராக
அரக்க வுருவொழித்த வம்மான் - புரக்கும் 19

உருமே னிவந்தமா யோனைத் தவஞ்செய்
திருமேனி தீண்டவருள் செய்தோன் - கருமேனி 20

மாமுகவ ரர்ச்சிக்க வானோர்க்கு மேனோர்க்கும்
தாமுதன்மை யாகுந் தலையளித்தோன் - காமர் 21

செழுந்தமிழ் மாமுனிவன் றெண்கடனீ ரெல்லாம்
உழுந்தமிழ்நீ ராக்க வுவந்தோன் - தொழுந்தருமன் 22

காளிசுச் சோதிகன்மார்க் கண்டன் வசிட்டனிந்த்ரன்
வாளிமக ரன்பூசை வாஞ்சித்தோன் - தோளில் 23

தழைக்கும் படிகொணள சக்ரவர்த்தி முன்பட்
டுழைக்குங் கலிதீர்த் துவந்தோன் - மழைக்குள் 24

ஒருநாட் பகுந்துண்ட வுப்பிலாக் கீரைக்
கருமாப் பதவி யளித்தோன் - விரிநீர்ச்செம் 25

போதத் திருவுருவாம் பொன்னனை யாட்கிரத
வாதத் திருவுருவா வந்துதித்தோன் - கோதிலறப் 26

பைங்கூழ் வளர்த்த பசும்பாதி செங்கையான்
மங்கா தமைக்க வளர்ந்ததருத் - துங்கமார் 27

ஒருகத்தி லேதருவா யோருகத்தில் வில்லுவமாய்
ஒருகத்தில் வன்னியா யோருகத்திற் - சீருற்ற 28

பாரிற் கடவுட் பலாவாய்த் தழைக்கவதன்
வேரிற் கிளைத்தமுதல் விண்ணவர்கோன் - நேரா 29

## அடிமடக்கு

மதித்த கயிலை வரையா னடக்க
மதித்த கயிலை வரையான் - துதித்தார்க்கு 30

வாய்த்திடத்தா னீபவனத்தினு ஞன்மறைசொல்
வாய்த்திடத்தா னீப வனத்தினுன் - சாத்தியகை 31

நந்த னிறைவிருத்த ஞகத்தான் வீற்றிருந்தா
னந்த னிறைவிருத்த ஞகத்தான் - முந்தரங்க 32

ஊரவரம் பெற்றமா யூரத்தான் கண்டோன்மீ
தூரவரம் பெற்றமா யூரத்தான் - தேரிற் 33

படங்கொண்ட வல்குற் பராபரைமின் னம்மை
இடங்கொண் டுறைபூவ ணேசன் - நடங்கொண்டு 34

சேவிக்குந் தெய்வத் திருப்பங் குனித்திருநாள்
மேவப் பெருமகிழ்ச்சி மீதூரக் - காவற் 35

குருமணிவெள் ளேற்றுக் கொடியேற்றி வீதித்
திருவுலாப் போதுந் தினத்துள் - ஒருநாள் 36

சகங்காட்டுங் கங்கு றணிய வருணன்
முகங்காட்டச் சங்க முழங்கச் - சுகங்காட்டும் 37

பொன்மலை வல்லியுடன் பூண்ட திருத்துயினீத்
தென்மலை வில்லி யெழுந்தருளி - நன்மைப் 38

பருவயிர மாணிக்கப் பல்லக்கின் மீது
திருவனந்தற் றெய்வவுலாச் சென்று - பெரிதிருந்து 39

தேறத் தகும்பெரிய திவ்யா கமப்படியே
கூறத் தகும்பூசை கொண்டதற்பின் - மாறற்ற 40

நீணித் திலத்தரள நீல ப்ரவாளவச்ர
மாணிக்கச் சித்ரரத்ன மண்டபத்திற் - பேணிக்கொள் 41

தங்காத ஞயகியுந் தாமு மெழுந்தருளிச்
சிங்கா தனத்தவிசிற் சென்றிருந்து - நங்கூடல் 42

ஊரிற்குண் டோதரற்கா வூட்டத் தனிபிரிந்து
பாரிற்செல் வையைப் பகீரதிப்பெண் - பேர்வுற்ற 43

நீட்சிப் பிரிவொழிய நேடி மணப்பதெனக்
காட்சித் திருவபிடே கங்கொண்டு - மாட்சி 44

அலங்கார மாக்கொளத ளாடை யிரண்டும்
விலங்காடை யென்ன விலக்கி - நலங்காணும் 45

மன்போசன் முத்து வடுகநா தேந்த்ரனருள்
பொன்போலு மாடை புனைந்தருளித் - தன்போல் 46

திகழ்ந்திடுங்க ணன்றித் திருமுடியுந் திங்கள்
புகுஞ்செல்வங் கண்டு பொருஉன்போல் - மிகுங்கதிர்சூழ் 47

செம்பருதி தானுமொக்கச் சேர்ந்து சுடர்வதென
அம்பொன் மணிமகுட மாங்கமைத்து - விம்ப 48

நணிமகர மண்டலமா நன்முகத்திற் கேற்ப
மணிமகர குண்டலங்கள் வைத்துத் - திணிகொள் 49

## திருச்சாந்தணிதல்

மணிகண்ட னென்னும்பேர் மற்றிதனு லென்ன
அணிமணிக் கண்டிகண்டத் தார்த்துக் - கணிதிருச்சாந் 50

தாகம் பவளா சலமென் றவிர்சடைவாழ்
மேகம் படிந்த விதமென்ன - மோகம் 51

முதிர முதிர முழுதுடம்புந் தேவிக்
கெதிரி லவனீந்த தென்ன - மதிநுதலெம் 52

பொன்னனை யாட்களித்த போதிரத வாதத்து
மன்னுபுகை மேற்பரந்த வண்ணமென - மின்னுறவே 53

வெம்மைக் கலிதீர்த்த மேனு ணளன்றந்த
செம்மைப் பதக்கமுரஞ் சேர்வித்துத் - தம்மைத் 54

திருவரைக்கோ மாட்டி தினந்தழுவுங் கைபோல்
மரகதக்கே யூரம் வளைத்துப் - பருநன் 55

மணிக்கைவளை யென்ன வரும்பேர்க் கிசைய
மணிக்கை வளைகரத்தில் வைத்துத் - துணைக்கமலப் 56

பூவிற் கருகுதிக்கும் பூங்கதிர்போ லுமெல்லாம்
சேவிக்க ரத்னச் சிலம்பணிந்து - மேவுற்ற 57

தம்பொற் சடைக்கிடக்குந் தண்கார்மின் னிட்டனைய
செம்பொற் றிருவர சிகைசேர்த்தி - எம்பிரான் 58

மேன்மை வடிவமுடி மேற்பெண் டியானிக்கும்
பான்மையெனக் கண்ணுடி பார்த்தருளி - நான்மறைநூல் 59

ஓர்ந்தமறை யோர்செ யுபசார மீரெட்டிற்
சார்ந்ததிரு வாரா தனைகொண்டு - தேர்ந்தங் 60

கெழுதாச் சுருதி யெழுதுஞ் சுருதி
செழுமாத் திருச்செவியுட் சேர்த்திக் - குழுமித் 61

தருமோசை தேவர் சயசய வென்ன
வருமோசை மாமுனிவ ரோசை - இருவர் 62

நரம்போசை தெய்வநந்தி நம்பிரான் செங்கைப்
பிரம்போசை யோடும் பிறங்க - விரும்போசைச் 63

சீர்மணிப்பொற் கோயிற் றிருப்பேர் சுமந்தருள
வார்மணிப்பொற் றண்டின் மகிழ்ந்தேறி - நீர்மை 64

உணர்வரும்பஃ றேவ ரொதுங்க வடியார்
கணநெருங்கும் வாயில் கடந்து - மணநெருங்கும் 65

தென்ற னடந்தினிது சேவிப்பத் தென்பாண்டி
இன்றமிழ்நா டுய்ய வெழுந்தருளிக் - கொன்றையளி 66

பாடுஞ் சடைக்கணிந்த பாகீ ரதிக்கேறி
ஆடும் படிபறக்கு மன்னமென - மாடிரட்டு 67

நீடு கவரி நிரைதுள்ள மாமணித்தேர்
ஊடு கவுரி யுடனேறிச் - சூடியதன் 68

பிள்ளைமதி பார்க்கப் பெருமதிவந் தென்னநிலாக்
கொள்ள வுயர்வெண் குடையோங்க - விள்ளும் 69

கொடைக்கடவு ணல்லான் குழாம்புக்கு விண்ணின்
விடைக்கொடிநின் றுங்கு விளங்கச் - சுடர்க்கடவுள் 70

பன்னிருவ ரல்லர்மதி பார்த்திடினே யொன்றன்றால்
உன்னி னநேக ருளரென்ன - மின்னுகதிர்க் 71

கோலநிறை ரத்னக் குடையும் பருமுத்தின்
சீல மணிக்குடையுஞ் சேணிழற்ற - மேலை 72

வினைப்பகையார் வம்மின் வினைக்குரியார் போமின்
எனப்பீலி யாடி யிலங்கப் - பனைக்கைமுகன் 73

மூடிகத் தேரேறி முன்னடப்பச் சேய்கலவ
நாடகத்தே ரேறி நடந்தருள - ஊடலையும் 74

அன்னத்தே ரேறி யயன்மா றிருக்கருட
வன்னத்தே ரேறி மருங்குவரப் - பொன்றைத்த 75

ஆதித்த ராறிருவ ராறிரண் டேழ்புரவிச்
சோதிப்பொற் றேரேறிச் சூழ்போதக் - கோதற்ற 76

சீதக் கதிர்முத்தின் றேர்மீதிற் புட்பகத்தேர்
மீதிற் பெருந்தோழன் மேவிவரத் - தீதற்று 77

வந்தணையும் வெள்ளை மதவயி ராவதத்தேர்
இந்திர னேறி யினிதெய்தச் - செந்தழலோன் 78

நீதி மறலி நிருதிவரு ணன்பவனன்
ஆதியீ சான னடலூர்தி - மீதுவரக் 79

கூறும் பதினொருவர் கூறருஞ்சாத் தன்வடுகன்
ஏறும்பன் ஞாளி யினிற்போத - மாறின்றி 80

ஏழ்முனிவ ரெண்ம ரிருவ ரொருதனித்தம்
தாழ்வில் விமானந் தமிற்செல்லச் - சூழியக்கர் 81

கந்தருவர் சித்தர் கருடர் சுரருரகர்
வெந்திறற் கின்னரர்சே வித்துவரத் - தந்தைதாய் 82

வேணு புரக்கோலம் வீழி மிழலையிடைப்
பேணும் வகைபார்த்த பிள்ளையும் - பூணுமருள் 83

மெய்யாக் கயிலைமலை வீற்றிருந்த தன்கோலம்
ஐயாற்றிற் கண்டருளென் னப்பனும் - எய்யாமல் 84

ஆடிச் சிவக்கு மடியைத்தென் ஞரூரிற்
பாடிச் சிவப்பேற்றும் பர்வலனும் - கூடற்குள் 85

ஆசில் வழுதி யரசற்குச் சம்புவால்
வாசி வரவழைத்த மந்திரியும் - வீசுதிரை 86

சேர்க்குங் கடற்புவிக்குட் டெய்வச் சிவலோகம்
பார்க்க வரவழைத்த பார்த்திவனும் - நீர்க்குடிலப் 87

பொன்முடிக்கு ளன்றிப் புனையாத் திருக்கொன்றை
தன்முடிக்குள் வாங்கித் தரிப்போனும் - நன்மை 88

ஒருவாத தத்தமணி யூர்தியினுஞ் சேமத்
திருவாடு தண்டினுமேற் செல்லப் - பிரியாத 89

எப்பற்றுந் தீர்நாற்பத் தெண்ணு யிரவரெனும்
ஒப்பற்ற வேடத் துயர்ந்தோரும் - மெய்ப்புற்ற 90

சுந்தரன் பாடுதிருத் தொண்டத் தொகைக்குளொன்பான்
வந்த திருக்கூட்ட மாதவரும் - சந்ததமும் 91

நாவகத்து மார்பகத்து நற்றிருமுன் னூல்கிடக்கும்
பாவகத்த ராம்வேத பாரகரும் - பூவணவன் 92

தெய்வத் திருமேனி தீண்டத் தவம்பெற்ற
சைவப் பெருமறையோர் தங்கிளையும் - உய்விப்போன் 93

கண்ணகன் கோயிற் கயிங்கரியஞ் செய்வோரும்
பண்ணமர்பாட் டோதும் பரிசனமும் - எண்ணிறந்த 94

தீர்க்கத் தபோதனருஞ் சேவிப்போ ருஞ்சைவ
மார்க்கப் பதினெண் மடத்தாரும் - ஏற்கநிறை 95

அண்டர் பணியு மழகிய நாயகர்முன்
மண்டபஞ்ச பாபதி மண்டபமும் - கண்டருளிச் 96

சித்தங் களிகூர் திருக்கண்ண ராசேந்த்ர
உத்துங்க னுங்குலத்தி லுள்ளோரும் - அத்தற் 97

கமைக்குங் கொடிக்கம்ப மண்டபமு மம்பொன்
இமைக்கத் திருமுன் னியற்றி - உமைக்கு 98

முரசதிர் கோயின் முதற்பிர காரத்
திருமதிலு மண்டபமுஞ் செய்வித் - தொருதன் 99

வரிசைப்பேர் கொள்பூ வணலிங்க மென்னும்
உரிமைப் பேரான்சுற்றத் தோரும் - பெரியமணி 100

கன்னிகைத் தீர்த்தக் கரைமதிலு மண்டபமும்
மன்னுபுடை சுற்றுமாள் வாரியுடன் - முன்னிமுடித் 101

தூறுசீர்ப் புண்ணியநீர்க் குள்ளிறங்கி நானஞ்செய்
தேறுவார் சொர்க்கத் திருகால்வைத் - தேறப் 102

படிகட்டி யன்ன படிகட்டி நாளும்
வடிகட் டியதருமம் வாய்த்தோன் - முடிகட்டும் 103

துன்னு நதிமரபிற் ரோன்றீ சுரமூர்த்தி
என்னு மவனு மியல்கிளையு - மின்னும் 104

கருத்தொன்றி வந்துசிவ காரியங்கள் செய்யும்
திருத்தொண்டர் தங்க டிரளும் - நிருத்தஞ்செய் 105

செம்பொனிதழ்க் கும்பமுலைச் சேனயனப் பால்வயனத்
தம்பொனிறத் தேவ ரடியாரும் - பம்புதிரை 106

வெள்ள மெனத்திரண்டு வீதிக் கரைபுரள
எள்ளி லிருவ ரியாழ்முரலத் - துள்ளுகணப் 107

பானுகம்பன் சங்கம் பரிந்தூத வாணன்கார்
மானுங் குடமுழவம் வாசிப்ப - ஆனுயர் 108

மெய்யஞ் செழுத்தால் விரவுங் குழலோசை
ஐயன் செவிக்கின் னமுதூற்றப் - பொய்யன்பில் 109

சம்பந்தர் கைத்தாளந் தாக்கிட நீலகண்ட
எம்பெரும் பாண ரிசைகூட்டப் - பைம்பொன் 110

முருடு தடாரிதக்கை மொந்தை பதலை
இரலை திமிலைமுர சேங்கத் - திரையெறியும் 111

வையை நதித்தீரன் வந்தான் மணிகுண்டச்
செய்யநெடுந் தீர்த்தச் சிவன்வந்தான் - துய்ய 112

நலஞ்செய் நவக்கிரக நாட்களிவை நாளும்
வலஞ்செய்யு மூருடையான் வந்தான் - பொலஞ்செய்ய 113

பொன்பதும மானனைய பொன்னனை யாண்மனைக்குள்
அன்பமுது கொண்டவரன் வந்தான் - முன்பிரத 114

வாதஞ் செயுஞ்சித்தன் வந்தான் மதிக்குடைவேள்
போதஞ் செயும்போர் பொருன்வந்தான் - மோதுவிடம் 115

தன்கழுத்தில் வைத்துநெடுந் தாலிசெழுந் தாமரையின்
பெண்கழுத்தில் வைத்த பிரான்வந்தான் - எண்கழிக்கும் 116

துங்க வமரர் தொழும்பா வணங்கொடுக்கும்
செங்கம லச்சரணத் தேவந்தான் - எங்கள் 117

பழவினை வேரறுப்பான் வந்தான் பருவெண்
மழவிடை யேறுயர்த்தான் வந்தான் - அழகியமின் 118

மங்கைக்கு வாய்த்த மணவாளன் வந்தானென்
றங்கத் திருச்சின்ன மார்ப்பெடுப்பப் - பொங்கு 119

## பெண்கள் வருகை

நதிமாதர் கோக நகமாதர் தெய்வ
மதிமாதர் நீடுவசு மாதர் - கதிர்மாதர் 120

ஏழ்மாதர் வேலோ னிருமாத ரெண்டிசைக்கே
வாழ்மாத ரேழ்முனிவர் மாதர்கள் - சூழ்வானச் 121

சுந்தர மாதரெனத் தோன்றிரதி மாதருடன்
அந்தர மாத ரனைவர்களும் - சிந்தைமகிழ் 122

கோலங்காட் டித்தான் குனிக்குந் திருக்கூத்தை
ஆலங்காட் டிற்பார்க்கு மம்மையரும் - மூலங்காண் 123

சீரிசை யாடிநிழற் செம்ம றலைப்பயந்த
பேரிசை ஞானிப் பிராட்டியரும் - ஏரிசைதென் 124

சையத் தமிழ்நாட்டிற் சைவந் தலையெடுப்பச்
செய்விக்கும் பாண்டிமா தேவியரும் - உய்விக்கும் 125

அந்தண் வயற்பொலிதென் னூரூரி னம்பிக்கா
வந்துலகி லுற்பவித்த மங்கையரும் - செந்துவரின் 126

மின்றழைத்த வேணி விமலனைத் தன்வீட்டில்
அன்றழைத்த மெய்ப்பொ னனையாரும் - நின்றுருகி 127

ஆரணச் செம்பொ னடிபோற்ற வெம்பெருமான்
தோரண வீதிதனிற் றோன்றினனாற் - சேரமரர் 128

தட்ப வனப்பாரி சாத வனமழையாற்
புட்பவன மாம்பேர் புதுக்கினார் - பெட்புமின்னாள் 129

## குழாங்கள் வருணனை

போர்க்கைத் திருமழுவார் புட்ப வனப்புதுமை
பார்க்கத் திரண்டகிளிப் பண்பென்னப் - பேர்க்கரிய 130

நீலகண்டந் தம்போ னிமலன் படைத்திருந்த
கோலநின்று பார்க்குமயிற் கூட்டமெனப் - பாலுகந்த 131

ஆகத் தழகியமின் னம்மை யெழில்பார்க்க
மேகத்தை விட்டுவந்த மின்களெனை - வேகவொற்றை 132

மான்விட் டதனுல் வசஞ்செய்தா னென்றறவோர்
தான்விட்ட மான்கூட்டத் தன்மையென - வான்முட்ட 133

ஏங்கக் குயிலைமகத் தீட்டழித்தா னென்றுபழி
வாங்கக் குயிறிரண்டு வந்தவென - ஆங்கொரனம் 134

காணுப் பழிப்பகலக் கண்டறிவோ மென்றரன்முன்
சேணுட்டி னன்னமெலாஞ் சென்றவெனத் - தாணுட்டு 135

முன்றிலின் மாட முகப்பினின் மேடையிற்செய்
குன்றினிற் சாளரத்திற் கோபுரத்தில் - மன்றில் 136

தடத்தினின் மண்டபத்திற் சாரரங்கிற் றெற்றி
யிடத்தினில் வீதியினி லெய்தி - மடற்குவளைச் 137

## குழாங்களின் செயல்

சேயரிக்கண் மின்னுர்நந் தெய்வப் பலாப்பழத்திற்
கீயினத்தின் மொய்ப்பா ரிருமருங்கும் - நேயமிகப் 138

பூத்து மலர்கருணைப் புட்பவனப் பூந்தேனைப்
பார்த்திருகண் வண்டாற் பருகுவார் - தீர்த்தனணி 139

கங்கை தவத்தை வியப்பார் கதிரிமவான்
மங்கை தவத்தை வழுத்துவார் - தங்கள் 140

தவக்குறையை நோவார் தடந்தோளை நோக்கி
நிவக்கு முலைநோக்கி நிற்பார் - உவக்கு 141

மிகச்சின்ன நுண்ணிடையார் மெல்லியலாள் வைத்த
நகச்சின்ன நோக்கியுள நைவார் - பகைச்சின்னம் 142

ஆவதென் னென்றிவர்மே லவ்வேளெய் யானென்பார்
பாவங் கொடிதெம் பழியென்பார் - தேவரிவர் 143

வெள்ளிக் கிரிமுலையாய் மேவற் குபாயமிதென்
றள்ளித் திருநீ றலங்கரிப்பார் - உள்ளுறுபொன் 144

வாகார் பசலையிற்கை வன்சிலையாக் கொள்ளுமென
ஏகாசம் வீழ வெதிர்நிற்பார் - மாகாதல் 145

வெள்ளத்தை நீந்த விடையோனை நாவாய்கேட்
டுள்ளத்தி னுள்ளே யுருகுவார் - வள்ளல் 146

திருமேனிப் பாதியே தெள்ளமுத மற்றை
ஒருபாதி யும்விடமென் றோர்வார் - அரன்மேல் 147

விரிபூ மழைபோல் விரியாது தம்மேற்
சொரிபூ மழைநோக்கிச் சோர்வார் - அரிதாய 148

எம்மருந்தி னுற்சடைமே லிந்து குளிர்ந்திருப்ப
தம்மருந்தைச் சொல்லீ ரடிகளென்பார் - விம்மியமீன் 149

மேல்வலைவீ சிப்பிடித்தீர் மேனுளிந் நாள்விழிமீன்
மால்வலைவீ சிப்பிடிப்பீர் வந்தென்பார் - சால்கூடற் 150

செய்க்கரும்பைக் கல்லானை தின்னக் கொடுத்தீர்வேள்
கைக்கரும்பைத் தின்னுதோ காணென்பார் - மெய்க்கரும்பாம் 151

பட்பவள வாயர்முனி பன்னியர்வாழ் தாருவனம்
புட்பவன மாக்கினீர் போந்தென்பார் - புட்பவனம் 152

காணி யுமக்கோவிற் காமனுக்கோ சொல்லீர்கைப்
பாணிமழு வேந்துநீர் பார்த்தென்பார் - தூணிமத 153

னுரைத் தடுத்தே யடைவார் வினைதீர்த்த
பேரைப் புதுக்கீர் பிரானென்பார் - பாரித்த 154

தேரோட வோடப்பின் சென்றோடி யோடிக்கண்
நீரோட வோடநின்று நெட்டுயிர்ப்பார் - சீரோடும் 155

அவ்விரத வாதந்தா னன்றுசெய்தா ரின்றுசெய்தார்
இவ்விரத வாத மெமக்கென்பார் - கவ்வைக் 156

கிடைவார் கலையு மிழப்பா ருருகி
உடைவா ரிவரு ளொருத்தி - தடமலரோன் 157

## பேதை

அட்டதிக்கார் பெண்மை யழகு குடிபுகுத
விட்டதொரு மூர்த்தமெனு மென்பதை - கிட்டுநலை 158

கூறும் பொதிமலர்பூங் கொட்டை மதுமணமோர்
ஆறுந்தன் னுள்ளடக்கு மம்புயம் - சீறும் 159

விழிதாங்கு நாதனைவில் வேளிரதி பண்டைப்
பழிவாங்கப் பெற்றனைய பாவை - எழிருங்கு 160

சங்கை மருவாத் தரள மிரதிபதி
செங்கை மருவாச் சிறுகரும்பு - பொங்கநலம் 161

பூத்தறியாப் பூங்கொம்பு போகமறி யாப்பைங்கூழ்
கோத்தறி யாத குலரத்னம் - ஏத்த 162

விரித்தறியாத் தோகைமயில் வெண்பாலு நீரும்
பிரித்தறி யாதவன்னப் பிள்ளை - மரித்தறியா 163

மைதிகழு நீலகண்டன் வாழ்கின்ற புட்பவனம்
எய்திவிளை யாடா விளஞ்சுரும்பு - வைதிகநூல் 164

நேசன் றிருக்கரத்தி னின்றுந்தென் புட்பவன
வாசஞ் செயக்குதித்த மான்கன்று - வீசியவாட் 165

போரறி யாத பொலங்குழையாண் மன்மதனூற்
பேரறி யாத பிராயத்தாள் - வார்வீழ்த்த 166

கொங்கையைச்செப் பென்றுவைத்துக் கொண்டுவிளையாடமட
மங்கையரைக் கேட்டு வருந்துவாள் - தங்குமனைச் 167

செய்யசுவர்ச் சித்திரத்திற் றீட்டுகத லிக்கனியைக்
கையிற் கிளியருந்தக் காட்டுவாள் - ஐயமறப் 168

பூசைவரக் கண்டோடிப் போயோ வியப்புறவை
ஆசையுடன் கூட்டி லழைத்தயர்வாள் - வீசுமுன்றில் 169

வெள்ளைக் கதிர்நிலவை வெண்பா லெனப்பளிக்கு
வள்ளத் தினின்முகந்து வாய்வைப்பாள் - விள்ளும் 170

படிசே ரிருலிற் படுகோது நீக்கி
வடியாத தேன்மழலை வாயாள் - கடியாமுன் 171

பல்லைவிடப் போகாப் பணிநஞ்சு போலத்தன்
எல்லைவிடப் போகா விருவிழியாள் - தொல்லபர 172

பக்கக் கலைகள் பயப்பயப் போய்த்திரும்ப
ஒக்க நிறைந்தனைய வொண்ணகையாள் - மிக்கமுத்தி 173

நாட்டினுமா ரூர்விரும்பு நாவலூ ரன்மணம்போற்
கூட்டினுங் கூடாத கூந்தலாள் - வீட்டில் 174

நிறைந்த திருநெடுமா னீள்செவியி னுள்ளே
மறைந்த மதுகயிட வர்போல் - பெறும்பிரண 175

வத்தி லடங்கு மறைபோற் றதீசிசரீ
ரத்தி லடங்குவச்சி ராயுதம்போற் - குத்திரத்தின் 176

மேலொரு நாளொருத்தி மெய்யிற் கனல்வேந்தன்
சால வொளித்த தகைமைபோல் - வாலிதனை 177

எய்ய மறைந்த விராமன்போற் றேன்றிவர
மெய்யின் மறைந்த வியன்முலையாள் - துய்யநிறம் 178

துன்னு பளிக்குமுன்றிற் றேன்றுநிழற் பாவைதனை
இன்னுயிர்ப் பாங்கி யெனக்கொண்டு - தன்னகத்தில் 179

சிற்றி லிழைத்தயருஞ் சேயிழையா ளங்கவளை
மற்றொரு கைத்தாய் மடியிருத்தி - முற்று 180

அழகு தரக்கனிந்த வாரமுதச் செவ்வாய்
மழலை மொழிதிருந்தும் வண்ணம் - பழையமறைப் 181

பூவண மென்றுநிறை பூவணங்கோ யில்கொண்ட
தீவண மேனிச் சிவனென்றும் - காவணவும் 182

தெய்வப் பலாவென்றுந் தெய்வப் பலாவடியில்
சைவப் பொருளாந் தவமென்றும் - துய்யதிரை 183

வையைநதி யென்று மணிகர் ணிகையென்றும்
ஐய னிடம்பிரியா வம்மையென்றும் - மொய்கயிலைக் 184

குன்றி லிருந்தருளுங் கோனென்றுந் தில்லைமணி
மன்றி னடம்புரிபெம் மானென்றும் - மென்றுவர்வாய்ப் 185

பைங்கிளிக்கு மென்சொற் பயிற்றுதல் போற்பயிற்றி
அங்கவள்கேட் டுண்மகிழு மவ்வெல்லை - எங்குமொரு 186

தாய்வயிறு காணாத் தருமத் திருவுடம்பை
வேய்வயிறு கண்ட வியன்பதியும் - காவிரிவாய்ச் 187

சீருருவப் பேருருவச் செந்தீத் திருவுருவம்
நீருருவ மாக நிகழ்பதியும் - ஒருமையால் 188

ஆர்க்குந் தெரியா வருமைத் திருமேனி
சேர்க்குந் தழும்பிருந்த சீருரும் - ஏர்க்குமறை 189

தேற்றுமயன் காணாத் திருமுடியை வையைப்பே
ராற்றின் மணல்கண் டறிபதியும் - போற்றுநெடு 190

மாய னறியா மலர்ப்பாதம் பொன்னனையாள்
தூய மனையறியுந் தொன்னகரும் - மேயபிரான் 191

தேவர் நெருங்கத் திருத்தேர்ப் பவனிவரல்
தாவி றிருச்சின்னந் தானிசைப்பப் - பாவையன்னை 192

முன்செலப்பின் சென்றுகர முன்குவிக்கப் பின்குவித்து
நன்குதுதிக் கத்துதித்து நாடிய - பின்பேதை 193

கைத்தா யரைப்பார்த்துக் காண்டகு சோதிதரும்
இத்தேரி லார்சொல் லெனக்கேட்டாள் - அத்தேரில் 194

தேவி வளர்த்ததிருத் தெய்வப் பலாவடியில்
மேவிப் பழுத்த வியன்கனியென் - ருவலுற 195

மாது தனக்குரைப்ப மற்றதனைத் தாருமெனக்
காதலுடன் கேட்டழுது கண்பிசையப் - பேதைகேள் 196

இந்தக் கனியெவர்க்கு மெட்டா நறுங்கனிகாண்
முந்தப் பழமறையீ மொய்ப்பதுகாண் - சந்ததமும் 197

ஒன்ருய்ப் பலவா முருவிற் பொருந்தியெங்கும்
நன்ருய்ப் புறம்புமுள்ளு நண்ணுங்காண் - குன்ருத 198

பாவு மலையிற் பசுந்தே னுடன்கலந்தங்
கோவில் கருணைரச மூறுங்காண் - மேவுமன்பர் 199

உள்ளத் தினிக்குங்கா ணோர்பொன் னனையாட்குக்
கிள்ளப் பழுத்துக் கிடக்குங்காண் - விள்ளும் 200

பெரிய முகுந்தப் பிரமா தியர்க்கும்
அரிய பழங்கா ணணங்கே - பரிவகனி 201

என்னும் பொழுதி லிரதமேற் கொண்டிருக்கும்
பன்னுங் கருணைப் பழமகல - அன்னையரும் 202

அந்தக் கனிந மகத்தி லிருப்பதென
இந்தக் கனியையிற்கொண் டேகினர் - வந்தமதன் 203

என்றுஞ் சிறியார்க் கினியதுகாட் டாரெனத்தன்
வன்றிண் சிலையை மறைத்தகன்ருன் - துன்றும் 204

## பெதும்பை

கரையற்ற பெண்மைக் கவின்சிறிது காட்டும்
உருவப் பெதும்பை யொருத்தி - இருள்போய்ப் 205

புலர்ந்தும் புலராப் பொழுதிற் சிறிதே
அலர்ந்து மலரா வரும்பு - கலந்தன்பு 206

கூரவருந் தாய்சமைத்த கூட்டிற் கிடவாத
தேரு மிழாத சிறுகிள்ளை - சீரியதன் 207

கார்க்குஞ் செனவளர்த்த காக்வன் புண்மருண்டு
பார்க்கநிறங் காட்டும் பசியகுயில் - ஏர்க்க 208

நிறைந்து விடும்பாலு நீரும் பிரிக்க
அறிந்துமறி யாப்பருவ வன்னம் - உறைந்துதனி 209

மேவி யிருந்தினிமேல் வேண்டு முரைபார்க்கப்
பூவின்மத னூற்பாடம் போற்றுவாள் - பாவையுமை 210

ஆர்த்த சரவணத்தி லண்ணலுருக் கூட்டுதல்போல்
சேர்த்திகுளை கூட்டுந் திருக்குழலாள் - கூர்த்து 211

வியனீரிற் ருயுடன்போய் மென்மெல நீந்தும்
கயல்போற் புடைபெயர்ச்சி காட்டி - அயலவரைத் 212

தெட்டும் புரட்டுந் திருட்டும் புகுந்துகொலை
மட்டும் புகுதா வரிவிழியாள் - எட்டரிய 213

அண்டபகி ரண்ட மளக்கத் திருநெடுமால்
கொண்டகுறள் போன்முகங்கொள் கொங்கையாள் - திண்
டிறல்வேள் 214

கூடு மிளம்பருவக் கோலத்தி லேறிவினை
யாடுசிறு தேரனைய வல்குலாள் - தோடுருவும் 215

அத்திரக்கண் மங்கையரு மாடவருஞ் செய்கலவி
சித்திரத்தி னல்லாற் றெரிந்திடாள் - மெத்தவுரு 216

அன்னச் சிறுநடையா லாலிங் கனவனப்பால்
கன்னிக் கொலைசிறிது கைவந்தாள் - மின்னும் 217

சுதைநிலா முற்றத்துத் தோழியருந் தானும்
புதியகுட நீர்வார்த்துப் போற்றிப் - பதமறிந்து 218

தன்னைவளர்க் குஞ்செவிலித் தாய்போ னிதம்பேணி
மன்னி வளர்க்க வளர்முல்லை - அன்னதுதான் 219

தன்சிறுபற் போலரும்பு தான்படைப்பக் கண்டுசிறந்
தன்பு மலர வகமலர்ந்து - முன்பணியும் 220

தாதிய ரேவல்செயத் தாயர் களிதூங்க
மேதகு பல்லியம்வாய் விட்டார்ப்பப் - போதவிழும் 221

கோதை புதுவிழாக் கொண்டாடித் தன்பருவ
மாதருட னங்கண் மகிழ்போதின் - மோதுபனி 222

மொய்வந்த தென்னிமய முல்லைக் கொடிபடர்ந்த
செவ்வந்தி வண்ணச் சிவக்கொழுந்து - மெய்வரைவிற் 223

கோட்டுந் திருப்புயத்திற் கொன்றையொடுஞ் சொன்மாலை
பூட்டுந்தே வாரப் புலவர்களும் - நாட்டுபுகழ்த் 224

தென்னந் தமிழிற் றிருவா சகப்புலவன்
என்னும் பெரியவன்பி னெங்கோனும் - பொன்னலரும் 225

செந்தா திலங்குந் திருக்கொன்றை வேணியர்மேல்
அந்தாதி பாடியவென் னம்மையும் - நந்தேவர் 226

வீதி யுலாங்கயிலை வெற்பி லரங்கேற்றும்
ஆதி யுலாவுரைத்த வன்பனும் - சோதிமலைப் 227

பெண்பாகங் கொண்ட பிரான்மெய்ப் பதிதோறும்
வெண்பாவி னுற்புகழ்ந்த வேந்தனும் - பண்பாப் 228

பிரமனைமுன் னுட்சிரங்கொள் பெம்மானுக் கன்பாய்ப்
பரமனை யேபாடு வாரும் - மருதிடங்கொள் 229

பைம்மணிக் கோவைப் பணியா பரணர்மேல்
மும்மணிக் கோவைசொன்ன மூர்த்தியும் - தம்முருவாய் 23

வாழ்வாரும் வாழ்த்தி வருவாரு மெய்யுருகிச்
சூழ்வாரு மெம்மருங்குஞ் சூழ்ந்துவரத் - தாழ்வில்லாத் 231

தெய்வப் பலாவின் றிருநீழல் வீற்றிருப்போன்
சைவத் திருவீதி சாருதலும் - மையற் 232

செயல்சற் றறிவிழியாள் சேயிழையா ரோடும்
இயலுற் றெதிர்போ யிறைஞ்சிக் - கயிலைக் 233

கிரிக்கு ளமர்ந்தபிரான் கேசாதி பாதப்
பரப்பி னழகையெலாம் பார்த்தாள் - ஒருத்தி 234

தபோபலம் வாய்த்தபெருஞ் சாட்சிக் கிருந்த
கபோல நகக்குறியைக் கண்டாள் - சுபாவம் 235

தெரிந்தமட வீரிந்தத் தேவர் கபோலத்
திருந்தகுறி யென்னகுறி யென்றாள் - திருந்துகுயிற் 236

பிள்ளையே யெங்கடவப் பேறே வரிவளைக்கைக்
கிள்ளைநீ யின்னமிது கேட்டிலையோ - தெள்ளுகடல் 237

வண்ணன றி யாப்பதமில் வாயில் வரத்தவஞ்செய்
பெண்ணமுது கைபடைத்த பேறுகாண் - எண்ணில் 238

அருவுருவ மில்லா வரனைக் கருணைத்
திருவுருவஞ் செய்தாள் செயல்காண் - இருநயனம் 239

துள்ளிமுத்தங் கொள்ளமனந் தூயதிருப் பொன்னனையாள்
அள்ளிமுத்தங் கொண்டவடை யாளங்காண் - ஒள்ளிழையாய்

கண்டருணீ யென்னவுட்கொள் காதல் புறந்தெரியக்
கொண்ட புளகக் குறிப்பெய்த - வண்டூதக் 241

கேட்டு மலருங் கிளர்தா மரைமுகைபோல்
ஈட்டிய செவ்வி யெழில்படைத்தாள் - மீட்டிவளைப் 242

பார்த்ததும் பாரா ததுவுமாய்ப் பைங்கொன்றைத்
தீர்த்தனு மந்தத் தெருவகன்றான் - ஆர்த்த 243

சிறுநா ணுறுமடமின் செய்கைதெரி வில்வேள்
சிறுநா ணொலிதுலக்கிச் சென்றான் - மறுதெருவிற் 244

மங்கை

சட்டமிடும் வில்வே டளநா யகப்பட்டம்
கட்ட வளர்ந்த கவின்மங்கை - முட்டவசைந் 245

தார வளைந்துதுவண் டாடுமிடை யுங்கருத்தும்
பார மறிந்த பருவத்தாள் - வீரமிகும் 246

வாட்கைக் குமரருக்கு மையற் பிணிகொடுத்து
மீட்கத் தெரியும் விழியினாள் - வேட்கைதரும் 247

வானிற் சுரபியின்பால் வண்மையுடைக் கற்பகப்பூந்
தேனிற் கலந்தனைய செவ்விதழாள் - மேனிற்கும் 248

காருலவு தண்ணங் கடல்போ லகன்றுபரந்
தாரமுதங் கொப்புளிக்கு மல்குலாள் - சோர்வுதர 249

வன்போர் புரிபொருவின் மன்மதன்ற னூலினுக்குப்
பொன்போ லுரையறிந்து பூரிப்பாள் - என்பிறவி 250

எண்ணைப் பறித்தெறியு மீசன்போன் மாலானூர்
கண்ணைப் பறித்தெறியுங் காட்சியாள் - வண்ணத் 251

திருமுகத்தெய் வீகநிறச் செந்தா மரையும்
மருமுகக்குங் கூந்தனிற வண்டும் - கரியவிழி 252

ஆர்ந்தநீ லோற்பலமு மாம்பல்வாய்க் கிஞ்சுகமும்
சார்ந்த திருநிறத்துச் சண்பகமும் - பூந்தரள 253

மாலை முலைக்கோங்கும் வாய்ந்த நகைத்தளவும்
கோல மினிய கொழுங்குமிழும் - நூலினிடை 254

வல்லியுஞ் செங்கை மலர்க்காந் தளுஞ்சரண
பல்லவமு மற்றெவையும் பார்த்தருளி - நல்லவர்பாற் 255

போதுதிரு வுள்ளத்துப் புட்பவனக் கோயிலார்
ஈதுமொரு புட்பவன மென்றெண்ணக் - கோதகல 256

மேய திருவழகின் மெய்யு மவயவமும்
தூய நிறத்திற் றுலங்குவாள் - சாயலியல் 257

ஒத்த பருவத் துயிர்ப்பா வையர்சூழச்
சித்திரமா மண்டபத்திற் சென்றிருந்து - முத்தமுலை 258

விம்மநையு நுண்ணிடையாள் வெண்முத்த மிட்டிழைத்த
அம்மனை வாங்கியெறிந் தாடவவை - தம்ம 259

திருமுகச் செவ்விதிரு டத்திகழ்விண் டிங்கள்
வருவதுவும் போவதுவு மான - விருகை 260

வசன மலர்மாறி மாறிவிளை யாடும்
இனியகளி யன்னங்க ளென்னப் - புனைகுழற்குத் 261

தோற்ற முகிறிறையாத் தூமுத்தின் பந்துநிரை
போற்றிவர விட்ட புதுமையென - வேற்றதனைக் 262

கொள்ளா தெடுத்தெறியுங் கொள்கையென விண்முகில்பின்
தள்ளாது மீளத் தருவதென - வள்ளல்பால் 263

தூதுவிடு மன்னமெனத் தொல்லையனங் காணுதை
நாதனென மீளு நலமென்ன - மாதரசி 264

அம்மானை யேந்துகரத் தம்மானை யேபாடி
அம்மானை யாடு மளவிலே - பெம்மான்சூழ் 265

காராழித் தேர்முதுகு காட்டக் கதிர்வெய்யோன்
ஓராழித் தேரொதுங்கி யோட்டெடுப்பக் - கூராழி 266

பாதலக் கங்கை படியநெடுங் கூவிரம்போய்
மீதலக் கங்கை மிசைப்பொங்கப் - போதருதேர் 267

மேல்வெண் டுகிற்கொடிகள் விண்ணளஞ் சுரநதியின்
பால்வெண் டிரைபோற் படிந்தாடச் - சேல்கொண் 268

டுருக்குந் திருக்க ணுமையம்மை பாகத்
திருக்குந் திருப்பூவ ணேசன் - திருக்கொன்றை 269

மாலை யழகன் வரும்பவனி தானுரைக்கும்
வேலைதிரு வம்மனை கை விட்டெறிந்தாள் - சேலை 270

இடைக்கு ளிறுக்கி யெழுந்தாணற் றுயர்
பிடிக்கப் பிழைத்துப் பெயர்ந்தாள் - தடுக்கும் 271

செவிலியர்க்குந் தப்பித் தெருவிற் புகுந்தாள்
நவிலியற்கை வாசமலர் நங்கை - சிவபிரான் 272

தெய்வத் திருமார்புந் திண்டோளும் பொன்னனையாள்
கைவைக்குங் கோலக் கபோலமும் - சைவத் 273

திருநீறு சண்ணித்த தெய்வச்செம் மேனி
அருணீர்மை குன்று வழகும் - பெருவாழ்வு 274

பெற்றதுபோற் கண்டு பெரிதிறைஞ்சிக் கண்பனிப்ப
முற்றுமுடல் பூரிக்க முன்னின்று - நற்றவர்சேர் 275

விண்ணூர்ந்த வெள்ளிமலை மேலிருக்குஞ் செந்தேனுக்
கண்ணூந்து பார்த்து எயர்வுற்றுள் - தண்ணூர் 276

விதுக்குடி யேறுசடை வேதியன் மோகம்
புதுக்குடி யேறுநெஞ்சு பூண்டாள் - மதுக்குமிழி 277

செற்றிய வெண்டரளச் செங்கனிவாய் நெஞ்சத்துள்
உற்றதுயர் பாங்கியருக் கோதினள் - மற்றவரும் 278

பொன்னே கிளியே புதுமயிலே யன்னமே
மின்னே மதன விசயமே - அன்னைக் 279

கொடியார் தடுத்த கொடுஞ்சகுன மீதென்
றுடனே குயிலுக் குரைத்தார் - மடவரலும் 280

மற்றதுமெய் யென்று மயங்கி யறிவழிந்து
பொற்றொடி வீழப் புலம்புற்றுள் - முற்றும் 281

உரியார் கடைக்கணித்த தூங்குவட்கோ வேட்கோ
தெரியா தெனவயிர்க்கச் சென்றுர் - பொருவேள் 282

மதுவிருந்த மென்சாப வாளியின் வாய்க்குப்
புதுவிருந் தாயினள் பூவை - மதியார் 283

## மடந்தை

இனத்தைப் பொருவே ளிரதிமேல் வைத்த
மனத்தைத் திருப்பு மடந்தை - வனத்தவகில் 284

ஆவி முடித்திளைஞ ராவி முடிக்கவெனச்
சீவி முடித்த திருக்குழலாள் - பூவுலகில் 285

ஆற்றுவன் காமுகர்த மாயுணு ளெண்ணியெண்ணிக்
கூற்றுவன்பார்க் கப்பார்க்குங் கூர்விழியாள் - சாற்றரிய 286

கைசிவக்கக் காமவேள் கண்சிவக்க வாடவர்தம்
மெய்சிவக்க வாய்சிவக்கு மெல்லிதழாள் - மொய்முனிவர் 287

சாபம் பறக்கத் தவம்பறக்க மால்பிறக்கச்
சோபம் பெறப்பிறக்குஞ் சொல்லினுள் - கோபமதன் 288

போர்வளர நாணுசை போய்வளரப் பேராசை
வேர்வளர மேல்வளரும் வெம்முலையாள் - தேர்மலயக் 289

கால்வளைய வேள்சிலைவன் கைவளைய வாடவரை
மால்வளையப் போய்வளையும் வாணுசுப்பாள் - மேல்வருமன் 290

புள்ளூற வாசைகிடந் தூற்றூற வாயூற
வள்ளூ றமுதூறு மல்குலாள் - துள்ளுவிழி 291

சுற்றமனஞ் சுற்றமனந் தூயோர்க்கு மாசைதலை
சுற்றவுடை சுற்றுந் துடையினுள் - வெற்றிமதன் 292

தேர்நடக்க மூன்றுலகுஞ் செங்கோ னடக்கமிகும்
போர்நடக்கத் தானடக்கும் பொன்னடியாள் - சீர்நடக்கும் 293

தெண்ணிலா முற்றத்திற் சென்றிருப்ப வோர்விறலி
எண்ணிலா நேயத் தெதிர்நின்று - கண்ணிலான் 294

கண்பெற்ற தென்னமதன் கைகுவிக்குந் தெய்வமே
மண்பெற்ற செல்வ மடந்தையே - பெண்பெற்ற 295

பேறே யெனவாழ்த்தப் பெண்ணரசி கொண்டாடி
வீறு ரிசையின் விறலியே - ஆரூர் 296

திருக்கங்கை வார்சடையார் தென்பாண்டி நாட்டில்
இருக்குந் தலங்கள்பா டென்னப் - பெருக்கம் 297

திகழ்பூ வுலகிற் சிவலோக மென்னப்
பகர்கூட லாலவாய் பாடி - மிகமால் 298

பிறிக்கு மடியார் பிறவிக் கருவேர்
பறிக்கும் புனவாயில் பாடிக் - குறிக்குமால் 299

சங்கந் திகிரி தணந்துமழு மானெடுக்கும்
நங்கள்குற் றால நகர்பாடித் - தங்கொருபால் 300

பெண்மைத் திருக்கோலப் பெம்மா னினிதுறையும்
உண்மைத் திருவாப்ப னூர்பாடித் - திண்மையற 301

வாட்டும் பிறவி வழிமறித்து ஞானவழி
காட்டுந் திருவேட கம்பாடி - நாட்டில் 302

விரவுதிரு வெண்ணீற்றின் மெய்யன்பர் கூட்டம்
பரவுதிரு நெல்வேலி பாடிப் - புரவுமுனை 303

சேர்திருவி ராகவன்முன் சேனையுடன் கண்டுதொழச்
சார்திருவி ராமேச் சரம்பாடி - ஏர்தருபொற் 304

கொம்பரனு டானையொரு கூறிலங்குங் கோலத்து
நம்பரனு டானை நகர்பாடி - வம்பர் 305

புரங்குன்ற வாணகைசெய் பொன்மலைவிற் செல்வன்
பரங்குன்ற மாநகரம் பாடி - உரங்கொள் 306

விடைக்குஞ் சரமுகைப்பார் வீற்றிருக்கக் காணி
படைக்குந் திருச்சுழியல் பாடிக் - கிடைக்குமகத் 307

தாசையுடைச் சிற்சபையி லையன் றிருச்சிலம்பின்
ஓசையுடைத் திருப்புத் தூர்பாடித் - தேசுநலம் 308

தாங்குதிருத் தேர்வீதிச் சைவா கமம்வேதம்
ஓங்குதிருக் கானப்பே ரூர்பாடி - வாங்கும் 309

தனிக்கொடுங் குன்றமதன் றன்னை யெரித்தார்
பனிக்கொடுங் குன்றநகர் பாடித் - தொனிக்குமறைப் 310

பாவணம் பாடும் பரமன் றிருக்கோயிற்
பூவணம் பாடும் பொழுதிலே - நாவணங்கு 311

நாதன் புதல்வர் நவினுன் மறைபாடக்
கீதை விசைகின் னரர்பாடக் - கோதிலாச் 312

சூழிசை வீணைகொடு தும்புரு நாரதர்தாம்
ஏழிசை ராக வியல்பாட - வாழ்முனிவர் 313

பன்னியர் பல்லாண்டு பாடத் தருநாட்டுக்
கன்னியர் தேவகா னம்பாட - இன்னிசையால் 314

தெய்வப் புலமைத் திருமு தலிமூவர்
சைவச் சுருதித் தமிழ்பாட - உய்விக்கும் 315

சேணுலவு தெய்வத் திருநீல கண்டயாழ்ப்
பாணர் தமிழ்மாலைப் பண்பாடப் - பூணரக்கன் 316

கைந்நரம்பிற் பாடக் கருணைபுரி வள்ளலார்
மெய்ந்நிரம்பு மாமறுகின் மேவுதலும் - சொன்னிரம்பு 317

பண்ணு ரிசைவிறலி பாடுந் தலமெல்லாம்
கண்ணாரக் கண்ட களிகொண்டாள் - பெண்ணார் 318

அமுதமெதிர் சென்றுசெம்பொ னாலத்தி காட்டிக்
குமுத மலர்மலர்வு கொண்டாள் - விமலரே 319

என்று னுமக்கபய மென்றாள்கண் ணீர்ததும்ப
நின்றாணின் றாடனக்கு நீராளும் - குன்றாளும் 320

மின்னிறத்த கொன்றையந்தா ரீந்தனரோ வென்றயிர்க்கப்
பொன்னிறத்தை யீந்தரனார் போயினார் - பின்னொருத்தன் 321

போடுங் கணைநுழைந்த புண்வழியிற் றென்றலூ
டாடுந் துயருழந்தா ளாங்கொருத்தி - சேடன் 322

## அரிவை

பகைகொண்டு பண்டு விரித்த படம்போல்
அகல்கின்ற வல்கு லரிவை - உகிர்கொண்டு 323

முன்னொருகோ பத்தான் முடியரிந்த சங்கரற்குப்
பின்னொரு கோபம் பெயர்த்துவரின் - அன்னவரை 324

ஏவர் தடுப்பரென வெண்ணி யயன்பயந்து
தேவர்பெருமான் றிருவுள்ளம் - ஆவதற்கா 325

மின்னைத் திரட்டி மிகப்பிழிந்து சாம்புநதப்
பொன்னை யுருக்கிப் புடமிட்டுப் - பின்னையொன்றாய்க் 326

கூட்டிப் பிடித்துக் குழைத்துமதி நுட்பமெலாம்
காட்டித் தனித்திருந்து கைவருந்தப் - பூட்டியமு 327

தூறு பருவத் தொருபெண் ணுருவாக்கிக்
கூறு மழகைக் குடியேற்றி - வீறு 328

நலமுற்ற பெண்க ணலத்திற் றெரிந்து
திலமத் தனையெடுத்துச் செய்த - நிலைபெற்ற 329

பிள்ளைக் குதலைமொழிப் பெண்ணழகு மிவ்வழகுக்
கெள்ளத் தனையு மிலையென்ன - உள்ளத்திற் 330

கங்கை வெதும்பமலைக் கன்னி கலங்கமற்ற
நங்கையர் சங்கையிலா நாணெய்தத் - திங்களணி 331

முக்கணனூர் மேனி முழுவதுங் கண்வேண்டும்
இக்கன் னியைப்பார்க்க வென்றுரைக்க - அக்கணமே 332

வண்ண மலர்வேளும் வாகை தரிக்கவெங்கள்
கண்ணுதன்முன் விட்டனைய காட்சியாள் - எண்ணிறந்த 333

பாங்கியர் நிற்கவுயிர்ப் பாங்கி யுடனேறி
ஓங்கிய செய்குன்றி னுள்ளிருத்தி - ஆங்கவட்குத் 334

தென்னூர் செழுங்களபச் சேறணிந்தா டானணிந்த
பொன்னா பரணமெலாம் பூட்டினாள் - மின்னுடன் 335

பொற்பூர் சரீரத்தைப் புல்லி யகமகிழ்ந்தாள்
கற்பூர தாம்பூலங் கைக்கொடுத்தாள் - பிற்பாடென் 336

ஊனு ருயிர்நீயென் னுள்ளக் கருத்தெல்லாம்
மானே யறியாயோ மற்றென்ன - யானறியப் 337

போமோசொ லுன்கருத்தைப் பூவணங் கோயில்கொண்டார்
தாமே யறியத் தகுமென்ன - ஆமே 338

அவரறிவ துன்னைக்கொண் டல்லவோ வென்றுட்
கெவரறிவுந் தாமறியு மீசன் - அவிர்சடையான் 339

பின்னழகுக் கொப்புரையாப் பேரம் பலவாணன்
தன்னழகுக் காருமொவ்வாத் தாணுவீங் - குன்னழகு 340

பார்க்கவே நாளைப் பவனிவரு மென்றளவிற்
கார்க்குழல்கேட் டுள்ளங் களிப்பெய்தித் - தீர்த்தன்மேல் 341

ஆசை யினும்விரிவா வல்குல்பூ ரிப்பமுலை
வீசிய விண்ணை வெளியடைப்ப - மாசகலும் 342

கன்னி புளகமுறுங் காலையின் மாலைபெற
மன்னிய காமம் வளர்ந்தேற - அந்நேரம் 343

மாலைவரக் கண்டாண் மயங்கி மறலிநிறம்
சால முழுச்சிவப்போ தானென்றாள் - காலரவம் 344

போலவரக் கண்டு பொதியின் மலைப்புலியை
வாலுருவி விட்டான் மதனென்றாள் - பாலருவி 345

விட்டதுபோல் வெண்ணிலவு வீசுவதை வெண்ணெருப்பாச்
சுட்டநெருப் பேதென்று சொல்லினுள் - முட்டக் 346

குயில்வாய் விடமிருப்பக் கூற்றுதைத்தா ரென்னே
வியல்வேலை நஞ்சுண்ட தென்றுள் - செயன்மாரன் 347

தாழை மலரணியாத் தன்பகைவன் மேலெய்யா
தேழையெனை யெய்யுமதி யென்னென்றுள் - சூழ 348

உருகு மினத்தோ டுயிர்த்துயிர்த்து நெஞ்சம்
சருகுபட வாடித் தளர்ந்து - முருகிதழித் 349

தாமக் கடவுடிரு வஞ்செழுத்தே தான்புணையா
யாமக் கடனீந்தி யேறினுள் - சோமக் 350

கடவுட் சடாமவுலி காலைவரு மென்றென்
றடர்பொற் பணிதிருத்தி யாடை - இடையிறுக்கி 351

மின்னனையா ளில்கடந்து வீதிவந்தா ளவ்வளவிற்
பொன்னனை யாண்மனைக்குப் போயினேன் - தன்னனைய 352

நற்றேர் வரக்கண்டா ளுளவரு மென்றுரைத்த
குற்றேவற் பாங்கியைமுன் கும்பிட்டாள் - பிற்றேவர் 353

தேவனைக்கும் பிட்டா டிருத்தோ ணலங்கண்டாள்
காவிமைக்க ணுற்பருகிக் காமுற்றுள் - மேவுசெக்கர் 354

மாலைத் துயரொழிய வஞ்சி வலக்கண்ணும்
காலைக் கதிர்கண்டு கைதொழுதாள் - ஆலித்துப் 355

பையவருந் தென்றற் பகைதீர வெம்பெருமான்
செய்யதிரு வாபரணஞ் சேவித்தாள் - மையற் 356

கரணும் புயத்தானை யம்புலிப்போர் நீங்கச்
சரணும் புயத்தலரிற் றுழ்ந்தாள் - முரணுர் 357

வரிக்குயிலுக் கஞ்சுதொழின் மாற்றப் பெருமான்
திருக்கரத்தைக் கண்டுதரி சித்தாள் - கருப்புவிற்கை 358

பூணு மதனடத்தும் போர்தவிரப் புட்பவன
வாணனுதற் கண்கண்டு வாழ்த்தினுள் - பாண்மிழற்றும் 359

வண்டார் குழனெருநல் வந்தபகைக் குப்பகைதான்
தண்டா வரனுருவிற் றுன்கண்டாள் - கண்டோமென் 360

றுனந்த மூழ்கி யறிவுவரு முன்றிருத்தேர்
தானந்த வீதியொரீஇச் சார்ந்ததால் - ஞானந்தான் 361

## தெரிவை

தேற்றமிகப் பேரின்பந் தேடுமவ ராசைக்கு
மாற்றுமருந் தென்ன வருந்தெரிவை - சாற்றயன்மால் 362

கற்பத் திருணிலவோ காய்பகலோ வென்னமிகப்
பொற்புற் றிருள்பழுத்த பூங்குழலாள் - கற்பத்துச் 363

சீலக் கடல்குளமோ சிற்றோடை யோவெனநீள்
நீலப் பெரிய நெடுங்கண்ணாள் - கோலமுந்நீர்க் 364

கண்ணற் பவளங் கறுப்போ விளர்ப்போவென்
றெண்ணச் சிவந்த விதழினாள் - விண்ணமுதம் 365

காறி யுமிழ்புளிப்போ கைப்போவென் றிந்திரன்வாய்
ஊறிவரத் தித்திக்கு மொண்சொல்லாள் - வீறியபொன் 366

மேருச் சிறுபந்தோ மென்கழங்கோ வென்னமிகப்
பாரித் தெழுந்த பயோதரத்தாள் - சீரித்து 367

வாய்ந்த விழையுரலோ வன்றூண மோவெனப்போய்த்
தேய்ந்து சிறுத்தொழியுஞ் சிற்றிடையாள்-ஆய்ந்தவையம் 368

எல்லாமோர் கையளவோ வில்லையோ வென்னவிண்மேல்
செல்லா மணிநிதம்பத் தேரினாள் - வில்லேறும் 369

பஞ்சி பரலோ படுநெருஞ்சி யோவெனவுள்
அஞ்சிமுகஞ் சேக்கு மடியினாள் - விஞ்சுபுகழ் 370

சேர்க்குந்தென் பூவைத் திசைபோல யாவரையும்
பார்க்குந் தொறுமயக்கும் பண்பினாள் - கூர்க்கும் 371

அரிவைப் பருவத் தருட்பூவ ணேசன்
கருணைப் பவனிவரக் கண்ட - பரிசினால் 372

காலை யரும்பிப் பகலெல்லாம் போதாகி
மாலை மலரு மயலினாள் - சாலமணம் 373

தைவந்த காவிற் றனித்திருந்தோ ரோவநூல்
கைவந் தவனைக் கடிதழைத்து - மெய்வந்த 374

பூவண வாணனஞ்சொற் பொன்னனையாட் கன்றளித்த
மாவணக் காதை வகுத்தெழுதி - ஓவியத்திற் 375

காட்டு கெனநிறைபொன் கைகொடுப்ப வோர்படத்தில்
தீட்டி யவனவண்முன் சென்றிருந்து - தோட்டலர்மென் 376

போதரசு கையாற்செய் பொன்னனையாய் பொன்னனையாள்
மாதரசு வாழ்பொன் மனையிதுபார் - கோதை 377

புலரியிற் போந்து புனல்வையை கைமேல்
பலனுய்க்க மூழ்கும் படிபார் - நலனுய்க்கும் 378

கண்மணி பூண்டுமனங் காமுறுவெண் ணீறணிந்து
பெண்மணியன் னுளிருக்கும் பெற்றிபார் - உண்மைத் 379

தபத்தியானப் பெண்ணரசு தாழ்விலெழுத் தஞ்சும்
செபத்தியானஞ் செய்யுஞ் செயல்பார் - சுபத்தியானம் 380

செய்து சிவனைத் திருவர்ச் சனைமுடித்துக்
கைகுவித்து மாதிருக்குங் காட்சிபார் - பெய்வளையாள் 381

ஆயத் தொடும்பூவை யங்கணனைச் சேவிக்கக்
கோயிற் புகுந்துநின்ற கொள்கைபார் - ஏயத் 382

திருத்தஞ்சி லோதி திருமுன்பு சுத்த
நிருத்தஞ்செய் கோல நிலைபார் - நிருத்தம் 383

புரிந்தங்கு நின்றரிதிற் போந்து மனைக்குட்
பரிந்தங் கிருக்கும் படிபார் - அருந்த 384

முருந்து நகைமனைக்குண் மொய்த்தீண்டிச் செல்லும்
திருந்துதிருத் தொண்டர் திரள்பார் - வருந்தங்கண் 385

நாய னடியாரை நண்ணி யெதிரிறைஞ்சித்
தூய வமுதருத்துந் தோற்றம்பார் - மேயசிவன் 386

தன் [illegible]ருவம் பொன்னுருவ மாகச் சமைக்கவிளங்
கன்னி [illegible]மைத்த கருவுருப்பார் - அன்னம் 387

தொடுத்த கருத்தறிந்து சுந்தரப்பே ரண்ணல்
எடுத்தசித்த வேடத் தெழில்பார் - வடித்தவயில் 388

ஒத்தவிழி மாளிகைமு னுற்றொருபால் யோகபட்டச்
சித்தரிறு மாந்திருக்குஞ் செய்கைபார் - அத்தகைமை 389

கண்டெதிர் சென்றுமலர்க் கால்பணிந்தன் பென்னுமயல்
கொண்டெதிர் நிற்குமவள் கொள்கைபார் - வண்டுளரும் 390

நெய்ய குழல்வருந்து நின்கருத்தே தென்றெங்கள்
அய்யர் முறுவ லரும்புதல்பார் - தையலரி 391

காணாத் திருவுருவங் காணுங் கருத்தரவப்
பூணார்க் குரைக்கும் புதுமைபார் - நீணகைச் 392

சித்த ருரைப்படியத் தேமொழியில் விற்கரும்பொன்
அத்தனையு முன்புவைத்த வார்வம்பார் - வைத்ததன்மேல் 393

நீற்றைச் சிதறியயர் நேரிழைநீ யித்தையெரி
ஏற்றப் பசும்பொன்னு மென்பதுபார் - கோற்றொடியும் 394

கட்டுசடைச் சித்தர் கருதுமுறை யேயெரிபெய்
தட்டகரும் பொன்செம்பொ னானதுபார் - வட்டமுலைக் 395

கொம்பனாள் பூவணத்தெங் கோமானை யாணிதீர்
செம்பொனாற் கண்ட திருவுருப்பார் - விம்பவாய் 396

வள்ளிமுத்தங் கொள்ளு மகப்பெற்றோன் மேனியைக்கண்
டள்ளிமுத்தங் கொள்ளுமவ ளன்புபார் - வெள்ளிவெற்பன் 397

அன்புக் கிளகியவ ளங்கை நகரேகை
தன்பொற் கபோலந் தரித்ததுபார் - வன்பிற் 398

பிடித்த விரதப் பெறும்பேறு பாவைக்
கடுத்த விசேட மதுபார் - முடித்தகுழல் 399

மாதேயென் றோவநூல் வந்தோன் வகுத்துரைக்கும்
போதே விரகம் புறம்பொசியக் - காதார் 400

குழையாள் குழைந்தறிவு கொள்ளைபோய் நெஞ்சம்
தழையாமை நின்று சருகாம் - பொழுதில் 401

திளைத்தவுமை யம்மை திருக்கையால் வைத்து
வளர்த்த தருநிழலில் வாழ்வோன் - கிளைத்துமனப் 402

பத்தி மலரவந்நாட் பானு வழிபட்டோன்
அத்தி மலர வருள்செய்தோன் - முத்தி 403

மலரமலர் புட்ப வனத்தான் பவங்கள்
புலரவருந் தேவி புரத்தான் - குலவு 404

நளச்சக்ர வர்த்திகலி நாசஞ்செய் நாதன்
இளச்சக்ர வர்த்திபணி யெம்மான் - வளைச்சக்ர 405

நீளத்தான் காணாத நீளத்தான் றேவிபுகல்
தாளத்தான் சங்கார தாண்டவத்தான் - கேளொத்தான் 406

பூவணத்தெங் கோமான் பொலந்தேர் மறுகணைய
ஏவணக்கண் மின்கேட் டெதிர்சென்றாள் - தீவணத்தன் 407

தெய்வத் திருமேனிச் செஞ்சோ தியுமுகமும்
கைவைத்த வீரமழுக் காட்சியும் - உய்வித்த 408

காவித் திருநீல கண்டமுங் கொன்றையந்தார்
மேவிப் பரிமளிக்கு மெய்ப்புயமும் - தாவிப் 409

பொழியுங் கருணைப் புனிதநதி பொங்கி
வழியுந் திருக்கண் மலரு - மொழியுமறைப் 410

பண்மணக்குஞ் சீதப் பவளத் திருவாயும்
விண்மணக்குங் கங்கை விரிசடையும் - பெண்மணக்கும் 411

செம்பாதி யும்போய்த் தெரிசித்தாண் மார்பிருக்கும்
வம்பார் முலைத்தழும்பை வாழ்த்தினாள் - மொய்ம்பேறும் 412

சீல வளைத்தழும்பின் சீர்புகழ்ந்து பொன்னனையாள்
கோல நகக்குறியைக் கும்பிட்டாள் - நீலமிடற் 413

றெந்தையை நோக்கி யிதழித் திருப்புயத்தால்
வந்த விரகநோய் மாற்றுதற்குச் - சொந்த 414

மருந்தறியீர் வேளூர் வயித்தியரென் றுங்கே
இருந்தபரி சென்னோ வியம்பீர் - திருந்துகையில் 415

நிற்குந் தொகைவளையை நீர்கொண்டீர் கூடலிலே
விற்குந் தொழின்மறந்து விட்டீரோ - நற்கள் 416

வழியுமலர்க் கொன்றைதர மாட்டீர்க்கா ரூரின்
மொழியும் பெயரென் மொழியீர் - பழியஞ்சும் 417

ஆட றவிர வறுபத்து மூன்றேமுன்
கூட னகராடல் கூறுவீர் - ஓடுகண்ணீர் 418

ஊற்றை மறிக்க வுபாயமறி யீர்வையை
ஆற்றை மறிக்க வறிவீரோ - சாற்றீரென் 419

றன்னமுரைத் தாளர னாகத் தழகியமின்
தன்னை நினைத் தஞ்சினர் தார்கொடுக்கப் - பின்னைமதன் 420

காவி யொழிந்த கணைகிடக்குந் தூணியெனப்
பாவைகிடந் தாணடந்தான் பைந்தாரான் - பூவை 421

உரிய வுடற்குயிருண் டென்ன வுயிர்த்து
நிரைவளையார்க் கையத்தை நீத்தாள் - தெரிவைக் 422

## பேரிளம்பெண்

கடுத்த பருவ மலர்வே ளிரதி
எடுத்தனைய ளாம்பே ரிளம்பெண் - தொடுத்தமதன் 423

நீலவம் பொன்ருெழிய நின்றநா லம்புசெயும்
சீலமுங்கண் டெவ்வெவர்க்குஞ் செப்புவாள் - சால 424

வினைநீடு மன்மதவேள் வேதாந்த சாரத்
தனுபோக முற்று மறிந்தாள் - தனிமூவர் 425

கானத் திருமுறையைக் கைவிடாள் பண்ணேடும்
பானற் பெருவிழியாள் பாடுவாள் - ஆனையுரித் 426

தாரைச் சயிக்கவிரண் டானை தலைகீழாப்
பாரப் பெருந்தவஞ்செய் பான்மைபோல் - வாரென் 427

முகபடா நீக்கி முனிந்தா டவர்மேல்
இகலிக் கிரிவீ ழிபம்போல் - அகமகிழ 428

உந்தி மடுவென் றுரைக்கு மதுபார்க்க
வந்த துணைச்சக்ர வாளம்போல் - முந்தத் 429

திருப்பனந் தாளிலிங்கந் திண்கலைச்சிக் காக
விருப்பினுடன் சாய்ந்த விதம்போல் - பருப்பதம்போல் 430

இன்னம் பருக்கி லிடைதாங்குந் தாங்காதென்
றுன்னி யதுபார்க்க வுற்றதுபோல் - தன்னைவிழை 431

மாந்தருக்கு மோக மகோததியைக் கையணைத்து
நீந்தக் கவிழ்த்தகுட நீர்மைபோல் - நேர்ந்திட் 432

டெதிர்த்துவரு வாரையெல்லா மியாஞ்சயித்தோ மென்ன
மதித்தலுத்துச் சாய்ந்த வகைபோல் - கதித்திடத்திண் 433

கோல்பிடித்த செங்கைக் குடைபோற் றலைகீழா
மால்பிடிக்க நின்ற மணிவரைபோல் - சால்பகல 434

மட்டுண் டடங்காது வம்பிற் றலையிட்டு
முட்டுண்டு பின்குனியு மூர்க்கர்போல் - கிட்டும் 435

வளநீல ரோம மணிக்கயிறு பூட்டி
இளநீ ரிறக்கு மியல்போல் - இளைஞோரால் 436

ஆடி விசையோய்ந் தயர்ந்துவீழ் பம்பரம்போல்
கோடி முகங்கவிழ்ந்த கொங்கையாள் - நீடுலகில் 437

திக்கு விசயஞ் செலுத்தி மதனுவம்
புக்க விசிகம் புரைகண்ணாள் - மிக்குலகம் 438

நாடுந் திருமா னடனத்தி னுற்றுகைப்புண்
டாடும் படம்போலு மல்குலாள் - கூடிய 439

மேல்வீசு நள்ளிருளின் மேனிதெரி யாதுநிலாக்
கால்வீசும் போதுதெரி காருடல்போல் - நான்மாடச் 440

செய்யநகர் வேந்தாற் சிறையிற்சின் னுள்கிடந்து
மெய்யிளைத்து மீண்டுவரு மேகம்போல் - சைய 441

மடந்தை மணவாளன் வாழ்சேதுக் கைதை
குடைந்துவரு வண்டின் குழாம்போல் - மிடைந்துமலர் 442

மாலைமரு வாததினுன் மாமலர் பூத்துதிர்ந்த
சோலையது போலுஞ் சுரிகுழலாள் - சாலமைக்கு 443

மேவு மகத்தொழிய வெண்டரள மேலிலையென்
ருவலுறத் தோட்கணியா வாரத்தாள் - பூவணத்தெம் 444

புத்தமுத வாரியின்மேற் பொன்னனையாள் வைத்தபரி
வத்தனையும் வைக்கு மளவினுள் - மெத்தநிலை 445

ஓங்கு மணிமாடத் துள்ளோ ரரியணையில்
பூங்கவரி கால்வீசப் போயிருந்து - பாங்குறையும் 446

முற்பருவப் பெண்கட்கு மோகநூ லவ்வவர்தம்
சொற்பருவங் கண்டுகண்டு சொல்லுங்கால் - பொற்பிற் 447

சிலர்கேட்கப் பாடஞ் சிலர்கேட்க வர்த்தம்
சிலர்கேட்கச் சங்கை தெளிவித் - துலகேழின் 448

மன்மதனூல் கைவந்தோர் மற்றிலையென் ருசிரியத்
தன்மை செலுத்துந் தறுவாயில் - தொன்மை 449

அவனசை யாம லணுவசையா தென்னும்
புவனப் பழமொழிக்குப் புத்தேள் - உவமை 450

தெரிக்குந்தெய் வங்கள் சிகாமணி தோன்றி
மரிக்குந்தெய் வங்கண் மணாளன் - பரிக்கும் 451

அயனுக்கு மிந்திரற்கு மங்கேழ் முளரி
நயனற்குந் தேவர்க்கு நாயன் - பயனெக்கும் 452

வையைநதித் தீரன் மணிகர் ணிகைத்தீர்த்தன்
சைவநிறை புட்பவனத் தம்பிரான் - தெய்வமறை 453

யார்ப்பவனி யெங்கு மதிரக் கறங்குதிருத்
தேர்ப்பவனி வீதிவிரல் செப்பினுர் - போர்ப்பவனி 454

சென்றிளைஞ ராவி செகுத்துண்ணுங் கண்ணூர்க்கு
மன்றவுரை செய்நூன் மறந்தெழுந்தாள் - முன்றில் 455

கடந்தா டிருவீதி கண்டாடேர் முன்னே
நடந்தாள் சிவனை நயந்தாள் - தடந்தேரை 456

ஓடாமை வேண்டி யொருகோடி தண்டனிட்டாள்
நீடா தரங்கூர நேர்நின்ருள் - வீடாத 457

நாமக் கயிலைமலை நாதா புராதனு
காமப் பகையையடர் கண்ணுளா - வாமக் 458

கவுரி திருக்கணவா கங்கைமண வாளா
பவன கவனவிடைப் பாகா - உவமையில்பொற் 459

கச்சேற்ற கொம்மைமுலைக் கன்னியரை வீதியிலே
பிச்சேற்ற வந்த பெருமானே - மைச்சேற்கட் 460

பாவணங் கோசைபயில் பாண்டிப் பழம்பதியாம்
பூவணங் கோயில்கொண்ட புண்ணியா - மேவநினைந் 461

தாளுத மாலை யடுத்துமட லேந்தினேன்
தேனுர்வா யூறநின்று தேங்கினேன் - ஆளுத 462

வண்டு விழக்கண்ணீர் மல்கினேன் பொன்பூத்தேன்
விண்டலர் தூற்ற வெளிநின்றேன் - மண்டி 463

வருமார்வத் துற்றேன் மலர்க்கொன்றை யானேன்
திருமார்வத் துற்றணையச் செய்துன் - அருடாராய் 464

என்றுளை நோக்கி யிடர்நோக்கிச் சம்பரனை
வென்றுனை யீசன் விலக்கினுன் - நின்ருளப் 465

பேதை முதலாகப் பேரிளம் பெணீருக
மாதர் பலர்மயங்க மாதேவன் - சோதிப் 466

படர்வார் சடையெம் பரம்பர னென்றும்
அடைவார் வினைதீர்க்கு மம்மான் - அடியார் 467

குழாமருச் சந்நிதியெங் கோமா னதிரும்
முழாவருக் கோயின் முதல்வன் - விழாவருத் 468

தேருடையா னெங்க டிருப்பூ வணக்காசி
ஊருடையான் போந்தா னுலா. 469

---

## நூல்

உலாவின் தொடக்கத்தில் உலாப்போகும் தலைவனின் குலப் பிறப்பு முறைமையைச் சில கண்ணிகளில் தொகுத்துக் கூறல் வேண்டும் என்பது உலாவின் இலக்கணம். ஆனால் இவ்வுலாவின் தலைவனாகிய திருப்பூவணத்து இறைவன் இன்னார் வழி வந்தவன் எனக் குலமுறை கூறிக் குறிக்கப்பட முடியாதவன் ஆதலின் இங்கே அவன் சிறப்புக்களை 1 முதல் 34 கண்ணிகளில் கூறுகின்றார்.

## இறைவன் சிறப்பு

முதல் 34 கண்ணிகளில் இறைவன் சிறப்புக் கூறப்படுகின்றது. இது இறைவனின் பொதுச் சிறப்பு என்றும், திருப்பூவணத்தில் நடைபெற்ற சில சிறந்த நிகழ்ச்சிகளின் மூலம் உண்டாகிய இறைவனின் தனிச் சிறப்பு என்றும் இருவகையாகப் பிரித்துக் கூறப்படுகின்றது.

### 1—5. இறைவன் பொதுச் சிறப்பு

1. பொன்பூத்த உந்திப் பொலந்தா மரையாற்கும்
மன்பூத்த கஞ்ச மறையவற்கும் - மின்பூத்த

2. இந்திரற்கும் தேவர்க்கும் யாவர்க்கும் மாதவர்க்கும்
சந்திரற்கும் சூரியர்க்கும் தம்பிரான் - அந்தம் இலாப்

3. பல்கோடி அண்டம் படைப்போன் பரிப்போன் அப்
பல்கோடி அண்டம் பரந்தழிப்போன் - பல்கோடி

4. நாரணரும் நான்முகரும் நாள்அற்று அழியினும்தன்
காரண நேத்திரத்தாற் கண்டிருப்போன் - ஆரணம்சொல்

5. எல்லாப் பொருளும் இதுபொருள்என்று ஓர்பொருள்மேல்
இல்லாப் பொருளும் யான் என்போன்.

*பொழிப்புரை*

பிரமனைத் தோற்றுவித்த அழகிய கொப்பூழ் ஆகிய தாமரையையுடைய திருமாலுக்கும், உலகத்தைப் படைத்தவனும் தாமரையை இடமாகக் கொண்டவனும் ஆகிய வேதமுதல்வனும் பிரமனுக்கும், ஒளியமைந்த வில்லினைத் தோற்றுவிக்கும் இந்திரனுக்கும், தேவர்க்கும், வானுலகத்துள்ள ஏனையோர்க்கும், சிறந்த தவசிகளுக்கும், சந்திரனுக்கும், சூரியர்களுக்கும் தலைவன்;

முடிவு இல்லாத பல கோடிக் கணக்கான அண்டங்களைத் தோற்றுவிப்பவன், காப்பாற்றுபவன், அவனால் தோற்றிக்

காப்பாற்றப்பட்ட அப் பல்கோடி அண்டங்களையும் ஒரு சமமாக ஒரே காலத்தில் அழிப்பவன்;

பல கோடிக் கணக்கான திருமால்களும், பிரமர்களும் வாழும் நாள் முடிந்து அழிந்தாலும் தன்னுடைய ஞானக் கண்ணினால் பார்த்துத் தான் அழியாது நிலைபெற்றிருப்பவன்;

வேதம் கூறுகின்ற பல முடிவுகளில் காணப்படும் எல்லாப் பரம்பொருளுமாக இருப்பவன் யானேதான் என்று சொல்லும் தன்மையுடையான்;

இதுதான் சிறந்த பொருள் என்று கூறப்படும் ஒப்பற்ற பொருள் ஒன்றைத் தனக்கு மேல் அமையப் பெருத உயர்ந்த பொருளுமாக இருப்பவன் யானேதான் என்று சொல்லும் தன்மையுடையான்;

### அருஞ்சொற் பொருள்

பொன் - பிரமன். பொலம் - அழகு. பரிப்போன் - காப்பவன். மின் - மின்னல், இந்திரவில். பரந்து அழிப்போன் - ஒருசேர அழிப்பவன். காரண நேத்திரம் - ஞானக்கண். ஆரணம் - வேதம்.

### விளக்கவுரை

பிரமன் பொன்னிறத்தான் ஆதலின் பொன்பூத்த என்பதற்குப் பிரமனைப் பெற்றெடுத்த என்று உரை செய்யப் பெற்றது. பொன் என்பதற்குப் பொலிவு, அழகு எனப் பொருள் கொண்டு பொலிவு பூத்துத் திகழ்கின்ற உந்தி என்றும் கூறலாம். ஏனைக் கடவுளரின் உந்தியினும் திருமாலின் உந்தி பொலிவு பெற்றுத் திகழக் காரணம் உலகத்தையே படைக்கும் பிரமனைத் தன்னிடத்தில் தோற்றுவித்த பெருமையுடைமையே. 'நான்முகனை நாராயணன் படைத்தான்' என்னுந் திருவாய்மொழி கருதத் தக்கது.

மறையவன் - பிரமன். மன்–உலகம். உலகத்தைத் தோற்றுவித் தவன் பிரமன் ஆதலின் மன்பூத்த மறையவன் என்றார். அவனுக்கு இடம் தாமரை. இனி மன்பூத்த என்பதைக் கஞ்சத்துக்கு அடை மொழியாகக் கொண்டு ஏனைய மலர்களைப் போலல்லாமல் எப்பொழு தும் மலர்ச்சியோடிருந்து மணம், தேன் முதலியன தரும் நிலைபேறு உடையது எனக்கொண்டு மன்பூத்த கஞ்சம் என்பதற்கு நிலை பெற்றுப் பூத்துக் குலுங்கும் தாமரை என்று பொருள் கொள்வாரு முளர். இது பிரமன் அமர்ந்துள்ள தாமரை மட்டுமேயன்றித் திரு மால், திருமகள் ஆகியோர் அமர்ந்துள்ள தாமரைகளுக்கும் அமைந்த பொதுச் சிறப்பாதலின் பிரமன் அமர்ந்துள்ள தாமரைக் குத் தனிச் சிறப்பாகாமை அறிக.

சூரியர் பலராதலின் சூரியர்க்கும் எனப் பன்மையால் குறித்தார். அந்தம் இலா - என்பது ''முடிவு இல்லாத'' என்னும் பொரு

ளுடையது. அண்டங்களுக்கு முடிவு - அழிவு உண்டு. ஆனால் அண்டங்களின் எண்ணிக்கை முடிவு இல்லாதது என்று முடிவு கொள்க. அண்டங்களாகிய உலகங்களைப் படைத்துக் காத்து அழிப்பவன் இறைவன் என்பதை,

> உலகம் யாவையும் தாமுள வாக்கலும்
> நிலைபெறுத்தலும் நீக்கலும் நீங்கலா
> அலகிலா விளையாட்டுடை யாரவர்
> தலைவர் அன்னவர்க்கே சரண் நாங்களே.

என்ற கம்பர் வாக்குடன் ஒத்திட்டுக் காண்க.

பரந்தழிப்போன் என்பதற்கு "ஒரு சேர ஒரே காலத்தில் அழிப்பவன்" என்பது பொருள். இனி கீரன்+தந்தை, ஆதன்+தந்தை என்பன கீரந்தை, ஆந்தை என நின்றாற் போலப் பரம்+தந்து+அழிப்போன் என்பது பரந்தழிப்போன் என நின்றது எனக் கொள்ளுதலும் ஆம். இதற்குப் பொருள் (பரம்—மேன்மை) மேன்மையைக் கொடுத்து அழிப்பவன் என்பதாம். பின் வரும் மேன்மைக்காகவே அழித்தல் தொழில் நடத்தப் பெறுகிறது என்பதும், அழிக்கும் தொழிலால் மேன்மையையும் இன்பத்தையும் கொடுக்கிற காரணத்தால் இறைவன் சங்கரன் எனக் குறிக்கப்படுகிறான் என்பதும் சாத்திர நூலிற் கண்ட உண்மைகள். ஒவ்வொரு அண்டங்களுக்கும் தனித்தனிப் பிரம விட்டுணுக்கள் உளராதலின் பல்கோடி நாரணரும் நான்முகரும் எனக் குறித்தார்.

காரண நேத்திரம் - ஞானக்கண். பல்கோடி அண்டங்களும் அழிந்தபோது இறைவன், சூரியன் சந்திரன் அக்கினி ஆகிய முக்கண்களையும் மூடி, யோக நிட்டையி லமர்ந்து கடவுள் தன்மை ஒன்றே நிலை பெறுமாறு ஞானக் கண்ணினால் உயிர்த் தொகுதிகளைக் காத்து வருகின்றான் ஆதலின் ஈண்டுக் குறிப்பிட்ட காரண நேத்திரம் என்பது ஞானக் கண்ணையே குறித்தது. 'காரண நேத்திரத்தால்' என ஒருமையாற் கூறியதும் இதனை வற்புறுத்தும். ஞானக் கண்ணின் துணையின்றி ஊனக் கண்கள் போன்ற சந்திர சூரியக் கண்களாற் பயனில்லையாதலின் ஞானக்கண் காரணமாகவும், ஊனக்கண் காரியமாகவும் உபசரிக்கும் முறைபற்றியும் ஞானக் கண்ணையே காரணநேத்திரம் என்றாரெனினும் அமையும். இறைவனுடைய முக்கண்களும், சூரியன், சந்திரன், நெருப்பு ஆகிய மூன்றும் அழியாதிருக்க வேண்டும் என்ற காரணத்தோடு அமைந்திருக்கின்றன ஆதலால் அவை மூன்றுமே காரணநேத்திரம் எனக் கொள்வார் உளர்.

ஆரணம் - வேதம். "ஆரணம் சொல் எல்லாப் பொருளும் யான் என்போன்; இதுபொருள் என்று ஓர் பொருள்

மேல் இல்லாப் பொருளும் யான் என்போன்'' என மாற்றிக் கொள்க. வேதங்கள் சிவம் உயர்ந்தது, சத்தியே உயர்ந்தது என்பன போன்ற பல முடிவுகளைக் கொண்டவை. அவ்வாறு வெவ்வேறு கடவுளர் கூறப்படினும் எல்லாக் கடவுளாகவும் இருக்கிறவன் இவ்விறைவனே யாதலின் ''ஆரணம் சொல் எல்லாப் பொருளும் யானென் போன்'' என்றார். இவ்வாறு எல்லாக் கடவுளர்களுக்கும் உயர்வு கூறப்பட்டாலும் முடிவாக நோக்கும்போது தனக்குமேல் உயர்ந்த பொருள் ஒன்றுமே இல்லாமல் தானே எல்லாப் பொருள்களுக்கும் மேலாக உயர்ந்த பொருளாய் விளங்குகிறான் ஆதலின் ''இதுபொருள் என்று ஓர் பொருள் மேல் இல்லாப் பொருளும் யான் என்போன் '' என்றார்.

## 5-16. திருப்பூவணத் தலச் சிறப்போடு கூடிய இறைவன் தனிச் சிறப்பு

5. ... ... ... ... ... ... ... எல்லாம் நீ

6. என்னை நையாரிடத்தில் என்றும்இரான் மின்னனையாம்
என்அனையார் இடத்திலே இருப்போன் - முன்னர்

7. இமகிரிக்கு எய்தி மணந்து எம்பெருமாட்டி
உமைதழுவச் சின்னாள் உறைந்து - சிமையக்

8. கயிலைமலைக்கு எய்தி அங்குக் காமுற்றுஉறைநாள்
குயிலை மலைக்கரசன் கொம்பைப் - பயில்வுஒரீஇ

9. ஈசன் வெகுளஉமை ஏதென்ன நீ தக்கன்
நாசமகம் பார்க்க நடந்தநாள் - பேசியஎம்

10. வார்த்தை அவமதித்தாய் மாதே அறிந்துசெயும்
ஆர்த்தகொடும் பாவம்ஈது ஆகையால் - தீர்த்தல்அரிது

11. எற்குஉரியை அல்லை ஏகுதிஏகென்ன உமை
தற்குரிய நாதன்இரு தாள்துதிப்ப - நற்கருணை

12. வள்ளல் திருவாய் மலர்ந்தருளிப் பாண்டிநாட்டு
உள்ளம்நுகர் பூவணம்என்று ஓர்தலம்உண்டு - ஒள்ளிழையே

13. அத்தலத்தில் அல்லால் அறிந்துசெயும் பாவம்
எத்தலத்தும் தீராதுஅங்கு ஏகுஎன்னக் - கைத்தலத்தால்

14. ஈசனைப் போற்றி எழுந்தருளித் தென்திசையில்
வாசமலி புட்ப வனத்துஎய்தித் - தேசுவளர்

15. செம்பொன் தருவொன்று செங்கையால் வைத்துவளர்த்து
அம்பொன் தருவின் அடிநீழல் – கொம்பர்

16. தெருளார் பெருந்தவம்முன் செய்ய வெளிப்பட்டு
அருளே திருமேனி ஆனோன்.

(1) உமையம்மை திருப்பூவண நாதனை வழிபட்டு அருள் பெற்ற வரலாறு ஆருவது கண்ணிமுதல் பதினாருவது கண்ணிவரை கூறப்படுகின்றது.

*பொழிப்புரை*

எல்லாம் நீயே என்று சொல்லி மனம் உருகாதவரிடத்தில் எப்பொழுதும் இருக்கமாட்டான். மின்னலை ஒத்தவர் ஆகிய என் தாய் ஆகும் திருப்பூவணத்து அம்பிகையின் இடப்பாகத்திலே என்றும் தங்கியிருப்பவன்.

முன்னொரு காலத்தே இறைவனாகிய சிவபெருமான், இமய மலையை அடைந்து, இமய மலையரசன் மகளாய்ப் பிறந்து தவம் செய்து வரும் பார்வதியம்மையை மணந்து, எம்பெருமாட்டியாகிய உமையம்மையார் (பார்வதியம்மையார்) தழுவுமாறு இமயமலை யிலேயே சிலநாட்கள் தங்கி யிருந்து, பின்னர் உயர்ந்த சிகரங்களைக் கொண்ட கயிலாய மலையை அடைந்து, அங்கு உமையாம் பார்வதி தேவியுடன் விருப்பம் கொண்டு தங்கியிருக்கும் காலத்தில் ஒருநாள், குயில்போலும் இனிய மொழியையுடைய பார்வதியம்மையாரை-இமய மலையரசனின் மகளாய்த் தோன்றிய பூங்கொம்பு போன்ற வளாகிய உமையம்மையைக் கூடிப் பழகுகின்ற செயலினின்றும் நீங்கிக் கோபிக்க, உமையம்மையார் 'தாங்கள் கோபிப்பதற்குக் காரணம் என்ன ?' என்று கேட்க, (அதற்கு இறைவன்) மாதே! நீ தக்கன் என்பவனால் செய்யப்பட்டதும் எல்லாத் தேவர்களுக்கும் தீமை விளையக் காரணமாக இருந்ததும் ஆகிய வேள்வியைப் பார்ப் பதற்காகச் சென்ற காலத்தில் செல்ல வேண்டாம் எனத் தடுத்துப் பேசிய என் சொல்லைக் கேட்டு நடக்காது இழிவு படுத்திவிட்டாய்; நீ இவ்வாறு அவமதித்துச் சென்ற செயல், குற்றம் என்று தெரிந்து செய்த மிகுந்த கொடுமையாகிய பாவச் செயல் ஆகும்; ஆகையால் நீ செய்த அப்பாவச் செயலால் விளையும் தீய பயனை என்னால் நீக்க முடியாது. மேலும் நீ இச்செயலால் எனக்கு உரிமையல்லாதவ ளாகவும் ஆய்விட்டாய். எனவே நீ செல்லவேண்டிய இடமாகிய மண்ணுலகை நோக்கிச் செல்லுவாயாக என்று கூற,

இவற்றைக் கேட்ட பார்வதி, தனக்கு உரிய தலைவனாகிய இறைவனின் இரண்டு திருவடிகளிலும் விழுந்து வணங்க, நல்ல கருணையையே வடிவமாகக் கொண்டிருக்கிற வள்ளல் தன்மை வாய்ந்த இறைவன் திருவாய் மலர்ந்து கூறத் திருவுள்ளம் கொண்டு, ஒளிபொருந்திய அணிகலன்களை அணிந்த பார்வதியே ! பாண்டிய நாட்டிலே உள்ளம் விரும்பக்கூடிய திருப்பூவணம் என்று சொல்லப் படும் ஒப்பற்ற தலம் இருக்கிறது. தெரிந்து செய்யும் பாவம் அந்தத்

தலத்துக்குச் சென்று தவம் செய்தால் நீங்குமேயன்றி, வேறு எந்தத் தலத்தில் சென்று தவம் செய்யினும் நீங்காது ஆதலினால் அங்கே செல்வாயாக எனக் கூற,

(பார்வதி) தம் கைகளினால் இறைவனைக் (கும்பிட்டுத்) துதித்துப் புறப்பட்டுத் தெற்குத் திசையில் உள்ளதாகிய மணம் மிகுந்த 'புட்பவனம்' என்ற பெயருடைய திருப்பூவண நகரத்தை அடைந்து அங்கே ஒளி மிகுகின்ற செம்பொன் மயமாகிய பாரிசாத மரம் ஒன்றைத் தம்முடைய செம்மை வாய்ந்த கையினாலேயே வைத்து வளரச்செய்து, அழகிய அந்தப் பாரிசாதத் தருவின் அடிப்பாகத்தில் உள்ள நிழலிலே தெளிவு பொருந்திய சிறந்த தவத்தைச் செய்த காரணத்தால் எம் பெருமாட்டியின் முன்னிலையில் வெளிப்பட்டுத் தோன்றி அருள் செய்தான்.

அருள் செய்தபின், உமையம்மையாரின் தவத்திற்கு இரங்கி உயர்நிலை கொடுப்பதற்குக் காரணமாக இருந்த அவ்வருளையே ஏனையோரும் வணங்கி உய்தற்பொருட்டு உருவமாக அமைத்துக் கொண்டு வீற்றிருப்பவன்.

### அருஞ்சொற் பொருள்

இம்ம் - பனி, கிரி - மலை, இமகிரி - பனிமலை; இமய மலை. சிமையம் - உச்சி; சிகரம். பயில்வு - கூடிப் பழகுதல். ஒரீஇ - நீங்கி. மகம் - யாகம். 'மாதர் காதல்' என்ற முறைபற்றிக் காதலை விளக்கும் பெண்களுக்கு மாது என்பது சிறப்புப் பெயராக நின்றது. ஏகுழியேகு என்பது ஏகு—உழி—ஏகு என்று பிரித்து, செல்லவேண்டிய இடத்துக்குச் செல் என்று பொருள்பட்டது. நுகர் - விரும்பத்தகும். கைத்தலம் - கை. தேசு - ஒளி.

### விளக்கவுரை

'என்னனை யாரிடத்தில்' என இருமுறை வந்துள்ளவற்றில் முன்னதை என்ன+நையாரிடத்தில் என்றும், பின்னதை என்+அனையார்+இடத்தில் என்றும் பிரித்துக் கொள்க. எல்லாம் நீயே என்று கூறி உருகாதவர் என்றும், என் அன்னையாராகிய திருப்பூவணத்து இறைவியின் இடதுபாகத்திலே என்றும் இருப்பவன் என்றும் உரை கொள்க. என்+நல்+நையார் என்று இலக்கண வரம்பை ஒட்டிப் பிரித்தவிடத்து 'எல்லாம் நீயே என்று கூறி நன்றாக உருகாதவர்' எனப் பொருள் கொள்ளற் கிடமுண்டு. இது அடி மடக்குச் சொல்லணி.

எல்லாம் நீ என்ன நைதல் என்பது என் செயலாவது யாதொன்றுமில்லை இறைவா யாவும் நின் செயலே என எண்ணியிருத்தல். மின்னனையாம் என்றது இத்தலத்திலுள்ள அம்பிகையின் திருநாமங்களுள் ஒன்றாகிய 'மின்னனையாள்' என்பதைக் குறிப்பாலுணர்த்

தியது. இத்தலத்திலே இறைவியின்கோயிலுக்கு இடப்பக்கத்திலே இறைவன் கோயில் இருப்பதால் என் அணையார் இடத்திலே (இடது பக்கத்திலே) என்று குறித்தார். ''தனிக்குறில் முன் ஒற்று உயிர் வரின் இரட்டும்'' என்ற விதிப்படி என்+அணையார் என்பது என்னணையார்' என வந்தது.

9-10: கண்ணிகளில் அமைந்த வரலாறு: தக்கன் சிறந்த சிவ பக்தன். இறைவனை வேண்டி எம்பெருமாட்டியையே மகளாகப் பெறும் வரம் பெற்றனன். அவ்வாறே இறைவியும் தாட்சாயணி என்னும் பெயரோடு தோன்றி வளர்ந்து தவம்செய்து எம்பெருமானை மணாளனாக அடைந்தாள். இதற்கிடையில் செருக்கு மிகுந்த தக்கன் இறைவனை மதியாதவனானான். சிவ நிந்தனை செய்தனன். முடிவில் யாகம் ஒன்று செய்ய முற்பட்டான். யாகத்துக்குத் தலைவன் சிவனே என்று வேதங் கூறவும் அதன்படி நடவாது யாக வடிவினனாகிய நாராயணனையே யாகத் தலைவனாக வைத்து யாகத்தைத் தொடங்கிச் சிவனொழிந்த ஏனையோர்க்கு அழைப்பு விடுத்திருந்த னன். மணாளனை நிந்தை செய்தானென்றும் கருதாது தந்தை மேலுள்ள பாசத்தால் யாகத்துக்குச் செல்ல விரும்பினாள் உமையாகிய தாட்சாயணி; மறுத்தான் இறைவன்; கேளாது தடுத்துச் சென்றாள் தாட்சாயணி. யாகத்தின் முடிவில் இறைவனின் அம்சமாகிய வீரபத்திரர் தோன்றி யாகத்தை அழித்து, அங்குச் சென்றிருந்த அனைத்துத் தேவர்களுக்கும் தக்க தண்டனை கொடுத்தார். தக்கனும் தலை வெட்டப்பட்டான். பின்னர் ஆட்டுத்தலை வைத்துப் பொருத்தப் பெற்றான். தாட்சாயணி காப்பாற்றப் பெற்றாள். பின்னர் இப் பெயர் மறையவே இமயமலையரசன் மகளாய்ப் பிறந்து இறைவனையடைந்து பார்வதி யெனப் பெயர் பெற்றாள் என்பது புராணத் துட் கண்டது. இந்நிகழ்ச்சியையே அடிப்படையாகக் கொண்டு ஆசிரியர் 9, 10-ஆவது கண்ணிகளை அமைத்தார்.

வேள்வி செய்வது உயர் செயலே யாயினும் தக்கன் செய்த வேள்வியின் முடிவு அழிவை உண்டாக்கியது ஆதலின் அந்த யாகம் நாசமகம் எனப்பட்டது. அறியாமற் செய்யும் பாவத்தினும் அறிந்து செயும் பாவம் மிகக் குற்றமாகக் கருதப்படுவது; அதைத் தீர்ப்பதற் காகச்செய்யப்படும் கழுவாய்ச்செயல் (பிராயச்சித்தம்-நீக்கச்செயல்) வேறு இல்லாதது. அத்தகைய பாவத்தையும் தீர்க்கும் ஆற்றலுடையது திருப்பூவணம் என அத்தலத்தின் சிறப்பைத் திறம்படக் கூறியுள்ளார். உடல் நுகர்வதற் கேற்ற முறையில் பெரும் பொருளால் விரும்பத் தக்கதாக இருப்பதே யல்லாமல் உள்ளமும் தனித்திருந்து நுகர்தற்கேற்ற முறையில் அறிவுக்கும், இச்சைக்கும் அடிப்படையாகிய தெய்வத் தன்மை முதலிய பண்புகள் சிறந்திருக்கும் என்ற காரணத்தால் உள்ளம் நுகர் பூவணம் எனக் குறித்தார். இறைவ

ஞேடு கூடியிருந்து நினைவு அளவிலேயே உலகமெல்லாவற்றையும் உண்டாக்கும் வல்லமையுடைய உமையம்மையும் தானே-தன்கையி லுலேயே பாரிசாதத் தருவை உண்டாக்கினுள் என்ற கருத் துண்டாகுமாறு செம்பொன் தருவொன்று செங்கையால் வைத்து வளர்த்து என்று கூறினுர். புட்பவனம் என்பது வடசொல். திருப் பூவணத்தைக் குறித்தது. செம்பொன் தரு-பாரிசாதம். இக்காலத் துப் பவள மல்லிகை என்று வழங்குப. தரு - மரம். மக்களுக்குக் கனி, நிழல், பூ முதலியவற்றைத் தருதலின் அப்பெயர் பெற்றது. காரணப் பெயர். எண்ணுன்கு அறங்களையும் உலகில் நிலைபெறு மாறு வளர்த்த கைகளாதலின் செங்கை எனப்பட்டது. 'மங்கை யராகப் பிறப்பதற்கே நல்ல மாதவம் செய்திட வேண்டுமம்மா, பங்கயக் கைநலம் பார்த்தலவோ இந்தப் பாரில் அறங்கள் வளருமம்மா' என்ற கவிமணியின் கருத்து ஈண்டு வைத்து உணரற்பாற்று. இறை வன் உருவம் கொள்ளுதற்குக் காரணம் யாவரும் வணங்கி முத்தி யெய்துதல் வேண்டும் என உயிர்களிடத்துக் கொண்ட அருளே என்பது சாத்திரக் கருத்தாதலின் அதை ஒட்டி அருளே திருமேனி ஆனேன் என்ருர். குயிலை, கொம்பை, கொம்பர் என்பன உவமை யாகு பெயர்களாக நின்றன. கொம்பர் என்பது குற்றுகரம் அர் ஈறு பெற்று வந்த போலி.

## 2. சூரியன் அருள் பெற்றது

16-17 —பிரியா

ஒருபதம் வேண்டி மணியோடை கண்ட வெய்யோற்கு
இருபதம் காட்டியரு ளீந்தோன்

### பொழிப்புரை

என்றும் தன்னைவிட்டு நீங்காதிருந்த ஒரு பதவியை விரும்பி, மணிகர்ணிகா தீர்த்தம் என்ற தீர்த்தத்தை உண்டாக்கிய சூரியனுக் குத் தன்னுடைய இரண்டு திருவடிகளையும் காட்டி அவனுக்கு அருள் செய்தவன் (பூவணத்து இறைவன்).

### அருஞ்சொற் பொருள்

ஒருபதம் - ஒருபதவி. மணியோடை-மணிகர்ணிகா தீர்த்தம். வெய்யோன்-சூரியன். இருபதம் - இரண்டு திருவடி.

### விளக்கவுரை

சூரியன் துர்வாச முனிவர் சாபத்தால் ஒளி குறைந்தான்; இருள் நீக்குதலாகிய தன் பதவியை இழந்தான். இழந்த பதவியை மீண்டும் பெறுதற்காகச் சூரியன் பல இடங்கள் திரிந்தும் பயன்

காணுது இறுதியில் திருப்பூவணம் வந்து ஒரு குளம் (மணிகர்ணிகா தீர்த்தம்) தோண்டி எம்பெருமானை வழிபட்டு இழந்த பதவியைப் பெற்றுன் என்பது பூவணத்துப் புராணத்துட் கண்டது.

இனி ஒருமுறை வேண்டியவனுக்கு உடனே பெரிய பதவியைக் கொடுத்தவன் என்றும், (ஒரு பதம் - ஒருமுறை. இருபதம் - பெரிய பதவி) துர்வாசர் சாபத்தால் நீங்கிய ஒரு பதவியை வேண்டிய வனுக்கு அப்பதவியைக் கொடுத்ததோடன்றி, என்றும் அழியாத முத்திப் பதவியையும் கொடுத்தான் என்றும் பொருள் கொள்ளும் முறையில் அமைந்துள்ளது.

## 3. பிரமன் அருள் பெற்றது

17-18 —பெரியசத

பத்திர வேதனைமுன் பற்றிவரும் சாபம்
அத்திரமாக அருள் செய்தோன்

### *பொழிப்புரை*

பெரியதும், நூறு இதழ்களையுடையதும் ஆகிய தாமரை மலர் மேல் வீற்றிருந்தருளும் வேதவல்லவனுகிய பிரமனை நீண்ட நாளாகத் தொடர்ந்து வரும் சாபம் ஒன்றினை நிலையில்லாமல் அழிந்து போமாறு செய்து அருள் நிலை வழங்கியவன்.

### *அருஞ்சொற் பொருள்*

சதபத்திர வேதன் - பிரமன். சதம் - நூறு, பத்திரம் - இதழ்களையுடையது; எனவே நூறு இதழ்களையுடைய தாமரைப்பூ. வேதன் - வேதத்தில் வல்லன்; தாமரையில் இருப்பவனும் வேதவல்லனும் ஆகிய பிரமன். அத்திரமாகச் செய்தல் - பொடி பொடியாகச் செய்தல் ; நிலையில்லாததாகச் செய்தல் ; அழித்தல்.

### *விளக்கவுரை*

பிரமன் சிவபெருமானுடைய சந்நிதியில் நாட்டியமாடிய ஊர்வசியை விரும்பிய குற்றத்திற்காக ‘ இனி நீ நம்முன் நிற்றற்கு உரியனல்லை ’ எனச் சாபமிடப் பட்டான். நீண்ட நாளாக யாவராலும் தீர்த்தற்கு இன்றித் தன்னைத் தொடர்ந்து வந்த இச் சாபத்தை அவன் திருப்பூவணம் வந்து புட்பவன நாதனை வணங்கித் தீர்த்துக் கொண்டான். ஸ்திரம் - நிலையானது. அஸ்திரம் - நிலையில்லாதது; அழிவது. எனவே சாபத்தை அழியுமாறு செய்து கொண்டான் என்பதாம். இனி, சாபம் - வில், அத்திரம் - அம்பு எனக் கொண்டு வில்லானது அம்பாக ஆகுமாறு அருள் செய்தோன் என்ற சொல் நயமும் அமைந்துள்ளது. அதில் அமைந்த குறிப்பு ஒரு கழியை வளைத்தால் வில்; நிமிர்த்தால் அம்பு எனக் கொண்டு சாபத்

தால் உள்ளம்சுருங்கி வளைவுற்று வில்லைப் போன்றிருந்தது. பூவணநாதன் உள்ளத்தின் வளைவை நிமிர்த்தி நல்லுள்ளமாக-அம்பாகச் செய்தான் என்பது.

## 4. திரணுசனனர் அருள் பெற்றது

18—19 —மெத்தத்

தருக்குதிர ணுசனனர் தம்மருக்க ராக
அரக்கவுரு வொழித்த வம்மான்.

*பொழிப்புரை*

மிகுந்த செருக்கு உடையவராகிய திரணுசனனர் என்ற முனிவருடைய சூரியனைப் போன்ற செம்மையான உடல் சாபத்தால் மாறுபடுத்தப்பட்டதால் உண்டாகிய அரக்க உருவத்தை முழுவதும்நீக்கியளித்த இறைவன்.

*அருஞ்சொற் பொருள்*

மெத்தத் தருக்கு - மிகுந்த செருக்கு. திரணுசனனர் - புல்லையே உணவாக உடைய ஒரு முனிவர். அருக்கர் ஆகம் - அருக்கராகம், (சூரியனைப் போன்ற செம்மையான உடல்.) அரக்க உரு - அசுர உருவம். (இராக்ஷச வடிவம்)

*விளக்கவுரை*

தலயாத்திரை செய்தற்காகப் புறப்பட்டு வந்த கௌதமி நதிக்கரை வாசியாகிய திரணுசனனர் திருப்பூவணம் வந்து இறைவியை மட்டும் வணங்கிச் செருக்குக் காரணமாக இறைவனை வணங்காது செல்ல, இறைவன், சூரியன் போன்று மிகச் சிவப்பாக அழகோடிருந்த அவர் உடலை அரக்க வடிவம் கொள்ளுமாறு சாபம் இட்டார். அச்சாபத்தால் துன்பமுற்று உழன்று கொண்டிருந்த அவர் நாரதரால் உண்மையுணர்த்தப் பெற்று மீண்டும் திருப்பூவணம் வந்து பிரம தீர்த்தத்தில் மூழ்கிச் சாபம் நீங்கப் பெற்ருர் என்பது வரலாறு.

## 5. திருமகள் அருள் பெற்றது

19—20 —புரக்கும்

உருமேல் நிவந்தமா யோனைத் தவஞ்செய்
திருமேனி தீண்டவருள் செய்தோன்.

*பொழிப்புரை*

காத்தல் தொழிலை மேற்கொள்ளுபவனும் உருவம் மேலே உயர்ந்ததால் நெடியோனும் ஆகிய திருமாலினுடைய உடலைச்

சாபம் காரணமாகப் பிரிந்து தவம் செய்து கொண்டிருந்த இலக்குமி யானவள் (மீண்டும் அவ்வுடலை) அடையுமாறு சாபத்தை நீக்கி அருள் செய்தவன்.

### அருஞ்சொற் பொருள்

புரக்கும் - காப்பாற்றும். உரு+மேல்+நிவந்த - உருமேனிவந்த - உருவம் மேலே உயர்ந்த. திரு - இலக்குமி.

### விளக்கவுரை

திருமால் காத்தல் தொழிலுடையான். உருவம் வளர்ந்து உலகு அளந்தான் ஆதலின் நெடியோன் எனக் குறிக்கப் படுபவன். கண்ணனாகப் பிறந்து மாயச் செயல் செய்தமை பற்றியும் கருமை யாக இருப்பது பற்றியும் மாயோன் எனப் பெற்றவன். இவைகளை ஆசிரியர் 'புரக்கும் உருமேனி வந்த மாயோன்' என்பதனுள் குறித் தார். இலக்குமி திருமாலின் மனைவி. திருமாலின் மார்பினையே வாழ்விடமாகக் கொண்டவள். இலக்குமி அம்மையார் வாலகில்லிய முனிவரை அவமதித்த குற்றத்தினால் 'நீ திருமாலைப் பிரிந்திருக்க' எனச் சாபமிடப் பெற்றார். பின் திருமகள் பூவணத்தை அடைந்து தவஞ் செய்து இறைவனருளால் தனது வாழ்விடமாகிய திருமாலின் திருமார்பினை அடைந்தார்.

## 6. விநாயகர் அருள் பெற்றது

20—21

—கருமேனி
மாமுகவ ரர்ச்சிக்க வானோர்க்கும் ஏனோர்க்கும்
தாமுதன்மை யாகும் தலையளித்தோன்.

### பொழிப்புரை

கருமையான உடலையுடைய விலங்காகிய யானையின் முகத்தை உடைய விநாயகர் அர்ச்சனை செய்து வழிபடவே தேவர்களுக்கும் யாவர்களுக்கும் தாமே (விநாயகரே) முதற் கடவுளாக இருந்து அருள் செய்யும் உயர் பதவியை அவருக்குக் கருணையோடு வழங்கியவன்.

### அருஞ்சொற் பொருள்

மாமுகவர் - விலங்கின் முகமுடையவர், விநாயகர். தலையளி - கருணை. தலை+அளித்தோன் - தலைமைப் பதவியைக் கொடுத்தவன்.

### விளக்கவுரை

நந்தியெம்பெருமான், தக்கன் முதலியோரும் விலங்கு முக முடையவர் ஆதலின் அவர்களை நீக்கி விநாயகரை மட்டும் குறிப்ப

தற்காகக் கருமையான மேனியையுடைய விலங்கின் தலையென்று குறித்தார். விநாயகருக்கு முதன்மைப் பதவி வழங்கினுன் என்பது கருத்தாகும்.

## 7. அகத்தியன் ஆக்கம் பெற்றது

21—22 —காமர்

செழுந்தமிழ் மாமுனிவன் தெண்கடல் நீரெல்லாம்
உழுந்தமிழ்நீ ராக்க வுவந்தோன்.

### பொழிப்புரை

யாவராலும் விரும்பப் படுகின்ற அழகு அமையப் பெற்ற செழுமையாகிய தமிழினுல் பெருமை பெற்ற முனிவனுகிய அகத்தியன் தெளிந்த கடல் நீரையெல்லாம் உழுந்து அமிழ்கின்ற மிகச்சிறிய அளவுடைய நீராக ஆக்கும் வல்லமையைப் பெறுமாறு மகிழ்வோடு திருவுளங்கொண்டவன்.

### அருஞ்சொற் பொருள்

காமர் - விரும்பப்படும் அழகு.

### விளக்கவுரை

திருப்பூவணத்துள்ள மணிகர்ணிகா தீர்த்தத்தில் மூழ்கி இறைவனை வணங்கிய அகத்தியனுக்குக் கடல் நீரை உழுந்தமிழும் சிறிய அளவு நீராக ஆக்கக்கூடிய வல்லமை உண்டாகுமாறு தன்னுள்ளத்தில் கருதி யருளியவன். திருப்பூவணத்து மணிகர்ணிகா தீர்த்தத்தில் மூழ்கியதால் தான் கடலைக் குடிக்க முடிந்தது என்பது இவ்வடிகளாற் போந்த பொருள்.

அழகு இருவகை: வெறும் உணர்ச்சியை மட்டுமே எழுப்பி வெறிகொள்ளச் செய்து கிளர்ச்சியை உண்டாக்குவது ஒன்று. ஏனையது உணர்ச்சியோடு அறிவையும் உடன் எழச்செய்து இரண்டற்கும் இன்பமூட்டி இரண்டனையும் அமைதிப்படுத்தித் தன்னையே என்றும் விரும்புமாறு செய்வது. இரண்டனுள் பின்னதே அறிஞர்கள் கண்டது. எப்பொருள் கிளர்ச்சியை உண்டாக்காது அமைதியை உண்டாக்குகிறதோ, அது உயர்ந்த பொருள் என்பதும் அறிஞர் முடிபு. தமிழானது சொல்லழகால் உணர்ச்சியையும். பொருளழகால் அறிவையும் ஒருசேர வளர்த்துத் தன்னை அடைந்தவனை அமைதியான இன்பத்துள் அழுத்துவது ஆதலின் காமர் தமிழ் என்றுர். இயற்கையாகவே பல்வகைச் செழுமையோடு இருத்தலே யன்றி நாள்தோறும் புதுமைகளை ஏற்று வளரும் செழுமையையும் பெற்றது தமிழாதலின் செழுந்தமிழ் என்றுர். முனிவனை விட மொழி பெருமை பெற்றது ஆதலின் தமிழால் பெருமை பெற்ற

முனிவன் என்னும் கருத்துப் பெறத் தமிழ் மாமுனிவன் என அகத்தியனைக் குறித்தார்.

## 8. தருமஞ்ஞன் காளி முதலானோர் அருள் பெற்றமை

22—23 —தொழுந்தருமன்

காளி சுச்சோதிகன் மார்க்கண்டன் வசிட்டனிந்த்ரன்
வாளிமகரன் பூசை வாஞ்சித் தோன்.

*பொழிப்புரை*

வணங்கும் நிலையுடைய தருமஞ்ஞன் என்ற அந்தணன், காளி, சுச்சோதிகன், மார்க்கண்டன், வசிட்டன், இந்திரன், ஒளியுடைய சந்திரன் முதலியவர்களின் பூசையை விரும்பி ஏற்றுக் கொண்டவன்.

*அருஞ்சொற் பொருள்*

*வாள்+இமம்+கரன் – ஒளியையும், பனியையும் அதாவது குளிர்ச்சியையும் உண்டாக்குபவன் சந்திரன்.*

***விளக்கவுரை***

சுச்சோதிகன் என்பவன் போகவதி நகரத்து அரசனான தேவவன்மா என்பவனின் மகன். இவன் தன் முன்னோர்களை முத்தி அடைவிப்பதற்காக நாரதர் கட்டளைப்படித் திருப்பூவணம் வந்து மணியோடையில் மூழ்கிச் சில தருப்பணங்களைச் செய்ய இவன் முன்னோர்கள் இவன் முன் தோன்றினார்கள் என்பதும், பின் அவர்கள் முத்தியடைந்தார்கள் என்பதும் வரலாறு. பூசையை விரும்பி ஏற்றுக் கொண்டவன் என்பது, இக்கண்ணியில் குறித்த எழுவர்களுக்கும் வேண்டிய அருள் நிலைகளையும் அளித்தான் என்ற பொருள் படவும் நின்றது.

## 9. நளன் அருள் பெற்றது

23—24: —தோளில்

தழைக்கும் படிகொள் நளச் சக்கரவர்த்தி முன்பட்டு
உழைக்கும் கலிதீர்த் துவந்தோன்.

*பொழிப்புரை*

தோள்களில் மேன்மேல் பெருகும் நிலையமைந்த பூமியைத் தாங்கிய நளச்சக்கரவர்த்தியின் முன் தோன்றி, அவன் நீண்ட நாளாக ஏற்று அனுபவித்து வரும் கலிபுருடனாலாகிய துன்பத்தை நீக்கி மகிழ்ந்தவன்.

### அருஞ்சொற் பொருள்

படி - பூமி. உழைத்தல் என்பது இங்கே அனுபவித்தல் என்னும் பொருளில் வந்தது. கலி என்பது கலிபுருடனுலுண்டாகிய துன்பம் ; ஆகுபெயர்.

### விளக்கவுரை

அரசன் நிலவுலகத்தைத் தன் தோளில் வைத்துக் காப்பதாகக் கூறுதல் கவி மரபு. அவ்வாறே உலக முழுவதையும் தன் தோளில் வைத்துக் காப்பாற்றி வந்த நளன் என்னும் மன்னர்மன்னன் முன் வினைப் பயனுல் கலிபுருடனுல் உண்டாக்கப் பெற்ற துன்பத்தை அடைந்தான். அரசிழந்து, ஏன் அனைத்துமே இழந்து வருந்தினுன். அவன் பூவணத் திறைவனைப் பொற்புடன் வணங்க, எம்பெருமான் அவன் துன்பத்தை நீக்கி அவனுக்கு எல்லாப் பேறுகளையும் தந்து ஆண்டான் என்பது வரலாறு.

## 10. அந்தணன் அருமாப் பதவி பெற்றது

24—25 : —மழைக்குள்

ஒருநாள் பகுத்துண்ட உப்பிலாக் கீரைக்கு
அருமாப் பதவி அளித்தோன்

### பொழிப்புரை

பெருமழை பெய்யும் காலத்தில் ஒரு நாள் இரவிலே பகிர்ந்து கொடுத்துத் தானும் உண்ட உப்பு இல்லாத கீரைக்காக யாவராலும் அடைதற்கு அருமையாகிய பெரிய வீட்டுலகப் பதவியைக் கொடுத்தவன்.

### அருஞ்சொற் பொருள்

பகுத்து+உண்ட : பகிர்ந்து கொடுத்து உண்ட. அருமை - யாவராலும் அடைய முடியாத தன்மையைக் குறித்தது.

### விளக்கவுரை

திருப்பூவணத்தில் அந்தணன் ஒருவன் உடலின்பத்தை வெறுத்து உப்பில்லாத இலைக்கறியை மாத்திரம் உண்டு வந்தான். ஒரு நாள் இரவில் நல்ல மழையில் பசியொடு வந்த அந்தணன் ஒருவனுக்கு அதைப் பகுத்துக் கொடுத்துத் தானும் சிறிது உண்ட காரணத்திற்காக அவ்வந்தணனுக்கு யாவராலும் அடைதற்கு முடியாத வீட்டுலக இன்பத்தைக் கொடுத்தருளினுன் என்பது வரலாறு. 'குப்பைக் கீரை கொய்கண் அகைத்த முற்ரு இளந்தளிர் கொய்து கொண்டு உப்பின்று' உண்ணும் திறன் எளியவர் நிலையாகச் சங்க காலத்துப் பேசப்படுகிறது. இங்கே இவன் உண்டது

உடலின்பத்தை வெறுத்த விரத ஒழுக்கத்திற்காக. இவ்வுணவு கணவனை யிழந்த கைம்பெண் உணவாக இருந்ததென்பதும் சங்க வரலாற்றால் அறியக் கிடக்கின்றது.

## 11. பொன்னனையாள் அருள் பெற்றது

25—26 : —விரிநீர்ச்செம்

போதத் திருவுருவாம் பொன்னனையாட் கிரத
வாதத் திருவுருவா வந்துதித்தோன்.

### பொழிப்புரை

விரிந்த நீரில் இருக்கிற செந்தாமரை மலரில் வீற்றிருக்கும் அந்தத் திருமகளின் வடிவமாகவே விளங்கும் பொன்னனையாள் என்பவளுக்காக இரசவாதம் செய்கின்ற சித்தனின் திருவுருவம் கொண்டு வந்து இரசவாதம் செய்து அவள் கருத்தை முற்று வித்தவன்.

### அருஞ்சொற் பொருள்

செம்போது - செந்தாமரை மலர். இரசவாதம் - ஒரு உலோகத்தை வேறொரு உலோகமாக மாற்றும் ஒருவகைச் சித்துச் செயல்.

### விளக்கவுரை

இலக்குமியே என்று சொல்லும் வடிவமுடைய திருப்பூவணத் துப் பொதுமகளிர் குலத்தைச் சேர்ந்த பொன்னனையாளின் கருத்தை முற்றுவிக்க இறைவன் சித்தவுருக்கொண்டு வந்து இரசவாதம் புரிந்தது பின்னர் 385 முதல் உள்ள சில கண்ணிகளால் விரிவாகக் கூறப்படுகிறது. போதத் திருவுருவாம் என்பதற்கு ஞான வடிவமாம் பொன்னனையாள் எனப் பொருள் கொள்ளுவதற்கு ' விரிநீர்ச் செம் ' என்ற அடைமொழி பொருந்தாமை அறிக. பொன் என்பது இலக்குமியைக் குறிக்குமாதலின் பொன்னனையாள் என்ற பெயரும் இலக்குமியை ஒத்தாள் எனக் குறிப்பதாகவே கொண்டு, இதற்குப் பாதுகாவலாக உள்ள தொடராகவே விரிநீர்ச் செம்போது அத்திரு வுருவாம் (பொன்னனையாள்) என்ற தொடரையும் அமைத்தார். இவளுக்காக இறைவன் சித்தவுருக்கொண்டு வந்து இவளில்லத்து இரும்பு முதலிய உலோகங்களையெல்லாம் பொன்னாக ஆக்கிச் சென்ற செயல் உண்மையானது என்பதற்கேற்பப் பொன்னனையாள் மகேசுவர பூசை செய்த இடமும், இறைவன் வந்து இரசவாதம் செய்த இடமும் முறையே இன்று பொன்னனையாள் மடம் என்றும் பொன்னனையாள் மண்டபம் என்றும் வழங்கப்படுகின்றன.

## 12. தரு தழைக்கத் தண்ணளி தாங்கியோன்

26—29 .........கோதுஇல் அறப்
பைங்கூழ் வளர்த்த பசும்பாதி செங்கையால்
மங்காது அமைக்க வளர்ந்ததரு—துங்கம்ஆர்
ஓர் உகத்திலே தருவாய் ஓர் உகத்தில் வில்லுவமாய்
ஓர் உகத்தில் வன்னியாய் ஓர் உகத்தில்—சீர்உற்ற
பாரில்கடவுள் பலாவாய்த் தழைக்க அதன்
வேரில் கிளைத்த முதல் விண்ணவர்கோன்.

### பொழிப்புரை

குற்றம் இல்லாத அறம் என்னும் பசுமையான பயிர்களை உலகில் தோன்றி நிலை பெறச் செய்தவளும், எம்பெருமானின் திருமேனியில் நேர் பாதியைத் தனக்கு வடிவமாக உடையவளும் ஆகிய உமை யம்மையார் தம் செம்மைக் கையால் யாதொரு குறையுமின்றி அமைத்த காரணத்தால் வளர்ந்த பாரிசாதத் தரு பெருமை பொருந்திய ஒரு யுகத்தில் (கிருத யுகத்தில்) பாரிசாத மரமாகவும், அடுத்த யுகத்திலே (திரேதா யுகம்) வில்லுவ மரமாகவும், அதற் கடுத்த யுகத்திலே (துவாபர யுகம்) வன்னி மரமாகவும், இறுதி யுகத்திலே (கலியுகம்) சிறப்புப் பெற்ற இவ்வுலகில் கடவுள் தன்மை வாய்ந்த பலாமரமாகவும் ஒன்றே வேறு வேறு வடிவம் கொண்டு கால மாறுபாட்டிற் கேற்பத் தழைக்குமாறு அருள் செய்து, அம்மரத் தின் வேரில் சுயம்பு இலிங்கமாகத் தோன்றிய முதற் பொருள் தேவர்கள் தலைவன்.

### அருஞ்சொற் பொருள்

கோது – குற்றம். பசுமை+கூழ் - பைங்கூழ் - பசுமையாகிய பயிர். அறத்தை இவ்வாறு உருவகம் செய்தார். பசும்பாதி - நேர் பாதி. மங்காது - குறையாது. துங்கம் - பெருமை. கிளைத்த - தானே தோன்றிய. நாமாக அமைக்காது தானாகத் தோற்றும் இலிங்கத்தைச் சுயம்புலிங்கம் எனக் குறித் தல் புராண வழக்கு.

### விளக்கவுரை

இறைவி இறைவன் மேனியில் பாதிப் பகுதியைத் தனக்கு உரிய இடமாகப் பெற்ற காரணத்தால் பசும்பாதி எனக் குறிக்கப்பெற்றாள். ''தம்பிரான் திருமேனியிற் செம்பாதியும் கொண்ட தையல்நாயகி'' என்று குமரகுருபரரும் குறித்தார். இத்தகைய உருவத்தைத் 'தோடுடைய செவியன்' என ஞானசம்பந்தரும் அர்த்தநாரீசுவர மூர்த்தம் எனப் புராண நூலுடையாரும் பகர்ந்தனர். இனி எம்பெரு

மாட்டி திருமாலின் தங்கையாதலின் பச்சைநிறமுடையவள். ஆதலி ஞல் எம்பெருமான் சிவனின் (சிவப்பு நிறத்தன்) உருவத்தில் பச்சை யாக இருக்கும் பாதி உருவத்தாள் என்று கொண்டு "பசும்பாதி" என்று குறித்ததாகவும் கொள்ளலாம். இவள் காஞ்சியில் காமாட்சி யாக இருந்து முப்பத்திரண்டு அறங்களையும் வளர்த்தாள் என்பது காஞ்சிப் புராண வரலாறு. பயிர் வளர்த்த பாங்கு அமையப் பெற்றவள் மரத்தையும் மங்காது வளர்த்தாள் என்ற நயமும் அமைந்துள்ளது. அறம் வளர்த்த கையானமையின் அவள் கையும் செங்கை எனப்பட்டது. எம்பெருமாட்டி வைத்த பாரிசாதத் தருவை யுகங்கள் தோறும் மாறுபடச் செய்து காத்து வரும் தண்ணளியே இறைவனின் சிறப்புணர்த்தும் செயலாக இங்குக் குறிக்கப்படுகிறது.

[ஏழாவது கண்ணி முதல் இருபத்தொன்பதாவது கண்ணி வரை திருப்பூவணத் தலச் சிறப்பை அடிப்படையாகக் கொண்டு இறைவன் சிறப்புணர்த்தி வந்த ஆசிரியர் இனி அடிமடக்கு என் னும் சொல்லணி அமையுமாறு இறைவனின் பொதுச் சிறப்பையே மேலும் ஐந்து கண்ணிகளாற் கூறுகின்ருர்.]

## அடிமடக்கு

29—34 ............நேரா

மதித்த கயிலை வரையா னடக்க
மதித்த கயிலை வரையான்—துதித்தார்க்கு

வாய்த்திடத்தா னீபவனத்தினு ஞன்மறைசொல்
வாய்த்திடத்தா னீப வனத்தினுன்—சாத்தியகை

நந்த னிறைவிருத்த ஞகத்தான் வீற்றிருந்தா
னந்த னிறைவிருத்த ஞகத்தான்—முந்தரங்க

ஊரவரம் பெற்றமா யூரத்தான் கண்டோன்மீ
தூரவரம் பெற்றமா யூரத்தான்—தேரிற்

படங்கொண்ட அல்குற் பராபரைமின் னம்மை
இடங்கொண் டுறைபூவ ணேசன்.

## சொல்லுரை

நேரா - உடன்படாத,
மதி தகய் இல் ஐவரை - மதிக்கப் படும் மேன்மைப்பாடு இல் லாத ஐம்பொறிகளாகிய தீயோரை,
யான் அடக்க - நான் கீழ்ப்படுத்து வதற்காக வேண்டி,
மதித்த - என்னையும் ஒரு பொரு ளாகக் கொண்டு திருவுளம் பற்றிய,

கயிலை வரையான் - கயிலாய மலையின் உரிமையாளனாகிய தூதுவன்;
துதித்தார்க்கு - தன்னை வணங்கியவர்களுக்கு,
வாய்த்திட - சகல பேறுகளும் உண்டாகும் வண்ணம்,
தான் ஈ - தான் கொடுக்கின்ற,
பவனத்தினன்-தேவருலகத்திற்கு உரிமையுடையவன்;
நான்மறை சொல் வாய் திடத்தான்- நான்கு வேதங்களையும் அருளிச் செய்த வாய் வன்மையையுடையவன்;
நீப வனத்தினன் - கடம்பவனம் என்று சொல்லக் கூடிய மதுரைக்குத் தலைவன்;
சாத்திய கை நந்தன் - (கை சாத்திய நந்தன்) கையின் கண் வைக்கப் பெற்றுள்ள சங்கினையுடைய திருமாலுக்கு,
இறை - கடவுள்;
விருத்தனாக - யாவருக்கும் பழமையானவனாக,
தான் வீற்றிருந்தான் - தான் அழியாது வீற்றிருப்பவன்;
நந்தல் நிறை - பெருகுதல் நிறைந்த,
விருத்த நாகத்தான் - பழமலை என்ற (விருத்தாசலம்) மலையையுடையவன்;
முந்து அரங்க ஊரவர் - முன்னொருநாள் திருவரங்கத்தைத் தம்முடைய ஊராகக் கொண்ட திருமால்,
அம் பெற்றமாய் ஊர - அழகிய இடப வாகனமாய் ஊர்ந்து வரும் வண்ணம்,
தான் கண்டோன் - தான் திருவருள் நோக்கம் செய்தவன்;
மீது ஊர - (இத்தலத்தை அடைந்து சிவபூசை செய்தவர்கள்) மேலான பதவியை அடையலாம் என்ற,
வரம்பெற்ற - மேன்மை பொருந்திய வரம் ஒன்றை இறைவன் பால் பெற்றுள்ள,
மாயூரத்தான்- திருமயிலாடுதுறை (மாயவரம்) என்ற பதியை உடையவன்,
தேரின் - ஆராய்ந்து பார்த்தால்,
படம்கொண்ட - பாம்பின் படத்தைப் போன்ற,
அல்குல் பராபரை - அல்குலினையுடைய பராசக்தியாகிய,
மின்னம்மை-மின்னம்மை யாளின் (திருப்பூவணத்து உமையம்மை பெயர்),
இடம்கொண்டு உறை - இடது பக்கத்தைத் தமக்கு இருப்பிடமாகக் கொண்டு தங்கியிருக்கின்ற,
பூவண ஈசன் - திருப்பூவணத்து இறைவன்.

*பொழிப்புரை*

உடன்படாதவரும், மதிக்கப்படும் மேன்மைப்பாடு இல்லாதவரும் ஆகிய ஐம்பொறிகளாகிய தீயோரை யான் கீழ்ப்படுத்த வேண்டி என்மேல் கருணைவைத்துத் திருவுள்ளம் பற்றிய கயிலாய மலையின் கடவுள்.

தன்னை வணங்கியவர்களுக்குச் சகல பேறுகளும் உண்டாகும் வண்ணம் தானே கொடுக்கின்ற தேவருலகத்துத் தலைவன்.

நான்கு வேதங்களையும் அருளிச் செய்த வாய்வன்மை உடையவன்.

கடம்பவனம் என்று சொல்லக்கூடிய மதுரையின் தலைவன்.

கையில் சங்கினை வைத்துக் கொண்டிருக்கிற திருமாலுக்கு இறைவன்.

யாவருக்கும் பழமையானவனாகத் தான் அழியாது என்றும் நிலை பெற்றிருப்பவன்.

பெருகுதல் நிறைந்த பழமலை என்ற மலையை உடையவன்.

முன்னொருநாள் திருவரங்கத்தைத் தம் இடமாகக் கொண்ட திருமால் அழகிய இடப வாகனமாய் ஊர்ந்துவரும் வண்ணம் தானே திருவருள் நோக்கம் செய்தவன்.

தன்னை அடைந்தவர்கள் மேம்பதவி அடையலாம் என்ற வரம் பெற்ற மயிலாடுதுறை என்ற பதியை உடையவன்.

பராசத்தியாகிய மின்னம்மையின் இடது பக்கத்தைத் தன் இடமாகக் கொண்டு தங்கியிருக்கின்ற திருப்பூவணநாதன்.

## அருஞ்சொற் பொருள்

நேர்தல் - உடன்படுதல். தகய் - தகை - மேன்மைப்பாடு. தகு+ஐ—தகுந்த அழகு, மேன்மை என்னும் பொருளது.ஐ என்பதற்கு 'அய்' என்பது போலியாக வந்து தகு+அய் - தகய் என நின்றது. மதித்தல் - கருதுதல். பவனம் - தேவருலகு. நீபவனம் - கடம்பவனம்; மதுரை. நந்தன் - சங்குடையவன். நந்தல்- பெருகுதல். நாகம் - மலை. விருத்தநாகம்-பழமலை; விருத்தாசலம். பெற்றம் - மாட்டின் பொதுப்பெயர்; இங்குக் காளையைக் குறித்தது. மீது - மேம்பட்ட பதவி. தேர்தல் - ஆராய்தல்.

## விளக்கவுரை

உயிரின் பேறு இறைவனை அடைதல். இறைவனை அடையா வண்ணம் உயிரின் போக்கைத் தடை செய்கின்ற காரணத்தால் ஐம்பொறிகளையும் உடன் படாதவர் என்று குறித்தார். ஐம்பொறிகளும் நம்மைத் தீமையில் செலுத்தும் தாழ்ந்தவை ஆதலின் மதி தகை இல் ஐவர் என்றார். இழிவு காரணமாக உயர்திணையாக் கூறினார்; நரியார் வந்தார் என்பது போல. 'அழுக்காறென ஒரு பாவி' என்ற வள்ளுவரின் நடையைப் போல் மிகுந்த சினத்தில் கூறினாரெனினும், அமையும். ஐம்பொறிகளின் செயல் குறைவுபட வேண்டுமானால் அதற்கு இறைவனின் திருவருட் பார்வைவேண்டும்; தன்னையும் ஒரு பொருளாக மதித்து ஐம்பொறிகளின் செயல் அடங்குமாறு திருவருள் நோக்கம் செய்தவன் எனக் குறித்தார். (இது ஆசிரியர் தன்னையே குறித்தது).

மீது ஊர வரம் பெற்ற மாயூரத்தான் முருகன் தன் மீதுதான் ஊர்ந்து செல்லுதல் வேண்டும் என்ற வரத்தை அவனிடம் வேண்

டிப் பெற்ற திருமயில் என்னும் பறவையானது என்றும் ஆடிக் கொண்டிருக்கும் பதியாகிய திருமயிலாடுதுறை என்றும் பொருள் கொள்ளலாம். தேரின் படம் கொண்ட அல்குல் என்பதற்கு தேரினுடைய தட்டினைப் போன்று பரந்திருக்கின்ற அல்குல் என்று வேறு பொருள் கொள்ளினும் அமையும்.

## இறைவன் சிறப்பு

### 1 முதல் 34 கண்ணிகளாலும் போந்த தொகைப் பொருள்

திருப்பூவணத்து இறைவன், திருமாலுக்கும், பிரமனுக்கும் இந்திரனுக்கும், தேவர்களுக்கும், யாவருக்கும், மாதவர்க்கும், சந்திரனுக்கும், சூரியர்களுக்கும் தலைவன்.

பலகோடி அண்டங்களையும் படைத்துக் காத்து அழிப்பவன்.

பலகோடித் திருமால்களும் பிரமர்களும் அழிந்தாலும் தான் அழியாமல் ஞானக் கண்ணுற் பார்த்துக் கொண்டிருப்பவன்.

வேதங்களாற் கூறப்படும் எல்லாப் பொருள்களாகவும் இருப்பவன். தன்னினும் உயர்ந்த வேறு பொருள் இல்லாதவன்.

எல்லாம் இறைவனே எனக் கருதி உருகாதவரிடம் தங்காதவன்.

மின்னை ஒத்தவளாம் என் தாயின் இடது பக்கத்தில் என்றும் இருப்பவன்.

உமையம்மை அறிந்து செய்த குற்றத்திற்காகத் தருவளர்த்து வழிபட்டவுடன் அருள் செய்தவன்.

தன் பதவி வேண்டுமாறு மணியோடை தோண்டிய சூரியனுக்கு அருள் செய்தவன்.

பிரமன் சாபத்தை நீக்கியவன்.

திரணுசனனுரின் அரக்க வடிவத்தைத் தொலைத்து அருள் செய்தவன்.

திருமகள் வாலகில்லிய முனிவரால் அடைந்த சாபத்தை நீக்கித் திருமாலின் மார்பினை அடைந்து வாழ அருள் செய்தவன்.

வணங்கிய விநாயகருக்கு யாவர்க்கும் முதன்மை ஆம் பதவி வழங்கியவன்.

தன்னை வணங்கி நின்ற அகத்தியனுருக்குக் கடல் நீரை உழுந்து அழுந்துகின்ற அளவு நீராக ஆக்கும் ஆற்றலை அளித்தவன்.

தருமன், காளி, சுச்சோதிகன், மார்க்கண்டன், வசிட்டன், இந்திரன், சந்திரன் முதலியோர் பூசைகளை ஏற்று அவர்களுக்கு அருள் வழங்கியவன்.

நளச் சக்கரவர்த்தியின் கலிதீர்த்து ஆண்டவன்.

அந்தணன் பகுத்துக் கொடுத்த உப்பிலாக் கீரைக்காக உயர் பதவி அளித்தவன்.

பொன்னனையாளுக்காகச் சித்தவுருக் கொண்டு வந்து அவள் கருத்தை முற்றுவித்தவன்.

பிராட்டி வளர்த்த தரு பாரிசாதமாய், வில்லுவமாய், வன்னியாய், பலாவாய் யுகந்தோறும் மாறுபாடு பெற்றுத் தழைக்குமாறு அருள் செய்தவன்.

யான் ஐம்பொறிகளை அடக்கத் திருக்கண் சாத்தியவன்.

தன்னை வணங்கியவர்களுக்கு எல்லாப் பேறுகளையும் தரும் தேவருலகத்துத் தலைவன்.

மதுரையின் தலைவன்; திருமாலுக்குக் கடவுள்; பழமையானவனாய் அழியாது நிலைபெற்றவன்; பழமலை நாதன்.

திருமால் இடபவாகனமாய் வருமாறு அருள் செய்தவன்.

திருமயிலாடு துறையின் தலைவன்.

மின்னம்மையின் இடது பக்கத்தைத் தன் இருப்பிடமாகக் கொண்டு என்றும் உறைந்து வருபவன்.

## இதுமுதல் இறைவனின் நாள் செயல் கூறப்படுகிறது

உலாப் போகும் தலைவனின் குலமுறை பற்றிக் கூறுதல் வேண்டும் என்ற உலாப் பிரபந்த இலக்கணம் பற்றிப் பூவணத்து இறைவனின் குலமுறை கூறப்பட முடியாத நிலையுடையது ஆதலின் அதைவிடுத்து அன்னவன் சிறப்பினைக் கூறிவந்த ஆசிரியர் உலாப் புறப்படும் நாளில் அவன் மேற் கொள்ளும் ஒவ்வொரு நிகழ்ச்சியையும் விளங்க உரைக்க முற்படுகிருர்.

இறைவன் காலங் கடந்தவன். மக்களுக்குரியனவாகிய எந்நிலைகளுக்கும் அப்பாற்பட்டவன். தூங்குவதும் விழிப்பதும், உண்பதும் உண்ணுமையும் போன்ற செயல்முறைகள் அவனுக்குக் கிடையா. அத்தகைய இறைவனைத் திருப்பள்ளி கொள்ளச் செய்வதும் திருப்பள்ளியெழுச்சி செய்வதும், திருமுழுக்கு ஆட்டுவதும் போன்ற செயல்களுக்கு உட்படுத்திவைப்பது அவன்பால் மக்கள் கொண்டிருக்கும் அன்பை வெளிப்படுக்கும் முகமேயன்றி வேறன்று. அதை

உன்னியே திருப்பூவணத்திறைவன் நாட்கடமைச் செயல்களை விரித்துக் கூறுகிருர்.

பாட்டுத்தலைவன் யானை, குதிரை, தேர் முதலிய ஊர்திகளில் உலாப்போனதாகக் கூறுவது கவி மரபு. இங்கே பூவணத்து இறைவன் பங்குனி உத்திரத் திருவிழாவின் ஒன்பதாம் நாளில் தேரில் உலாப்போனதாக அமைத்துள்ளார்.

## இறைவனின் திருப்பள்ளியெழுச்சி

34—40

— நடங்கொண்டு
சேவிக்கும் தெய்வத் திருப்பங்குனித் திருநாள்
மேவப் பெருமகிழ்ச்சி மீதூரக் - காவற்
குருமணிவெள் ளேற்றுக் கொடியேற்றி வீதித்
திருவுலாப் போதும் தினத்துள் - ஒருநாள்
சகங்காட்டும் கங்குல் தணிய அருணன்
முகங்காட்டச் சங்கம் முழங்கச் - சகம்காட்டும்
பொன்மலை வல்லியுடன் பூண்ட திருத்துயில் நீத்து
என்மலை வில்லி யெழுந்தருளி - நன்மை
பருவயிர மாணிக்கப் பல்லக்கின் மீது
திருவனந்தல் தெய்வவுலாச் சென்று - பெரிதிருந்து
தேறத்தகும் பெரிய திவ்யாக மப்படியே
கூறத்தகும் பூசை கொண்டதற்பின்.

### பொழிப்புரை

அடியவர்கள் நடனமாடிக் கொண்டு வணங்குதற்கு ஏற்றதும் தெய்வத்தன்மை வாய்ந்ததும், செல்வம் அளிப்பதும் ஆகிய பங்குனி உத்திரத் தீர்த்தத் திருவிழா நாள் வந்து பொருந்திய காரணத்தால் மிகுந்த மகிழ்ச்சி மேன்மேல் பெருக, காத்தல் தொழில் கருதிக் கட்டப் பெறுவதும், நல்ல நிறம் அமைந்து அழகியதாக விளங்குகிறதும் ஆகிய இடபவாகனக் கொடியைக் கட்டி நாள்தோறும் தெருவிலே திருவுலா வருகின்ற விழாக் காலத்திலே ஒன்பதாந் திருநாளாகிய அந்த ஒப்பற்ற நாளிலே.

உலகிலே நான் ஒரு பொருள் இருக்கிறேன் எனத் தன்னை எடுத்துக் காட்டுகின்ற இருளானது நீங்க, சூரியன் தன்னுடைய முகத்தைக் காட்ட, சங்குகள் எல்லாம் காலை நேரத்தை அறிவிப்பதற்காக முழக்கத்தைச் செய்ய, கிளியை ஒத்தவளாகிய இமயமலை

யரசன் கொடியாகிய பார்வதியாம் மின்னனையாளோடு மேற்கொண்ட திருத்துயிலை நீத்து ஒளி பொருந்திய மேரு மலையாகிய வில்லை உடைய பூவணத்திறைவன் திருப்பள்ளியினின்றும் எழுந்தருளி,

நன்மையைத் தருவதும், பெரியதாகப் பருத்திருக்கின்றதும் ஆகிய வயிரங்களும் உடன் கூட்டிச் செய்யப் பெற்ற மாணிக்கப் பல்லக்கின்மீது அமர்ந்தருளி விடியற்காலத்தே வேண்டும் அடியவர்க்கு அருள் சுரக்கும் நிலையோடு திருப்பள்ளி அறையினின்றும் உலாவாக எழுந்தருளி வந்து,

நீண்ட நாளாக நெடிது இருந்து ஆராய்ந்து தெளிவதற்குரியதாகிய தெய்வத் தன்மை பொருந்திய ஆகமத்திற் கூறிய முறைகளின்படி பூசையை ஏற்றுக் கொண்ட பிறகு, (அபிடேகம் கொள்ள எழுந்தருளுகிறார்.)

### அருஞ்சொற் பொருள்

சேவிக்கும் - வணங்கும். மேவ - பொருந்த. மீதூர - மேன்மேலும் வளர. குரு - நிறம். வெள்ளேறு - காளை; இடபவாகனம். சகம் - உலகம். கங்குல் - இருட்டு. அருணன் - சூரியன். பொன்மலை - இமயமலை. பொன்மலை வல்லி - பார்வதி. எல்மலை – என்மலை - மேருமலை. வில்லி - வில்லையுடையவர். திருவனந்தல் - விடியற்காலம். பெரிது என்பது நீண்ட காலம் என்னும் பொருளில் வந்தது. தேறல் - ஆராய்ந்து தெளிதல். திவ்யம் - தெய்வத் தன்மை.

### விளக்கவுரை

நடங்கொண்டு சேவித்தல் அடியவர்கள் அன்பு மேலீட்டால் நிகழ்வது. நடங்கொண்டு சேவிப்பதற்கு ஏற்றது, தெய்வத்தன்மை வாய்ந்தது, செல்வத்தை அளிப்பது ஆகிய மூன்றும் பங்குனித் திருநாளுக்கு அடைமொழிகளாக வந்தன. காலமானது கடவுள் நிலையிலிருந்து அருஞ்செயல்கள் பல ஆக்கும் தன்மையது. இறைவன் மிகவுயர்ந்தவன். உயிர்கள் மிகத் தாழ்ந்தவை. இறைவன் உயிர்களைக் காக்க வேண்டும் என்ற எண்ணத்தோடு சிறிது எளிமைத் தன்மையினை மேற்கொண்டு தன்னிலையிலிருந்து சற்று இறங்கி வருதல் வேண்டும். உயிர்களோ இறைவனை அடைய வேண்டும் என்ற எண்ணங்கொண்டு சிறிது உயருதல் வேண்டும். அப்போதுதான் இறைவனும் உயிர்களும் ஒன்றுபடுதல் இயலும். பங்குனித் திருநாளும் அடியவர்களை அன்புகொண்டு ஆடிச் சேவிக்குமாறு செய்து அவ்வுயிர்களின் தன்மையை உயர்த்துகிறது. அதே சமயத்தில் இறைவனையும் வீதிகள் தோறும் எழுந்தருளி வந்து அருள் செய்ய வைக்கும் எளிமையுடையவனாகவும் ஆக்குகிறது. இறைவனையும் ஏவலிடும் தெய்வத் தன்மையுடைய பங்குனிநாள் வீடென்னும் திருவை - செல்வத்தை அடியவர்களுக்கு

அளிக்கும் நிலையுடையதாகவும் திகழ்கிறது. விழா நடப்பதற்காகக் கொடி கட்டப் பெறுதல் வேண்டும் என்பது விதி. இறைவன் - சிவன் காளை வடிவம் பொறிக்கப் பெற்ற கொடியுடையோனுதலின் வெள்ளேற்றுக் கொடியேற்றி என்றார். காப்பாற்றும் தொழிலை அடிப் படையாகக் கொண்டு கொடி கட்டப்பெறுவதாதலின் காவல் கொடி என்று குறித்தார். காவல் என்பதற்குக் காத்தல் தொழிலையுடைய திருமால் எனக்கொண்டு திருமாலாகிய வெள்ளேற்றினை எழுதப் பெற்ற கொடி என உரைகண்டார் முது பெரும்புலவர் உ. வே. சா. அவர்கள். திருமால் இடபவாகனமாக இருந்து இறைவனைத் தாங்கினுன் என்பது புராணம். அழித்தற் கடவுளின் ஊர்தியாக, கொடியாகக் காளை அமைக்கப்பட்டிருக்கிறது என வரலாற்று ஆராய்ச்சியாளர் கூறினும் அழித்தல் காத்தலை அடிப்படையாகக் கொண்டது என்னும் கருத்துத் தோன்ற ஆசிரியர் 'காவற்கொடி' என்று குறித்தார்.

ஒவ்வொருநாளும் இராப்பூசை முடிந்ததும் எம்பெருமானைப் பள்ளியறையில் எம்பெருமாட்டியுடன் எழுந்தருளச் செய்து, மறு நாட் காலையில் பல வாத்தியங்கள் முழங்கப் பால் முதலியன வைத்து நிவேதனம் செய்து, அன்பர்கள் வணங்கி அருள்பெற ஒரு சிறு பல்லக்கில் எழுந்தருளச் செய்து, கொண்டு வந்து திருவபிடேகம் செய்தல் ஆகமங்களிற் கண்டதொன்று. அதையே ஈண்டும் கூறுகிருர். இவ்வாறு இறை திருப்பள்ளி யெழுச்சியை மணிவாசகப் பெருமான் 'திருப்பள்ளியெழுச்சி' என்ற பதிகத்தால் உணர்த்தினுர். ஆழ்வாராதிகளும் உணர்த்திச் சென்றுள்ளனர்.

சகம் காட்டும் கங்குல் என்பதற்குச் சகத்திலே (உலகம்) தான் ஒரு பொருளாய் இருக்கிறேன் என்பதை யாவருக்கும் எடுத்துக் காட்டும் கங்குல் என்று உரை செய்யப்பெற்றது. "ஒரு பொருளுங் காட்டாது இருள் உருவம் காட்டும்" என்றுரைத்தார் 'திருவருட் பயன்' என்ற நூலுடையார்.

சுகம்-கிளி; நிறத்தாலும், மொழியாலும் கிளியை ஒத்தவள் உமை. இனி சுகம் காட்டும் மலைவல்லி என்பதற்கு இறைவனுக்கு நன்மை தருகின்ற என்ருே இன்பம் தருகின்ற என்ருே உரை செய்யின் 'காட்டும்' என்ற சொல் போதிய ஆற்றல் உடையதன்ருய் இழுக்காகும். காட்டுதல் என்பது தருதல் ஆகாது பொய்மையை அடிப்படையாகக் கொண்டது என்பதாம்.

இனி, இறைவி அருட்சத்தியாவள். இறைவன் பேரின்பமயமானவன் என்பதை உயிர்களுக்கு எடுத்துக் காட்டி அவனை அடைதற்கு வழி அமைப்பவள் அருட்சத்தி. ஆதலினுல் சுகம் ஆகிய பேரின்ப மயமாகிய இறைவனை மக்களுக்குக் காட்டுகின்றவள் என்ற

பொருளில் சுகங்காட்டும் பொன்மலை வல்லி என்றார். எனினும் பொருந்தும்.

## திருமுழுக் காடல் (அபிஷேகங் கொள்ளல்)

40—44 — மாறுஅற்ற

நீள் நித்திலத் தரள நீல ப்ரவாளவச்ர
மாணிக்கச் சித்ரரத்ன மண்டபத்திற்—பேணிக்கொள்

தம்காதல் நாயகியும் தாமும் எழுந்தருளிச்
சிங்காதனத் தவிசில் சென்றிருந்து—நம்கூடல்

ஊரில் குண்டோதரற்கா ஊட்டத் தனிபிரிந்து
பாரிற்செல் வையைப் பகீரதிப்பெண்—பேர்வுஉற்ற

நீட்சிப் பிரிவுஒழிய நேடி மணப்பதுஎனக்
காட்சித் திருஅபி டேகங்கொண்டு.

### பொழிப்புரை

மாறுபாடு இல்லாத உயர்ந்த தன்மை வாய்ந்த நித்திலமாகிய முத்துக்களையும், நீலமணிகளையும், பவளங்களையும், வைரங்களையும், இரத்தினங்களையும் கொண்டு அழகுடையதாகச் செய்யப் பெற்ற இரத்தின மண்டபத்திலே, அன்புடன் விரும்பித் தழுவிக் கொள்ளப் படுபவளாகிய தம்முடைய அன்புத் தலைவியாகிய மின்னனையாளும் தாமுமாக எழுந்தருளி வந்து, அம்மண்டபத்தில் அமைத்துள்ள சிங்காதனம் என்று சொல்லப்படும் ஆசனத்தில் இருந்து, இதே பாண்டிநாட்டுப் பழம் பெரும் பதியாகிய நான்மாடக் கூடல் என வழங்கும் மதுரையில் மிகத்தாகம் கொண்ட குண்டோதரனுக்காக அவன் தாகத்தைத் தணிக்கும் முறையில் உண்பிக்க வேண்டிய காரணத்தால் தன்னைவிட்டுத் தனியே பிரிந்து பூவுலகை நோக்கிச் சென்ற வையையாகிய கங்கைப் பெண்ணின் பெயர்ச்சியால் உண்டாகிய நெடுநாட் பிரிவானது நீங்குமாறு உள்ளத்தே எண்ணி அக்கங்கையைக் கூடுவது போலக் காட்சியளிக்குமாறு திருவபிடேகங் கொண்டருளி.

### அருஞ்சொற் பொருள்

நித்திலத் தரளம் - நித்திலமாகிய முத்து. ப்ரவாளம் - பவளம். வச்சிரம் - வைரம். சித்ரம் - அழகு. கூடல் ஊர் - மதுரை. பேர்வு - பெயர்வு, நீங்குதல். நேடுதல் - நினைத்தல்; எண்ணுதல்.

விளக்கவுரை

நித்திலத்துக்குள்ள மாறுபாடு ஒளியின்றி, வடிவின்றிக் காணப்பெறுதல். அதனால் மாறு அற்ற நித்திலம் என்றார். நீள் என்பது தன்மையால் - குணங்களால் - விலை முதலிய வற்றால் உயர்ந்த என்னும் பொருள் தந்து நின்றது. நித்திலமும் தரளமும் முத்தினையே குறித்தலின் நித்திலமாகிய தரளம் என உரை செய்யப் பெற்றது. சிம்மாசனம் என வழங்கப்படும் ஆசனம் என்று பொருள் செய்யப் பெற்றது. அதை விடுத்துத் தவிசு என்பதற்கு மெத்தை எனப் பொருள் கொள்ளின் அபிடேகம் செய்தற்குப் பொருந்தாமை அறிக. சோமசுந்தரப் பெருமான் மதுரையில் மீனாட்சியம்மையாரை மணம் புரிந்த காலத்துக் குண்டோதரனுக்கு உண்டாகிய பெருந் தாகத்தைத் தீர்க்கும் பொருட்டுத் தன் சடையிலிருந்த கங்கையை வையை என்னும் பெயரோடு பூமியை நோக்கிச் சென்று அவன் தாகத்தைத் தணிக்கு மாறு கூறினர். இதனால் கங்கை இறைவனின் சடையை விட்டுப் பிரிந்தாள். அவனைப் பிரிந்த நெடுநாட் பிரிவை நீக்குதற்காக உள் ளத்து எண்ணி அவனை அடைவது போல் தோற்றமுண்டாகுமாறு திருவபிடேகங் கொண்டார் எனக் கொள்ள வைத்தார். திருப்பூ வணம் மதுரையை அடுத்ததோர் பதியாதலின் எம்பெருமான் அபி டேகத்துக்கு வையை நீரையே கோயிலில் பயன்படுத்துவார்கள் என்ற கருத்தையும் கொள்ள வைத்தார். இவ்வாறே கங்கையைப் பிரிந்த இறைவன் மீண்டும் அவளை விரும்பி அடைதலைத் திருவிளை யாடற் புராணத்து, மண் சுமந்த படலத்தில்

> ‘ குறட்குநீர் அருத்தி வையைக் குடிஞையா யொழுகுங் கங்கை
> அறற் குழற் பிரிவின் ஆற்றாது அன்பினால் அவளைக் காண்பான்
> மறக் கயல் நெடுங்கணாளை வஞ்சித்து வடிவமாறிப்
> புறப்படுவாரைப் போலப் போதுவார் போதமூர்த்தி ’

என்று கூறுவதாலும் உணரலாம்.

## திரு அணி அணிதல்

இறைவனுக்கு அபிடேகம் முடிந்தபின் அலங்காரம் செய்யப் டுவதை இது முதல் பதினான்கு கண்ணிகளாற் கூறுகிறார்.

### 1. ஆடை புனைதல்

— மாட்சி

44—46

> அலங்கார மாக்கொளத ளாடை யிரண்டும்
> விலங்காடை யென்ன விலக்கி- நலங்காணும்
> மன்போசன் முத்து வடுகநா தேந்த்ரனருள்
> பொன்போலு மாடை புனைந்தருளி.

### பொழிப்புரை

மாட்சிமை பொருந்திய அலங்காரமாகக் கொள்ளப் பெற்றனவும் தோல்களால் ஆக்கப் பெற்றனவும் ஆகிய ஆடைகள் இரண்டையும் மிருகங்களின் தோல்களால் ஆகிய ஆடைகள் என்று கருதி அவற்றை நீக்கி, நன்மைச் செயல்களையே மேற்கொண்டு செய்கின்ற வனும், நிலைபெற்ற போசனைப் போன்றவனும் ஆகிய முத்து வடுக நாத துரை என்னும் இந்திரன் கொடுத்த பொன்போல் ஒளிவிடும் ஆடையைப் புனைந்தருளி.

### அருஞ்சொற் பொருள்

அதள் - தோல். விலங்கு+ஆடை - விலங்காடை - மிருகங்களின் தோல்களால் ஆக்கப் பெற்ற ஆடை. மன் - நிலைபெற்ற.

### விளக்கவுரை

" உண்பவை நாழி உடுப்பவை யிரண்டே " என்ற சங்க நூற் கருத்தினை யொப்பவே எம்பெருமானும் கீழாடை, மேலாடை என இரண்டுடை கொண்டார். கீழாடை புலித்தோல்; மேலாடை யானைத் தோல். தாருகாவனத்து முனிவர்களால் கொல்லுமாறு அனுப்பப் பெற்ற யானையையும் புலியையும் கொன்று உரித்து அவைகளின் தோல்களைப் போர்வையாகவும் உடையாகவும் அமைத்துக் கொண்டார். இவை இரண்டும் மிருகங்களின் தோல்களால் ஆக்கப் பெற்ற ஆடையாதலின் விலக்குதற்குரிய ஆடைகள் எனக் கருதி நீக்கினுர் என்பதாம். விலங்காடை என்பதற்கு மிருகங்களின் தோல்களால் ஆக்கப் பெற்ற ஆடை என்றும், விலக்குதற்குரிய ஆடை என்றும் இருபொருள் செய்யப் பெற்றது. வெளியில் உலாவச் செல்லுபவர் சிறந்த நல்லாடை புனைந்து செல்லும் இக்கால முறையினுக் கொப்பவே இறைவனும் தோலாடைகளை நீக்கிப் பட்டாடை புனைந்தார் என்று கூறப் பெறுகிறது. போசன் என்பான் வடநாட்டுத் தாராநகரத்து அரசன். கி. பி. எட்டாம் நூற்றுண்டளவில் இருந்தவன். கவி காளிதாசன் வடமொழி வளர்க்க ஆதரவு தந்தவன். கொடையாளி. இவன் வடுகநாத துரைக்கு உவமை கூறப் பெற்றுன். வடுகநாததுரை சிவகங்கை அரசர்களில் ஒருவர்.

### 2. மகுடம் புனைதல்

46—48

— தன்போல்
திகழ்ந்திடும்க ணன்றித் திருமுடியும் திங்கள்
புகுஞ்செல்வம் கண்டு பொருன்போல்—மிகுங்கதிர்சூழ்
செம்பருதி தானுமொக்கச் சேர்ந்து சுடர்வதென
அபொன் மணிமகுட மாங்கமைத்து.

### பொழிப்புரை

மிகுந்த ஒளிக் கீற்றுக்களோடு கூடிச் செம்மையாக விளங்கு கின்ற சூரியன், இறைவனின் வலது கண்ணாக விளங்குகிற தன்னைப் போல் நிலவானது விளங்குகின்ற இடக் கண்ணாக அமைந்திருப்பதே யன்றித் திருமுடியையும் தனக்குரிய இடமாகக் கொண்டு புகுகின்ற செல்வ நிலையைக் கண்டு பொருதவனாகித் தானும் அதே முடியில் ஒன்றாகச் சேர்ந்து ஒளிவிடுவது என்ற கருத்தை மேற்கொண்டது போல அழகிய பொன்னாலாகிய மணி முடியை அங்கே அமைத்து.

### அருஞ்சொற் பொருள்

கதிர் - ஒளிக்கீற்று; கிரணம். செம்பருதி - சூரியன். பொன்மணி மகுடம்- பொன்னில் இரத்தினம் இழைக்கப் பெற்ற முடி.

### விளக்கவுரை

இறைவனின் வலக்கண்ணைச் சூரியனாகவும், இடக்கண்ணைச் சந்திரனாகவும் கொள்ளல் புராண முடிவு. இறைவன் சந்திரனை ஒரு கண்ணாக அமைத்ததன்றிப் பிறையை முடியிலும் அணிந்தார். இதைக் கண்ட சூரியன் எம்பெருமானின் இரண்டிடங்களைக் கொண் டான் சந்திரன்; நாம் ஒரு இடம்தான் கொண்டோம் என்று பொருமை கொண்டவனாய் நானும் அதே முடியில் நின்று ஒளி செய் கிறேன் பார் எனக் கருதி வந்து ஒளி செய்ததுபோல இருந்தது அந்த முடிபுனைந்தநிலை என்று கூறுகிறார். முடியைச் சூரியனாகக் கூறினார். பொதுத் தன்மை செம்மை ஒளி.

## 3. மகரகுண்டலம் அணிதல்

48. —விம்பம்

49. நண்இமகர மண்டலமா நன்முகத்திற் கேற்ப
மணிமகர குண்டலங்கள் வைத்து.

### பொழிப்புரை

ஒளி பொருந்திய சந்திரமண்டலம் என்று சொல்லத் தகும் நல்ல முகத்தினுக்கு ஏற்ப இரத்தினங்களால் ஆக்கப் பெற்றவையும், மகர மீன் வடிவாகச் செய்யப்பட்டவையும் ஆகிய குண்டலங்களைக் காது களில் வைத்து;

### அருஞ்சொற் பொருள்

விம்பம் - ஒளி, நண் - பொருந்திய, இமகரன் - சந்திரன். மகரகுண்டலம் - சுறாமீன் வடிவில் செய்யப் பெற்ற காதணி.

*விளக்கவுரை*

சந்திரமண்டலம் என்று சொல்லக்கூடிய முகத்தின் அழகுக்கு ஒத்த முறையில் குண்டலங்கள் அமைக்கப் பெற்றன.

## 4. திருக்கண்டி யணிதல்

49. — திணிகொள்

50. மணிகண்ட னென்னும் பேர் மற்றிதனு லென்ன
அணிமணிக் கண்டிகண்டத் தார்த்து;

*பொழிப்புரை*

திணித்தலைக் கொண்ட நீலகண்டன் என்னும் பெயர் இதனுல் தான் வந்தது என்று சொல்லுமாறு அழகிய இரத்தினங்களால் ஆக்கப்பெற்ற கண்டி என்னும் ஒருவகை அணியைக் கழுத்திலே கட்டி;

*அருஞ்சொற் பொருள்*

மணிகண்டன் - நீலகண்டன். கண்டி - ஒருவகை ஆபரணம்.

*விளக்கவுரை*

இறைவனுல் எடுத்து விழுங்கப் பெற்ற நஞ்சு இறைவியின் கையால் உள் செல்லாதவாறு ஓரிடத்திலேயே - கண்டத்திலேயே தங்குமாறு திணிக்கப்பட்டது ஆதலின் திணிகொள் மணிகண்டன் என்ருர். மணிகண்டன் என்பது இரத்தினத்தை அணிந்த கண்டத்தையுடையவர் எனவும் ஒரு பொருள் தோன்ற நின்றது. கண்டி என்பது கழுத்தைப்பற்றி மட்டுமே சுற்றியிருக்குமாறு அமைக்கப் பெறும் ஒரு வகை அணி. இதைக் கழுத்துப் பட்டை என்றும் கொள்ளலாம். கண்டி என்பதை உருத்திராக்க மாலையாக வும் கூறுவர்.

## 5. திருச்சாந்து அணிந்து பதக்கம் அணிதல்

50. — கணிதிருச்சாந்து

51. ஆகம் பவளா சலமென் றவிர்சடைவாழ்
மேகம் படிந்த விதமென்ன—மோகம்

52. முதிர முதிர முழுதுடம்புந் தேவிக்கு
எதிரி லவன்ஈந்த தென்ன—மதிநுதல்எம்

53. பொன்னனை யாட்களித்த போதிர வாதத்து
மன்னுபுகை மேற்பரந்த வண்ணமென—மின்னுறவே

54. வெம்மைக் கலிதீர்த்த மேல்நாள் நளன்தந்த
செம்மைப் பதக்கம்உரம் சேர்வித்து;

### பொழிப்புரை

இறைவனின் விளங்குகின்ற சடையில் வாழ்ந்து கொண்டிருக்கும் மேகம் அங்கே வந்து படிந்ததற்குரிய காரணம் இறைவனது திருவுடலை மேகங்கள் பவளமலை என்று கருதியதே என்று கூறுவதற்கு ஏற்பவும்,

இறைவியின் மேல் வைத்த மோகமானது முதிர்ச்சி அடைய அடையத் தன் முழுவுடம்பையுமே ஒப்புமையில்லாத இறைவன் இறைவிக்குக் கொடுத்து விட்ட செயலாகும் இது என்று கூறுவதற்கு ஏற்பவும்,

சந்திரனைப் போன்ற நெற்றியை உடைய எம்முடைப் பொன்னனையாளுக்கு இரும்பைப் பொன்னாக்கி அளித்தபோது செய்த இரசவாதச் செயலால் அமைந்த புகையானது மேலிருக்கக் கீழே பரந்த பொன் வண்ணம் இதுதான் என்று கூறுவதற்கு ஏற்பவும் மதிப்பினைப் பெற்ற அழகிய சந்தனச் சாந்தானது விளக்கம் அடைந்திருப்ப,

கொடுமை வாய்ந்த கலிபுருடனால் ஏற்பட்ட கொடுமையைத் தீர்த்த காரணத்தினால் முன்னொரு காலத்தில் நளன் கொடுத்த நற்பண்பமைந்த பதக்கங்களை மார்பில் சேர்த்து,

### அருஞ்சொற் பொருள்

அவிர் - விளங்குகின்ற. பவள+அசலம் - பவளாசலம் - பவளமலை. எதிரிலவன் - நிகரற்றவன். இரதவாதம் - உலோக மாற்றுத் தொழில். கணித்தல் - மதிக்கப் பெறுதல். கலி - கலிபுருடன். உரம் - மார்பு.

### விளக்கவுரை

அவிர்சடை வாழ் மேகம் படிந்த விதம் ஆகம் பவளாசலம் என்ன, முழுதுடம்பும் தேவிக்கு எதிரிலவன் ஈந்தென்ன, மன்னுபுகை மேற்பரந்த வண்ணமெனக் கணி திருச்சாந்து மின்னுற எனப் பொருள் கொள்ளும் முறை அமைக்கப் பெற்றது. சாந்தணியப் பெற்ற மார்பு பவளமலையையும், எம்பெருமாட்டியின் நிறத்தையும் பசுமை கலந்த பொன்னின் நிறத்தையும் நினைவூட்டியதால் இவ்வாறு கற்பனை செய்தார். இறைவனின் சடையில் நான்கு மேகங்கள் தங்கி வாழ்வதாகக் கூறல் புராண மரபு. இவைகளை விடுத்தே இந்திரனால் மதுரைக்கு விளைய இருந்த தீமையை நீக்கினாரென்று நான்மாடக் கூடலாக்கிய திருவிளையாடல் கூறும். இம்மேகங்கள் சாந்தணியப் பெற்ற இறைவனின் உடலைப் பவளமலையாகக் கருதிய காரணத்தால் அங்கு வந்து வாழ ஆரம்பித்தன எனக் கூறுகிறார். இறைவியின் மேல் மோகம் கொண்ட காரணத்தால் தன் உடம்பின்

பாதியை அவளுக்கு ஈந்தான் என்பது வரலாறு. பாதி உருவம் பெண், பாதி உருவம் ஆண் ஆக அமைத்து அர்த்தநாரீசுவர வடிவம் எனப் பெயர் கூறுவர். 'தம்பிரான் திருமேனியிற் செம் பாதியும் கொண்ட தையல் நாயகி' என்ற முத்துக்குமாரசாமிப் பிள்ளைத் தமிழாலும், இவ்வாசிரியரே முன் 27-ஆவது கண்ணியில் இறைவியைப் பசும்பாதி என்று குறித்ததாலும் உணர்க. இறைவி திருமாலின் தங்கையாதலின் 'பச்சைமாமலைபோல் மேனி' என்று புகழப்படும் திருமாலின் உடல் வண்ணமே பார்வதியின் உடல் வண்ணமாகக் கருதப்பட்டது. பவளாசலம் போல் இருக்கிறது என்ற நினைவு கொண்ட ஆசிரியர் இறைவியின் வண்ணம் நினைவு வர இத்தகைய கற்பனையை அளித்தார். சாந்தணிதல் என்பது இறைவன் திருமேனியைப் பரிமளம் கலந்த சந்தனச் சாந்தினால் மறைத்தல். இதனைச் சந்தன நிறையணி எனவும் கூறுவர். இது மக்களால் பெரிதும் மதிக்கப் பெறும் தன்மை உடையது ஆதலின் கணி திருச்சாந்து எனப்பட்டது. நளனுக்குக் கலிபுருடனால் ஏற்பட்ட வெம்மையைத் தீர்த்த செயல் மேல் 24-ஆம் கண்ணியாலும் விளக் கப் பெற்றது. நளன் தந்த பதக்கம் மூன்று இன்றும் இருப்பதாகக் கூறுவர். இலக்கணங்களிற் குறைவுபடாது அமைக்கப்பட்டது ஆதலின் செம்மைப் பதக்கம் எனக் கூறினர்.

## 6. திருத் தோள்வளை அணிதல்

54. —தம்மைத்

55. திருவரைக் கோமாட்டி தினந்தழுவும் கைபோல்
மரகதக் கேயூரம் வளைத்து,

*பொழிப்புரை*

அழகிய இமயமலையரசியாகிய பார்வதியி னுடையதும் நாள் தோறும் தழுவுகின்றதும் ஆகிய கையைப்போல் பச்சை மணி களால் இழைக்கப் பெற்ற தோள்வளையைத் தோளில் வளைத்து அணிந்து.

*அருஞ்சொற் பொருள்*

வரைக் கோமாட்டி - பார்வதி. கேயூரம் - தோள்வளை.

*விளக்கவுரை*

பார்வதி பச்சை நிறத்தாள் என்பது மேலே பெறப்பட்ட தாத லின் தோளை வளைத்துத் தழுவியிருக்கும் கையைத் தோளை வளைத் திருக்கும் தோள்வளைக்கு உவமையாகக் கூறினர்.

## 7. திருக்கைவளை அணிதல்

55.

—பருநன்

56. மணிக்கை வளையென்ன வரும்பேர்க்கு இசைய
மணிக்கை வளைக ரத்தில் வைத்து;

### பொழிப்புரை

பெரியவும் நல்லவும் ஆகிய இரத்தினங்களால் ஆக்கப் பெற்ற கைவளை எனக் கூறும் பெயருக்குப் பொருந்துமாறு இரத்தினங்களால் ஆக்கப் பெற்ற சிறுவளைகளைக் கையிலே சேர்த்து;

### அருஞ்சொற் பொருள்

கைவளை - சிறுவளை.

### விளக்கவுரை

கூறும் பெயருக்கு ஏற்ற பொருத்தம் உடையதாகவே அவ்வணி இருந்தது என்பது ஈண்டுக் குறித்தது.

## 8. திருச் சிலம்பு அணிதல்

56.

—துணைக்கமலப்

57. பூவிற்கு அருகு உதிக்கும் பூங்கதிர்போல் நாமெல்லாம்
சேவிக்க ரத்னச் சிலம்பணிந்து;

### பொழிப்புரை

இரண்டாகிய தாமரைப் பூவிற்குப் பக்கத்தில் தோன்றுகின்ற அழகுடைய உதய சூரியன்போல நாம் எல்லாம் வணங்குமாறு இரத்தினங்களால் ஆக்கப் பெற்ற சிலம்பினை அணிந்து;

### அருஞ்சொற் பொருள்

துணை - இரண்டு. கதிர் - சூரியன். சேவிக்க - வணங்க.

### விளக்கவுரை

இரத்தினங்கள் இழைத்துச் செய்யப்பட்ட சிலம்புகளுக்குச் சூரியனை உவமையாக்கினார். இரண்டு திருவடிகளை இரண்டு தாமரைகளாகக் கூறினார். மக்களின் உள்ளங்களாகிய தாமரைகளையும், திருவடிகளாகிய தாமரைகளையும் ஒரு சேர நெகிழ்விப்பது சிலம்பின் ஒலி என்ற கருத்தை உள்ளடக்கி நாமெல்லாம் சேவிக்க என்பதையும் உடன் அமைத்தார். சிலம் பொலியால் மக்களின்

உள்ளத் தாமரையை மலர்வித்தலைச் சேரமான் பெருமாள் நாயனர் புராணத்தாலும் உணர்க.

## 9. திருவாசிகை சேர்த்துதல்

57. —மேவுற்ற

58. தம்பொற் சடைக் கிடக்கும் தண்கார்மின் னிட்டனைய
செம்பொன் திருவாசிகை சேர்த்தி;

### பொழிப்புரை

பொருந்துதலைக் கொண்ட தம்முடைய அழகிய சடையிலே அமைந்து கிடக்கின்ற குளிர்ச்சி பொருந்திய மேகம் மின்னலைச் செய்தாற் போல, செம் பொன்னால் ஆக்கப் பெற்ற திருவாசிகை என்னும் அணியை முடியில் வைத்து;

### அருஞ்சொற் பொருள்

மேவுறுதல் - பொருந்துதல். பொற்சடை - அழகியசடை. கார் - மேகம். மின் - மின்னல். திருவாசிகை என்பது முடியில் வைக்கப்பெறும் ஒருவகை அணி.

### விளக்கவுரை

இறைவன் சடையில் அமைந்திருக்கும் மேகம் மின்னலிட்டது போல முடியிலே பொன்மயமாக ஒளிவிடும் திருவாசிகை என்னும் அணி வைக்கப் பெற்றது. இனி, திருவாசிகை என்பதற்கு அலங் காரம் செய்யும்போது பின்னால் வைக்கப்பெறும் வாகனப் பிரபை எனப் பொருள் கொள்ளலும் ஒன்று. அது ஈண்டு அவ்வளவு பொருந்துவதில்லையாம். இனி எம்பெருமான் சடையில் மேகம் கிடத்தல் மேல் 51-ஆவது கண்ணியாலும் உணர்த்தப்பட்டது. செய்து என்னும் வாய்பாட்டு வினையெச்சம் தன் கருத்தாவின் வினையைக் கொண்டே முடியவேண்டுவது இலக்கண வரையறை யாதலின் அபிடேகம் கொண்ட இறைவன் தானே ஆடை புனைந் தருளினான், மகுடம் அமைத்துக்கொண்டான் எனக் கொள்க. விழாநாளாதலின் அலங்காரம் செய்யப்பட்டது பிறரால் எனக் கொள்ளாது தானே செய்து கொண்டதாகக் கொள்ளுவதே பொருத்தமுடைத்து. இல்லையேல் கண்ணாடி பார்த்தருளி என்ற வினையோடு பொருந்துதல் இல்லை யென்க. இதுவரை இறைவனின் அணியணிதல் கூறப்பெற்றது.

# திருத்தேர் ஏறுதல்

## 1. கண்ணுடி பார்த்தருளுதல்.

58. —எம்பிரான்

59. மேன்மை வடிவமுடி மேற்பெண் தியானிக்கும்
பான்மையெனக் கண்ணுடி பார்த்தருளி ;

*பொழிப்புரை*

எம்பெருமானும் பூவணத் திறைவனுடைய மேன்மை மிகுமாறு அலங்கரிக்கப் பெற்ற வடிவத்தை முடிமேல் இருக்கும் பெண்ணுகிய கங்கை தியானிக்கும் தன்மை இதுவாகும் என்று கருதுமாறு கண்ணுடியைப் பார்த்தருளி,

*அருஞ்சொற் பொருள்*

முடிமேற் பெண் - கங்கை.

**விளக்கவுரை**

எம்பெருமானின் அலங்கரிக்கப் பெற்ற திருமேனிச் சிறப் பழகைக் கங்கைப் பெண்ணனவள் கண்டு வணங்குதற்கு வாய்ப்பு அளிக்கும் முறையெனக் கண்ணுடி பார்க்கிருர் இறைவன். எல்லாக் கோயில்களிலும் அலங்காரம் முடிந்ததும் கண்ணுடி காட்டப் பெறு தல் என்ற ஒரு செயல் நடைபெறும். அதற்கு ஆசிரியர் காரணங் கூறுகிருர்; எம்பெருமானின் செயல் ஒன்றும் அருளின்றி நடவாது என்னும் கருத்தை விளக்கவே கங்கையின்மேல் வைத்த அருள் காரணமாகவே கண்ணுடி பார்க்கப்படுகிறது எனக் கூறினுர். கண்ணுடியில் எம்பெருமானின் உருவம் தோன்றும்போது தலையில் இருக்கும் கங்கை பார்த்து மகிழ்வெய்துகிருள் என்க. அன்றி முடிமேற் பெண் வந்து தியானிப்பது போலக் கண்ணுடி காட்டப் பெற்றது என உரை கொள்வது முண்டு. இவ்வுரையில் முடிமேற் பெண்ணுகிய கங்கை கண்ணுடிக்கு உவமையாகக் கூறப்படுகிறது; கங்கை நீர் கண்ணுடி போன்றிருப்பதாதலின்.

## 2. திரு ஆராதனை கொள்ளல்.

59. —நான் மறை நூல்

60. ஓர்ந்த மறையோர் செயும் உபசாரம் ஈரெட்டில்
சார்ந்ததிரு ஆராதனை கொண்டு;

*பொழிப்புரை*

நான்கு வேத நூல்களையும் ஆராய்ந்த மறையவர்களால் செய்யப் பெறும் பதினுறுவகை வழிபாடுகளோடு சேர்ந்த திரு ஆராதனை யையும் ஏற்று.

*விளக்கவுரை*

உபசாரம் ஈரெட்டும் ஷோடசோபசாரம் என வழங்கப்பெறும். சோடசவுபசாரம் - பதினாறு வகை வழிபாடு. அடைகாய் தரல், அமுதம் ஏந்தல், ஆசமன நீர்தரல், ஆடை சாத்தல், கருப்பூர தீபம் ஏந்தல், கால்கழு நீர்தரல், கைகழுநீர்தரல், தவிசளித்தல், தேய்வை பூசல், நறும்புகை காட்டல், நீராட்டல், மஞ்சளரிசி தூவல், மந்திர மலரானருச்சித்தல், மலர்சாத்தல், முப்புரிநூல் தரல், விளக்கிடல் என்பன. கோயில்களில் நடக்கும் ஆராதனையை இரண்டாகப் பிரிக்கலாம். வேதங்கூறி அருச்சனை செய்வதற்கு முன்னர் நிகழ்த்தப் பெறும் நெய்த்திரிகளால் அமைக்கப் பெரும் ஆரா தனை ஒருவகை. பின் வேதமோதி அர்ச்சனை செய்து பஞ்சபுராணம் பாடுதல் என்று வழங்கப் பெறும் தமிழோடிசை பாடல் முடிந்த பின் செய்யப்பெறும் கருப்பூரக் கினை ஆராதனை ஒரு வகை. இவைகளுள் இக்கண்ணியால் குறிக்கப் பெறுவது முதற் கண் குறிப்பிட்ட ஆராதனை. திரு ஆராதனையைப் படைத்தல் என்று உலக வழக்கிற் குறிப்பர்.

## 3. இருமறை கேட்டல்

60 —தேர்ந்தங்கு

61 எழுதாச் சுருதி எழுதும் சுருதி
செழுமாத் திருச் செவியுட் சேர்த்தி

*பொழிப்புரை*

எழுதாக் கிளவி எனக் கூறப்படும் வேதங்களையும், எழுதும் கிளவி எனக் கூறப்பெறும் செவியமுதாய் வீடளிக்கும் பன்னிரு திருமுறை, திருப்புகழ் முதலியவைகளையும் அணு அணுவாக ஆராய்ந்து, செழுமை பொருந்தியதும் பெருமை பொருந்தியதும் ஆகிய திருச் செவியுள் சேர்த்து,

*அருஞ்சொற்பொருள்*

எழுதாச் சுருதி - நான்மறை. எழுதும் சுருதி - தேவார திருவாசகம் முதலி யன. தேர்தல் - ஆராய்தல். மா - பெருமை. எழுதாச் சுருதி எழுதும் சுருதி தேர்ந்து அங்கு செவியுள் சேர்த்தி என மாற்றிக் கொள்ளுக.

*விளக்கவுரை*

பதினாறு வகை வழிபாடு என மேற்குறிப்பிடப்பட்ட வழிபாடு முடிந்தபின் எல்லாவகை ஒலிகளும் நிறுத்தப்பெறும். பின்னர் வேத மோதி திருமலர், இலைகளால் அருச்சனை செய்யப் பெறும். பின்னர் இனிய தமிழில் அமைந்த தேவார திருவாசகப் பாக்களை முறையாக

ஓதுவார்கள். வேதத்தொலி கேட்ட விகிர்தனுர், தமிழோடிசை பாடல் மறந்தறியாத தகைமையுடையவர் வாயிலாக அப் பாக்களை யும் இனிதுறக் கேட்டார். தேர்தல்-அணு அணுவாக ஆராய்தல். அணுத்திரள் ஒலியால் எழுத்தும், எழுத்தால் சொல்லும் ஆக்கப் பெற்றுப் பொருளுணரப்படுதலின் சொல்லால் குறிப்பிடப்படும் நேர்ப் பொருளோடமையாது ஒலி முதலியவற்ருல் வரும் நயப் பொருள்களையும் ஓர்ந்து உணர்தல். இவ்வாறு உணரும் தன்மை பெற்றதாலேயே செவியும் செழுமாத் திருச் செவியென அடை மொழி பெற்றது. கடமைக்குக் கேளாது கருத்தொடு கேட்டலை நினைவுறுத்துகிறது சேர்த்தி என்ற சொல்லின் நயம்.

## 4. திருத்தண்டு ஏறி வாயில் கடத்தல்

61 ... ... ... —குழுமித்

62 தரும்ஓசை தேவர் சயசய என்ன
வரும்ஓசை மாமுனிவர் ஓசை—இருவர்

63 நரம்புஓசை தெய்வநந்தி நம்பிரான் செங்கைப்
பிரம்புஓசை யோடும் பிறங்க—விரும்புஓசைச்

64 சீர்மணிப் பொற்கோயில் திருப்பேர் சுமந்தருள
வார்மணிப் பொன்தண்டில் மகிழ்ந்தேறி—நீர்மை

65 உணர்வுஅரும் பல்தேவர் ஒதுங்க அடியார்
கணநெருங்கும் வாயில் கடந்து ;

*பொழிப்புரை*

தமிழிசைப் பாடல் முடிந்தபின் கருப்பூரக் கிளை எடுக்குங்கால் எல்லா வாச்சியங்களும் திடீரென ஒரு சேரச் சேர்ந்து உண்டாக்கும் ஓசையும், தேவர்கள் சய சய என்று கூறுவதால் வரும் ஓசையும், சிறந்த முனிவர்கள் எழுப்பும் ஓசையும், தும்புரு நாரதர் என்னும் இருவரும் எழுப்புகின்ற வீணையோசையும், தெய்வநந்தி எனக் கூறப்படும் நமது தலைவன் தேவர் முதலியோர் விலகி நிற்குமாறு தம் பிரம்பைச் செங்கையால் வீசுதலால் உண்டாகும் ஒலியோடு விளங்க,

விரும்பத் தக்க ஓசைகள் பலவற்றைக் கொண்டதும், பல் வகைச் சிறப்பு என்னும் இரத்தினங்கள் ஒளி வீசுவதும் அழகுடைய தும் ஆகிய திருக்கோயிலிலே இருக்கும் இறைக் காரியம் செய்பவர் சுமக்க, நீண்டதும், மணிகள் பதித்ததும், அழகியதும் ஆகிய திரு வாடு தண்டில் மகிழ்ச்சியோடு ஏறி, இவ்வளவு என்று அளவிட

முடியாத பெருந்தன்மையினை யுடைய பல தேவர்கள் விலகி நிற்க அடியவர் கூட்டம் மிகுந்திருக்கும் திருக் கோபுர வாயிலைக் கடந்து.

### அருஞ்சொற் பொருள்

குழுமித்தரும் - கூட்டமாகத் தருகின்ற. நரம்பு - வீணைக்கம்பி. பிறங்க - விளங்க. திருப்பேர் - சிவனுக்குரிய காரியங்களைச் செய்யும் கோயில் வேலைக்காரர்கள். பொன்தண்டு - அழகிய திருவாடு தண்டு. திருவாடுதண்டு என்பது உற்சவ விக்கிரகத்தை வெளியே தூக்கிச் செல்லுவதற்கு வேண்டி அன்பர்களின் தோளில் வைக்கப்பெறும் மரத்துண்டு. இருவர் - தும்புரு நாரதர் என்ற இருவர். நீர்மை - மேன்மைத்தன்மை. உணர்வு அரும் – அறிதல் இல்லாத. அடியார் கணம்-அடியார் கூட்டம்.

### விளக்கவுரை

பல்வகை வாத்திய ஒலிகளெல்லாம் ஒலிக்காது அமைதியாயிருந்து பின் திடீரெனச் சேர்ந்து ஒலிப்பதால் குழுமித் தரும் ஓசை எனப்பட்டது. நந்தியெம்பிரானின் தொழில் காவல் ஆதலின் பிரம்பு கொண்டு தேவர் கணங்களை விலக்குதலின் ஓசை எழுந்தது. இதை,

> "படிகொள் மாமுடிக் கங்கணத்து இறைபதம் படும் ஒண்
> முடிகள் யாவையும் படுகழல் நந்தியெம் முதல்வன்
> அடிகள் ஏந்துகைஉற அடித்து ஒதுக்கி அவ்வவையைக்
> கடிகொள் மாலையம் பிரம்பொடு திரிந்தனன் களித்து,"

என்ற சிவப்பிரகாசர் வாக்காலும் உணரலாம். விரும்பு ஓசை சீர் மணி பொன் கோயில் என்பதற்கு விரும்புகின்ற ஓசைகளைக் கொண்டது என்றும், சீர் என்பதற்குச் சிறப்புக்கள் என்றும், மணி என்பதற்கு இரத்தினங்களைக் கொண்டது என்றும், பொன் கோயில் என்பதற்கு அழகிய கோயில் என்றும் உரை செய்யப்பட்டது. பல்+தேவர்=பஃறேவர். அவர்களின் பெருமை அளவில் விஞ்சியது; யாவராலும் உணர்தல் இயலாதது. ஆதலின் நீர்மை உணர்வு அரும் பல்தேவர் என்றார். தேவர்கள் விலகி நிற்க, அடியவர்கள் நெருங்கி யிருந்தார்கள் என்பதாம். பல பெருமை யுடையராக இருந்தாலும் தேவர்களுக்கு அருமையுடையவனாகவும் அடியவர்களுக்கு எளிமையுடையவனாகவும் இறைவன் இருக்கிறான் என்பதாம்.

> "வானோர்க்கரிய மருந்தே போற்றி
> ஏனோர்க்கெளிய இறைவா போற்றி" என்பது திருவாசகம்.

இனி உணர்வரும் பல்தேவர் என்பதற்கு இறைவனின் பெருமையை அறிவதற்கு இயலாத பலதேவர் என உரைகொள்வாரும் உளர்.

## 5. திருத்தேர் ஏறுதல்

65 ... ... ... —மண நெருங்கும்

66 தென்றல் நடந்துஇனிது சேவிப்பத் தென்பாண்டி
இன்தமிழ் நாடுஉய்ய எழுந்தருளி—கொன்றைஅளி

67 பாடும் சடைக்கணிந்த பாகீரதிக்கு ஏறி
ஆடும் படிபறக்கும் அன்னம்என—மாடுஇரட்டு

68 நீடு கவரிநிரை துள்ள மாமணித்தேர்
ஊடு கவுரியுடன் ஏறி ;

*பொழிப்புரை*

நறுநாற்றம் மிகுதியும் கொண்டிருக்கும் தென்றல் நடந்து இனிமையுடன் வணங்க, இனிமை செழிக்கும் பாண்டி என்னும் பெயர் கொண்ட இனிய தமிழ்நாடு வாழ்ந்து நன்னெறியடையு மாறு எழுந்தருளி வந்து,

கொன்றையில் உள்ள தேனை உண்ணும் வண்டுகள் பாடிக் கொண்டிருக்கிற சடையில் தங்கியிருக்கின்ற கங்கையில் பாய்ந்து ஆடுவதற்காக மேல் நோக்கி விரைந்து எழுகின்ற அன்னப் பறவை கள் போலப் பக்கங்களிலே மாறி மாறி அசைகின்றனவும், கவரி மான்களின் மயிர்த் தொகுதியால் செய்யப் பெற்றனவும் ஆகிய கவரிகளின் வரிசை துள்ளிக் கொண்டு இருக்க, பெரியதும் மணிகள் அமைக்கப் பெற்றதும் ஆகிய தேரின் நடுவே மின்னனையாளுடன் ஏறி, திருப்பூவணக் காசி ஊருடையான் போந்தான் உலா என்று இறுதிக் கண்ணியில் (469) சென்று முடிவு பெறும்.

*அருஞ்சொற் பொருள்*

அளி-வண்டு. பாகீரதி-கங்கை. மாடு-பக்கம். இரட்டுதல்-அசைதல். நிரை - வரிசை. ஊடு-நடுவே. கவுரி-கௌரி; உமையம்மையின் ஒரு திருவுருவைக் குறிக்கும் பெயர். இங்கே மின்னனையாளைக் குறித்தது.

*விளக்கவுரை*

மலயத்தில் பிறக்கும் மந்தமாருதம் இன்தமிழ் மணத்தோடு (அகத்தியர் பொதியிலில் இருப்பதால்) பல்மணமும் பெற்றுக் 'கருமுதிர் தாய்' போல் வருதலின் மண நெருங்கும் தென்றல் நடந்து என்றார். 'தென்பாண்டி' என்பதில் 'தென்' என்பதற்கு இனிமை என்று பொருள் கொள்ளப்பட்டது. 'தென்பாண்டி' என்பது கொடுந் தமிழ் நாடுகளில் ஒன்று. தமிழ் பேசும் நிலமாயினும் செந்தமிழ் நிலமாக, அது கருதப்படாது. இதை அறிந்த ஆசிரியர், 'தென்

பாண்டி' என்பதற்குக் கொடுந் தமிழ் நாடு எனப் பொருள் கொள்ளலாகாது என்பதற்காகத் தாமே, 'இன்தமிழ் நாடு' எனக் குறித்துப் போந்தார். 'சடைக்கணிந்த' என்பது சடையில் இருந்து அழகு செய்த அல்லது சடையில் இருந்த என்ற பொருளள வில் நின்றது. கங்கையைச் சடைக்கு அணியாக அணியப்படுதல் இல்லையாதலின் சடைக்கு அணி (அழகு) தந்த பகீரதி என்றும் அமைக்கலாம். பகீரதனுல் நிலவுலகத்துக்குக் கொண்டு வருங்கால் எம்பெருமானின் சடையில் நிறுத்தப்பெற்றது ஆதலின் 'பாகீரதி' எனப் பெயர் பெற்றது; தத்திதாந்த நாமம். கவரிக்கு அன்னத்தை உவமையாக்கினுர். அன்னம் ஆகாய கங்கையில் ஆடவிரும்பும். ஆகாய கங்கையில் ஆடவிரும்பி மேலே பறக்கும் அன்னத்தைப் போல இருந்தன கவரிகள் ஆடுவது எனக் குறித்தார்.

## தேரின் முன்னர் அமைந்துள்ள குடை, பீலி ஆகியவற்றின் தோற்றம்

68 ... ... ... ... சூடியதன்

69 பிள்ளைமதி பார்க்கப் பெருமதி வந்தென்ன நிலாக்
கொள்ள உயர்வெண் குடைஓங்க—விள்ளும்

70 கொடைக்கடவுள் நல்லான் குழாம்புக்கு விண்ணின்
விடைக்கொடி நின்றுஆங்கு விளங்கச்—சுடர்க்கடவுள்

71 பன்னிருவர் அலர்மதி பார்த்திடினே ஒன்றுஅன்றுல்
உன்னின் அநேகர் உளரென்ன—மின்னுகதிர்க்

72 கோலநிறை ரத்னக் குடையும் பருமுத்தின்
சீலமணிக் குடையும் சேண்நிழற்ற—மேலை

73 வினைப்பகையார் வம்மின் வினைக்குரியார் போமின்
எனப்பீலி ஆடி இலங்க ;

*பொழிப்புரை*

நிலவைக் கொள்ளுதற்காக மேலோங்கிய வெண்கொற்றக் குடையானது இறைவன் சடையில் சூடப் பெற்றிருக்கிற தன்னுடைய குழந்தையாகிய பிறை நிலவைப் பார்ப்பதற்காகப் பெரிய நிலவு வந்திருக்கிறது என்று கூறுமாறு நின்று விளங்க;

காளை வடிவம் பொறிக்கப் பெற்ற எம்பெருமானின் வெற்றிக் கொடிகளானவை, எல்லாராலும் புகழ்ந்து பேசப் பெறுகிறதும் கொடுத்தல் தன்மையுடையதும் தெய்வச் சாதியைச் சேர்ந்ததும் ஆகிய நல்ல காமதேனு என்னும் பசுக் கூட்டம் ஆகாயத்தில் புகுந்து ஒன்று சேர்ந்து நின்றதுபோல விளங்க;

சுடர் விடும் கடவுளாகிய சூரியனும் ஆராய்ந்தால் பன்னிருவர் என்று கூறுதற்கு உரியர் அல்லர். ஆராய்ந்தால் மதியும் ஒன்றல்ல; பற்பல உண்டு என்று கூறுமாறு மின்னுகின்ற ஒளியும், அழகும் நிறைந்துள்ள இரத்தினக் குடையும், வடிவாக இருக்கின்ற முத்தின் நல் இலக்கணம் அமையப் பெற்றதாகிய அழகிய குடையும் மிகத் தூரத்திலே நின்று ஒளிவிட;

வரும் பிறவிக்குக் காரணமாக இருக்கும் நல்வினை தீவினைகளை வெறுத்து, அவ்வினைகளின் பகைவராக ஆகியுள்ளவர்களே எம்பெருமான் திருவடிப் பேற்றை-வீட்டுலகை அடைய வாருங்கள் என்றும், பிறவியை மேற்கொள்ளுதற் குரியராய் வினைகளைச் செய்தவர்களே - அவ்வினைகளின் பயனை அனுபவித்தற் குரியராய்ச் செல்லுங்கள் என்றும் கூறுவதுபோல் மயிலிறகாற் செய்த சிற்றால வட்டம் இங்கு மங்கும் அசைந்து விளங்க;

### அருஞ்சொற் பொருள்

பிள்ளைமதி - சிறு மதி; பிறை. பெருமதி - பூரணநிலா. விள்ளும்-புகழ்ந்து பேசுகின்ற. விடைக்கொடி - காளை வடிவம் பொறித்த கொடி. சுடர்க்கடவுள்-சூரியன். உன்னின் - நினைத்தால். கோலம்-அழகு. சேண் - தூரம். நிழற்றுதல் - நிழல் செய்தல்; ஒளி விடுதல். வினை - பிறவிகளில் செய்யப் பெறும் ஊழின் விளைவு.

### விளக்கவுரை

பூவணத் திறைவன் போகமுற்பட்ட காலை வெண்கொற்றக் குடை அமைக்கப் பெறுகிறது. இதன் உயரத்தை ஆசிரியர் தற்குறிப்பேற்றமாக அமைக்கிறார். நிலவைத் தன்னுடைய நிறத்தாலும், வடிவாலும், பண்பாலும் வெற்றி கொள்ளக் கருதி உயர்ந்தது என்பதை நிலாக் கொள்ள உயர் வெண்குடை என்றார். அடுத்து அது எம்பிரான் பக்கலின் இருப்பதை எண்ணி, இறைவனுடைய சடையில் இருக்கிற குழந்தைமதியைப் பார்ப்பதற்குத் தாய்மதி வந்தது போல உள்ளது எனத் தற்குறிப் பேற்றுகின்றார். வெண்கொற்றக் குடையோடு திங்கள் உவமித்துச் சொல்லப்படுவதைத் ' திங்களைப் போற்றுதும், திங்களைப் போற்றுதும், கொங்கலர் தார்ச் சென்னி குளிர் வெண்குடை போன்று இவ்வங்கண் உலகு அளித்தலால்' என்ற சிலப்பதிகாரம் நோக்கி உணர்க. 'பிள்ளை மதியினை முன் பெற்றெடுத்த தாய்மதிபோல் வெள்ளை மதிக் கவிகை மேனிழற்ற,' என்ற திருவெங்கையுலாவின் கருத்து பின்னுள்ள தற்குறிப் பேற்றத்துள் அமைந்திருக்கின்றது.

இறைவனுக்குக் காளை வடிவம் பொறிக்கப்பட்டதே வெற்றிக் கொடியாம். ஒவ்வொரு கொடியிலும் மாட்டின் வடிவம் எழுதப்பட்டுள்ளதால் - இவ்வாறு பல கொடிகள் உயர்த்தப்பட்டிருப்பதால்

தெய்வலோகத்திலுள்ள காமதேனுவின் கூட்டமே ஆகாயத்தில் நின்று விளங்குவதுபோல் இருக்கிறது என்றார். நல்லான்-காமதேனு. அது எல்லாராலும் புகழ்ந்து பேசப் பெறுவது. வேண்டியார்க்கு வேண்டிய கொடுக்கும் கொடைத் தன்மை வாய்ந்தது; தெய்வத் தன்மை பெற்றது ஆதலின் விள்ளும் கொடைக் கடவுள் நல்லான் எனப்பட்டது. நன்மை+ஆ. ஆ என்பது னகர வொற்றுப் பெற்று 'ஆன்' என நின்றது. சூரியர் பன்னிருவர்; சந்திரன் ஒருவனே யென்பது புராண முடிவு. இக்கருத்தை முன்னர் (கண்ணி 2) சந்திரற் கும் சூரியர்க்கும் எனக் குறித்த ஒருமை பன்மையாலும் உணரலாம். சூரியன் ஒளி செம்மையாகவும் சந்திரன் ஒளி வெண்மையாகவும் இருப்பதை ஒட்டி இரத்தினக் குடையும் முத்துக் குடையும் உவமை களாகக் கூறப் பெற்றன. பீலி - மயிலிறகாற் செய்த சிற்றாலவட்டம். இது இரு பக்கங்களிலும் சென்று சென்று அசைவதை வினைப்பகை யார் வம்மின், வினைக்குரியார் போமின் என்ற கருத்தை வெளியிடுவ தாகக் கூறியது தற்குறிப்பேற்ற வணி. நல்வினை, தீவினை ஆகிய இரண்டுமே பிறவியை அளிப்பதாதலின் இருவினையையும் சமமாகக் கருதி நீக்கும் இருவினையொப்பு வரப் பெற்றவர் வினையின் பகைவர் எனப்பட்டார். வினை வழிச் செல்லாது வினையை எதிர்த்தவரே இறைவனை அடைதற் குரியார் ஆனமையின் வினைப்பகையார் இறைவனை அடைய வம்மின் எனவும், வினையை மேற்கொண்டவர் அனுபவித்துத் தீர்த்தற்குரியார் ஆனமையின் விரைந்து செல்க எனவும் கூறுமாறு பீலியாடியது எனக் குறித்தார். இது கண்ணனைப் படைத்துணை யழைக்க வந்த துரியோதனனை வர வேண்டாமென் றும், அருச்சுனனை வருக என்றும் அழைப்பன போல் துவாரகை மதிற் கொடிகள் ஆடின எனக் கூறிய வில்லிபுத்தூரார் கருத்தோடு ஒட்டியுணர்தற்குரியது. மேலை வினைப்பகையார் என்றார் இப்பிறப் பில் செயத்தகும் வினைகளுக்கு முற்பிறவி வினையே காரணமாதல் பற்றி.

## உடன் வருவோர்

பூவணத்திறைவன் தேரேறி உலாப் போந்த காலை உடன் வந்த வர்கள் யார் யார் என்பதை எழுபத்து நான்காம் (74) கண்ணி முதல் நூற்று ஏழாம் (107) கண்ணியின் முதல் வரி வரை விரித்துக் கூறுகின்றார்.

### விநாயகர் முருகர் முதலானோர் வருகை

73 ... ... ... ... பனைக்கைமுகன்

74 மூடிகத் தேர்ஏறி முன்நடப்பச் செய்கலவ
நாடகத் தேர்ஏறி நடந்தருள—ஊடுஅணையும்

75 அன்னத் தேர்ஏறி அயன்மால் திருக்கருட
வன்னத் தேர்ஏறி மருங்குவரப்—பொன் ஒத்த

76 ஆதித்தர் ஆறுஇருவர் ஆறுஇரண்டு ஏழ்புரவிச்
சோதிப் பொன்தேர்ஏறிச் சூழ்போகக்—கோதுஅற்ற

77 சீதக் கதிர்முத்தின் தேர்மீதில் புட்பகத்தேர்
மீதில் பெருந்தோழன் மேவிவரத்—தீதுஅற்று

78 வந்தணையும் வெள்ளை மதஅயி ராவதத்தேர்
இந்திரன் ஏறி இனிதுஎய்தச்—செந்தழலோன்

79 நீதி மறலி நிருதிவருணன் பவனன்
ஆதி ஈசானன் அடலூர்தி—மீதுவரக்

80 கூறும் பதினொருவர் கூறரும்சாத் தன்வடுகன்
ஏறுஉம்பல் ஞாளியினிற் போத—மாறுஇன்றி

81 ஏழ்முனிவர் எண்மர் இருவர் ஒருதனித்தம்
தாழ்வுஇல் விமானம் தமில்செல்லச்—சூழ்இயக்கர்

82 கந்தருவர் சித்தர் கருடர் சுரருரகர்
வெந்திறற் கின்னரர் சேவித்துவர ;

*பொழிப்புரை*

பனைமரம் போன்ற துதிக்கையையுடைய யானைமுகத்தவனும் விநாயகன் பெருச்சாளி வாகனமாகிய தேரின்மேல் ஏறி முன்னால் நடந்து செல்ல,

முருகன் தோகையோடு கூடி நாடகம் ஆடுகின்ற மயில் என்னும் தேரின்மேல் ஏறி நடந்தருள,

பிரமன் பக்கத்தே அணைந்து வரும் அன்னமாகிய தேரில் ஏறியும், திருமால் உயர்ந்த கருடன் என்று சொல்லுகிற அழகிய தேரில் ஏறியும் இரண்டு பக்கங்களிலும் வந்து கொண்டிருக்க,

பொன்னைப் போலும் செம்மை மேனியையுடைய பன்னிரண்டு சூரியர்கள் ஏழு குதிரைகள் பூட்டப் பெற்றனவும், ஒளியுடையனவும், பொன்னாற் செய்யப் பெற்றனவும் ஆகிய பன்னிரண்டு தேர்களில் தனித்தனியே ஏறிச் சூழ்ந்து செல்ல,

குற்றமற்ற குளிர்ச்சியான கிரணங்களைச் செய்கின்ற சந்திரன் முத்துக்களால் அலங்கரிக்கப் பெற்ற முத்து விமானத்திலும்,

இறைவனின் சிறந்த தோழனாகிய குபேரன் புட்பக விமானத்தின் மீதிலும் பொருந்தி வந்து கொண்டிருக்க,

இந்திரன் தீமை நீங்க வந்து சேரப் பெறுவதும், வெள்ளையானதும், மதம் ஒழுகப் பெறுவதும் ஆகிய அயிராவதம் என்னும் தேரில் ஏறி இனிமையாக வந்து சேர,

செம்மையான நெருப்புக் கடவுள் (அக்கினி), நீதி தவருத இயமன், நிருதி, வருணன், காற்றுக் கடவுள், ஆதியாகிய ஈசானன் ஆகியோர் தங்கள் தங்களுடைய வெற்றி பொருந்திய வாகனங்களில் ஏறி வந்து கொண்டிருக்க,

புகழ்ந்து பேசப் பெறும் பதினொரு உருத்திரர்களும், கூற முடியாத பெரும் புகழ் படைத்த ஐயனாரும், வைரவக் கடவுளும் முறையே காளைகளிலும் யானையிலும், நாய்மேலும் வந்து கொண்டிருக்க, மாறுபாடில்லாமல் ஏழு முனிவர்களும், எண்மரும் (அட்டவசுக்கள்), இரு மருத்துவர்களும், ஒப்பற்றதும் தங்கள் தங்களுக்குச் சொந்தமானதும் குறைபாடு இல்லாததும் ஆகிய விமானத்திற் சென்று கொண்டிருக்க.

இயக்கர், கந்தருவர், சித்தர், கருடர், தேவர், நாகர், வெம்மையாம் வலிமை கொண்ட கின்னரர் முதலியோர் சூழ்ந்து சேவித்து வர,

### அருஞ்சொற் பொருள்

பணைக்கைமுகன் - விநாயகன். மூஷிகம் - பெருச்சாளி. சேய் - முருகன். கலவம் - தோகை. வன்னம் - அழகு. புரவி - குதிரை. கோது - குற்றம். சீதக் கதிர் என்பது இங்கே சந்திரனைக் குறித்தது. தோழன் - இங்கே குபேரனைக் குறித்தது. மறலி - இயமன். பவனன் - காற்று. அடல் - வெற்றி. சாத்தன் - ஐயனார். வடுகன் - வைரவன். உம்பல் - யானை. ஞாளி - நாய். உரகர் - பாம்பு உலகத்தார்.

### விளக்கவுரை

பணைக்கை - பணைமரத்தைப் போன்ற கை எனப் பொருள் பட்டு அதையுடைய யானையைக் குறித்ததால் அது உவமைத் தொகைப் புறத்துப் பிறந்த அன்மொழித் தொகை. முன்னால் நடக்க வேண்டியவர் அவர் ஆனமையால் முன்னடப்ப என்றார். கலவம் - தோகை. அது இங்கே சினையாகுபெயராய் மயிலைக் குறித்தது. ஆடும் மயில்மீது அமர்ந்து செல்வோன் ஆதலின் கலவ நாடகத்தேர் என்றார். படைத்தற் கடவுளாகிய அயனும், காத்தற் கடவுளாகிய திருமாலும் இரு பக்கங்களிலும் வந்தார்கள் என்பதை "அன்னத் தேரினன் அயன் வலப்பாங்கரும், அராவலி கவர் சேன வன்னத் தேரினன் மால் இடப்பாங்கரும் மலர்க்கரங் குவித்து ஏந்த" என்ற திருவிளையாடற் புராணத்தாலும் உணரலாம். பன்னிரண்டு சூரியர்களும் பன்னிரண்டு தேரில் ஏறி உடன் வந்தார் என்பதாம். குபேரனை இறைவன் தோழனாகக் கொண்டான் என்பதை 'அறிந்து செல்வன் உடையான் அளகைப் பதியான் (குபேரன்) தோழமை கொண்டு' என்ற சிவப்பிரகாசர் வாக்காலும் உணரலாம்.

ஏனைய யானைகள் மதம் முதலியவைகளால் ஏனையோருக்குத் தீமை விளைத்தல் போலின்றித் தெய்வத் தன்மையோடு தெய்வ யானை என யாவரும் போற்ற இந்திரனை வந்தணைந்தது ஆதலின் தீதற்று வந்தணையும் அயிராவதம் எனக் குறித்தார். கிழக்கு - இந்திரன், தென்கிழக்கு - அக்கினி, தெற்கு - இயமன், தென்மேற்கு- நிருதி. மேற்கு - வருணன், வடமேற்கு - வாயு, வடக்கு - குபேரன், வடகிழக்கு - ஈசானன் என்பன அட்டதிக்குப் பாலகர்களின் முறை. முறையாகக் கூறி வருகின்றவர் குபேரனை மட்டும் முதற்கண் எடுத்துக் கூறினார் இறைவனுக்குத் தோழன் ஆன பெருமை பற்றி.

உருத்திரர் பதினொருவர்; மாதேவன், அரன், உருத்திரன், சங்கரன், நீலலோகிதன், ஈசானன், விசயன், வீமதேவன், பவோற் பவன், காபாலி, சௌமியன் என்பார். இவர்கள் பதினொருவர்க்கும் உரிய வாகனம் காளையே.

சாத்தனார் - ஐயனார். இவர் சிவனுக்கும் திருமாலின் திருவடிவாம் மோகினிக்கும் பிறந்தாராதலின் ஹரிஹரபுத்திரர் எனப்பட்டார். இவர் வாகனம் யானை. கிராமப் பகுதிகளில் ஐயனார் கோவில்களில் முன்பக்கம் யானைகள் நிறுத்தப் பெற்றிருப் பதைக் காணலாம். வடுகன் வைரவக் கடவுள். இவர் ஊர்தி நாய். அத்திரி, ஆங்கிரசன், கௌதமன், சமதக்கினி, பரத்துவாசன், வசிட்டன், விசுவாமித்திரன் என முனிவர் எழுவர். எண்மர் என் பார் அட்டவசுக்கள். அவராவார் அனலன், அனிலன், ஆபச் சைவன், சோமன், தரன், துருவன், பிரத்தியூசன், பிரபாசன் என் போர். இருவர் மருத்துவர்; அசுவினி தேவர். அவராவார் தத்தியன், நாதத்தியன் என்போர்.

விமானங்கள் பலவாதலின் விமானந்தமிற் செல்ல எனப் பன்மையாற் கூறினார். எனவே, இதுவரை கூறியவாற்றால் விநாயகர், முருகன், அயன், மால், பன்னிரு சூரியர், சந்திரன், எட்டுத் திக்குப் பாலகர்கள், பதினொரு உருத்திரர், சாத்தன், வடுகன், ஏழு முனிவர், அட்டவசுக்கள், மருத்துவர், இயக்கர், கந்தருவர், சித்தர், கருடர், சுரர், நாகலோகத்தார், கின்னரர் முதலியோர் உடன் வந்தார்கள் என அறிய முடிகிறது.

### நால்வரும், பார்த்திவனும், சண்டீசனும் வருதல்

82 - 89. தந்தைதாய்

வேணு புரக்கோலம் வீழிமிழலை யிடைப்
பேணும் வகைபார்த்த பிள்ளையும்—பூணுமருள்

மெய்யாக் கயிலைமலை வீற்றிருந்த தன்கோலம்
ஐயாற்றில் கண்டருளென் அப்பனும்—எய்யாமல்
ஆடிச் சிவக்கும் அடியைத்தென் ஆரூரில்
பாடிச் சிவப்பேற்றும் பாவலனும்—கூடற்குள்
ஆசில் வழுதி அரசற்குச் சம்புவால்
வாசி வரவழைத்த மந்திரியும்—வீசுதிரை
சேர்க்குங் கடற்புவிக்குட் டெய்வச் சிவலோகம்
பார்க்க வரவழைத்த பார்த்திவனும்—நீர்க்குடிலப்
பொன்முடிக்குள் அன்றிப் புனையாத் திருக்கொன்றை
தண்முடிக்குள் வாங்கித் தரிப்போனும்—நன்மை
ஒருவாத தத்தமணி ஊர்தியினும் சேமத்
திருவாடு தண்டினுமேற் செல்ல.

*பொழிப்புரை*

தந்தையும் தாயுமாய சிவனும் உமையும் சீர்காழியில் அம்மையப்பராய்த் தோணியில் வீற்றிருந்தருளும் அழகியதிருக்கோலத்தைத் திருவீழிமிழலையிலே எம்பெருமானை மேற்கொள்ளுமாறு செய்து அதைப் பார்த்த பிள்ளையாகிய திருஞானசம்பந்தரும்,

அணியப் பெறும் அருளையே வடிவமாகக் கொண்டு கயிலை மலையில் எழுந்தருளியுள்ள அழகிய வடிவத்தைத் திருவையாற்றிற் கண்டருளிய என் தந்தையாம் அப்பமூர்த்தியடிகளும்,

சளைக்காது ஆடியாடிச் சிவப்படையும் இறைவனின் திருவடியை இனிய திருவாரூரிற் பாடிப் பாடிச் சிவப்படையுமாறு செய்கின்ற பாட்டில் வல்லவனாகிய சுந்தரமூர்த்தி சுவாமிகளும்,

மதுரையில் குற்றமற்ற பாண்டிய அரசனுக்குச் சிவபெருமானால் குதிரையை வரவழைத்துக் கொடுத்த முதன் மந்திரியாராகிய மணிவாசகப் பெருமானும்,

வீசுகின்ற அலைகளைக் கொண்டு வந்து சேர்க்கும் கடல் சூழ்ந்த நிலவுலகத்தில் பார்ப்பதற்காகத் தெய்வத்தன்மை வாய்ந்த சிவலோகத்தை இறைவன் அருளால் வரச்செய்த அரசனாகிய வரகுண பாண்டியனும்,

கங்கை நீரைத் தாங்கிய சடையையுடைய அழகிய திருமுடியில் அல்லாமல் வேறு யாண்டும் அணிவிக்கப் பெறாத அழகிய கொன்றை மாலையைத் தன்னுடைய முடியிலே வாங்கி அணிந்து கொள்ளும் சண்டேசுர நாயனாரும்,

ஆகிய இவர்கள் நன்மை நீங்கப்பெறாத (நன்மையமைந்த) தங்கள் தங்கள் அழகிய ஊர்திகளிலும், பாதுகாவலோடு நன்னிலையில் இருந்து வரும் திருவாடுதண்டின் மேலும் செல்ல,

### அருஞ்சொற் பொருள்

வேணுபுரம் - சீர்காழி. பிள்ளை - திருஞானசம்பந்தர். மெய்யா - வடிவமாக. எய்யாமல் - சளைக்காமல். பாவலன் - சுந்தரமூர்த்தி சுவாமிகள். கூடல் - மதுரை. ஆசு - குற்றம். வழுதியரசன் - பாண்டியன். சம்பு - சிவன். வாசி-குதிரை. மந்திரி - மாணிக்கவாசகர். பார்த்திபன் - அரசன்; வரகுண பாண்டியன். குடிலம் - சடை. பொன் - அழகு. தரிப்போன் - சண்டீசன். ஒருவாத - நீங்காத. சேமம் - பாதுகாவல்.

### விளக்கவுரை

திருஞான சம்பந்த சுவாமிகள் திருவீழிமிழலையில் எழுந்தருளி யிருந்த காலத்தில் சீர்காழிப் பிராமணர் சிலர் வந்து சீர்காழிக்கு வரு மாறு வேண்ட இறைவனருள் பெற்றுக் காலை வருவதாக வாக்களித் தார் ஆளுடைய பிள்ளையார். அன்றிராவில் கனவில் தோன்றிய குறிப்பின் படிக் கோயிலினுள் சென்று பார்க்க இறைவன் சீர்காழியில் திருத்தோணியில் வீற்றிருக்கும் அம்மையப்பனும் திருக்கோலத் தைக் காட்டி யருளினார் என்பது புராணம். தந்தைதாய் என்று இறைவனைக் கொண்டதற்கேற்பப் பிள்ளை யென்றார். 'கொள்ளைக் கதிர்முத்தின் பத்தரும் சின்னமும் கொள்ளும் ஒரு பிள்ளை' எனக் குறித்தார் சிவப்பிரகாச அடிகளும்.

யாவராலும் அணியாகக் கொள்ளப்படும் அருளைத் தான் உட லாகவே கொண்டான் என்னும் நயந்தோன்றப் பூணும் அருள் மெய்யா என்றார். ஐயாறு—திருவையாறு. திருநாவுக்கரசர் கயிலை யை நாடிச் சென்று இறைக்கோலம் காணமுடியாது அல்லலுறுங் கால் இறைவன் போந்து பொய்கை யொன்றுண்டாக்கி 'இதில் மூழ்கி ஐயாற்றில் எழுந்து நம்முடைக் கோலங் காண்' என, அவ் வாறே மூழ்கி ஐயாற்றிற் கண்டார் என்ற வரலாற்றைக் குறித்தார். பார்த்தபிள்ளையும், கண்டருள் என் அப்பனும் எனக் குறித்த தொடர் களிலிருந்து அப்பர் சுவாமிகளிடத்தில் இவ்வுலாவின் ஆசிரியர் நிறைந்த ஈடுபாடுடையவர் என்பது பெறப்படும். இனி, அன்பு தொடர்புடையார் (அதாவது தாய் தந்தை முதலிய சுற்றம்) மாட்டுச் செலுத்தப் பெறுவது. அருள் தொடர்பில்லார் மாட்டுச் செலுத்தப்படுவது. ஈண்டு வீழிமிழலையிற் கோலங்கொண்டது அன்பு முறையால் என்பதும், ஐயாற்றிற் கோலங்காட்டியது அருள் முறை யால் என்பதும் பெறப்பட்டன. இரண்டினுள் அருளே சிறந்ததாம். இன்னும் பிள்ளையென்றமுறை பற்றி அகக் கண்ணால் உணரும் நிலையின்றிப் புறக்கண்ணால் எளிமையிற் பார்க்குமாறு அவரது பிள்ளைத் தன்மைக்கேற்ப வெளிப்பட்டு நின்று, அப்பர் சுவாமி களுக்கு அகக் கண்ணால் கண்டு உணரும் நிலையில் இயற்கையோ டியைந்து நின்றும் பின் வெளிப்பட்டும் காட்சி தந்தார் என்ற சிறப் பையும் அமைத்தார்.

ஆடிச் சிவக்கும் அடி என்பது நாட்டியமாடிச் சிவப்பு ஏறும் திருவடி என்பதாம். இனி ஆடி என்பதற்குப் பரவையார் இல்லத்துக்கும் சுந்தரமூர்த்தி சுவாமிகளுக்குமாகத் தூது நடந்து சென்று சிவப்பு ஏறும் திருவடி என்றும் கூறலாம். தென் என்பது இனிமை என்ற பொருளில் வந்தது.

இறைவன் மணிவாசகருக்காக நரிகளையெல்லாம் குதிரைகளாக ஆக்கிக் கொண்டு வந்து பாண்டியனிடம் ஒப்படைத்த செய்தியை இக் கண்ணியாற் குறித்தார். சம்பு என்பதற்கு நரி எனப் பொருள் கொண்டு நரியால் குதிரையை வரவழைத்த மந்திரி எனக் கூறினு ரெனினும் ஆம். இந் நான்கு கண்ணிகளிலும் முறையே அன்பும், அருளும், தோழமையும், ஆணையும் ஒன்றின் ஒன்று உயர்ந்து தோன்றுவதை அகக் கண்ணால் உணர்க. மந்திரியும் எனக் குறித்தது இறைவனையும் ஆணையிடும் தன்மையர் என்று கருதி.

பாண்டிய நாட்டை ஆண்ட வரகுணன் இவ்வுலகில் இருந்து கொண்டே சிவலோகம் பார்க்க விரும்பினுகை இறைவன் அவன் வேண்டுகோளுக் கிரங்கிச் சிவலோகத்தைக் கொண்டுவந்து காட்டினன் என்பது திருவிளையாடற் புராண வரலாறு. ஆவின் பாலை இறைச் செயலுக்கு அளித்துவருதலைக் குற்றமென்றுணர்ந்து தண்டித்த தந்தையின் காலைத் துண்டித்த விசார சருமருக்கு இறைவன் சண்டீசப் பதம் கொடுத்துத் தன் முடியில் அணிந்த கொன்றையை எடுத்து அவர் தலையில் அணிந்து, 'நாம் உண்ட அமுதும், பரிவட்டமும், சூடுவனவாம் மாலையும் உனக்கே கிடைக்கும்படி அருள் செய்தோம்' என வரமும் தந்தார் என்பது சண்டேசுர நாயனார் புராணத்தாலறிந்தது. கொன்றையை இறைவன் அணிவதன்றிப் பிறயாரும் எவ்வகையாலும் அணியப் பெருத சிறப்பு நோக்கிப் பொன் முடிக்குளன்றிப் புனையாத் திருக்கொன்றை என்ருர். எனவே பிள்ளையும், அப்பனும் பாவலனும் மந்திரியும், பார்த்திவனும், சண்டேசனும் ஆகியோர் தங்கள் தங்கள் ஊர்திகளிலும், திருவாடுதண்டின் மேலும் சென்ருர்கள் என்பதாம்.

## கூட்டத்தவரின் வருகை

இதுவரை சிறப்பு நோக்கித் தனித்து வருகின்றவர்களைக் கூறி வந்தவர் இனி ஒவ்வோர் குழுவாகச் சேர்ந்து வருகின்றவர்களைக் குறிக்கின்ருர்.

89-107:

—பிரியாத

எப்பற்றும் தீர்நாற்பத் தெண்ணு யிரவரெனும்
ஒப்பற்ற வேடத் துயர்ந்தோரும்—மெய்ப்புற்ற

91. சுந்தரன் பாடுதிருத் தொண்டத் தொகைக்கு ளொன்பான்
வந்த திருக்கூட்ட மாதவரும்—சந்ததமும்

92. நாவகத்தும் மார்பகத்தும் நற்றிருமுன் னூல்கிடக்கும்
பாவகத்த ராம்வேத பாரகரும்—பூவ்ணவன்

93. தெய்வத் திருமேனி தீண்டத் தவம்பெற்ற
சைவப் பெருமறையோர் தங்கிளையும்—உய்விப்போன்

94. கண்ணகல் கோயில் கயிங்கரியம் செய்வோரும்
பண்ணமர்பாட் டோதும் பரிசனமும்—எண்ணிறந்த

95. தீர்க்கத் தபோதனரும் சேவிப்போ ருஞ்சைவ
மார்க்கப் பதினெண் மடத்தாரும்—ஏற்கநிறை

96. அண்டர் பணியும் அழகிய நாயகர்முன்
மண்டபஞ்ச பாபதி மண்டபமும்—கண்டருளிச்

97. சித்தம் களிகூர் திருக்கண்ண ராசேந்த்ர
உத்துங்க னுங்குலத்தில் உள்ளோரும்—அத்தற்

98. கமைக்கும் கொடிக்கம்ப மண்டபமும் அம்பொன்
இமைக்கத் திருமுன் இயற்றி—உமைக்கு

99. முரசதிர் கோயில் முதற்பிர காரத்
திருமதிலு மண்டபமுஞ் செய்வித்—தொருதன்

100. வரிசைப்பேர் கொள்பூ வணலிங்கம் என்னும்
உரிமைப் பேரான்சுற்றத் தோரும்—பெரியமணி

101. கன்னிகைத் தீர்த்தக் கரைமதிலும் மண்டபமும்
மன்னுபுடை சுற்றுமாள் வாரியுடன்—முன்னிமுடித்

102. தூறுசீர்ப் புண்ணியநீர்க் குள்ளிறங்கி நானஞ்செய்
தேறுவார் சொர்க்கத் திருகால்வைத்—தேறப்

103. படிகட்டி யன்ன படிகட்டி நாளும்
வடிகட் டிய தருமம் வாய்த்தோன்—முடிகட்டும்

104. துன்னும் நதிமரபில் தோன்றீ சுரமூர்த்தி
என்னு மவனும் இயல்கிளையும்—மின்னும்

105. கருத்தொன்றி வந்துசிவ காரியங்கள் செய்யும்
திருத்தொண்டர் தங்கள் திரளும்—நிருத்தஞ்செய்

106. செம்பொனிதழ்க் கும்பமுலைச் சேல்நயனப் பால்வயனத்து
அம்பொனிறத் தேவ ரடியாரும்—பம்புதிரை

107. வெள்ளம் எனத்திரண்டு வீதிக் கரைபுரள

*பொழிப்புரை*

விட்டு நீங்காத எல்லா ஆசைகளையும் நீக்கிய நாற்பத்தெண்ணுயிரம் இருடிகள் என்று கூறப்படும் ஒப்புமையில்லாத தவவொழுக்கத்திற் சிறந்த இருடிகளும்,

வீட்டின்பம் எனப்படும் அழியாப் பேற்றினை அடைந்த சுந்தரமூர்த்தி சுவாமிகளால் பாடப்பெற்ற திருத்தொண்டத் தொகை என்னும் நூலினுள் ஒன்பது பகுதியினராகக் குறிக்கப் பெறும் தவத்திற் சிறந்த திருக்கூட்டத்தவரும்,

இடையருமல் நாக்கினில் நல்ல அழகிய பழமையாகிய வேதமும், மார்பினிற் பூணூலும் அமைந்தவராய் தியானத்தில் வல்லவராய் வேதங்களில் கரைகண்டவராகிய வேதவல்லவர்களும்,

பூவணநாதனுடைய தெய்வத்தன்மை பொருந்திய அழகிய உடற்பகுதியைத் தொட்டுப் பூசை செய்தற்குரிய தவத்தைப் பெற்ற சிவசமயத் தொடர்புற்ற ஆதிசைவ அந்தணர் என்னும் வேதம் வல்லார் தம்முடைய சுற்றமும்,

வாழ வைப்போனுகிய பூவணத்திறைவனுடைய இடம் பரந்த கோயிலில் உள்ள வேலைகளைச் செய்கிறவர்களும்,

பண்முறையானவை தாமே விரும்பி வந்து அமைந்திருக்கிற தேவாரப் பாக்களை முறையாக ஓதுகின்ற ஓதுவார் கூட்டமும்,

எண்ணிக்கையில் அடங்கப் பெருத அளவுடையவர்களாகிய நிறைதவத்தால் தோன்றிய சான்ருேர்களும்,

இறைவனை வணங்குகின்றவர்களும்,

சிவபெருமானைத் தலைமையாகக் கொண்ட சைவ நன்னெறியைக் கடைப்பிடித்தவர்களாகிய பதினெட்டு அறநிலையங்களின் தலைவரும்.

திருவருட் பேற்றினை ஏற்றுக் கொள்வதற்காக அளவில் நிறைந்த தேவர்கள் எப்போதும் வணங்கிக் கொண்டேயிருக்கின்ற அழகிய நாயகர் எனப்படும் பூவணத் திறைவனுக்கு முன் மண்டபம், சபாபதி மண்டபம் ஆகியவற்றைக் கட்டுவித்து, அதனுல் உள்ளம் மிக மகிழ்ச்சி யுறுகின்ற திருக்கண்ணதேவனும் அவன் வழியில் தோன்றியவர்களும்,

இறைவனுக்கு அமைக்கப் பெறும் கொடிக் கம்பத்தோடு கூடிய மண்டபத்தை அழகிய பொன்னின் ஒளி வீசுமாறு சந்நிதியில் அமைத்து, முரசங்கள் முழங்குகின்ற உமையம்மையாரின் திருக்கோயிலிலே முதற் சுற்றுத் திருமதிலும் மண்டபமும் கட்டு வித்தவனும், இறைவனுடைய பெருமை பொருந்திய பெயரையே அமைத்

துக்கொண்டவனும் ஆகிய 'பூவணலிங்கம் பிள்ளை' என்னும் உரிமைப் பெயருடையவனின் சுற்றத்தினரும்,

முன்னர்ச் சூரியனுல் உண்டாக்கப்பெற்ற பெரிய 'மணிகர்ணிகைத் தீர்த்தக் குளத்தின் கரையில் மதிலும், மண்டபமும், நிலை பெற்ற மதிலின் பக்கமாகிய உட்புறத்திலே மக்கள் சுற்றி வருவதற்காக அமைக்கப் பெறும் 'ஆள்வாரி'. என்று சொல்லப்படும் நடைப் பாதையுடன் சேர்த்துக் கட்டித் தன் நினைவை முற்றுவித்து, மேன்மேல் ஊறியூறி வரும் சிறப்பமைந்த புண்ணிய நீரினுள் இறங்கி முழுக்காடி ஏறுகிறவர் சுவர்க்கலோகத்துக்கு இரு கால் வைத்து ஏறுவதற்காகப் படிகள் கட்டிவிட்டிருப்பது போல, குளத்தங்கரைப் படிகளை அமைத்து, இவ்வாறே நாள்தோறும் ஆராய்ந்து எடுத்த சிறந்த அறங்களையே மேற்கொண்டு செய்தவனும், சிவபெருமான் திருமுடியில் அமைக்கப் பெற்றிருக்கின்ற சிறப்புப் பொருந்திய கங்காநதியின் மரபில் தோன்றியவனும் ஆகிய 'ஈசுவரமூர்த்தியா பிள்ளை' என்பவனும், அவன் உரிமையமைந்த சுற்றத்தினரும்,

மின்னலைப் போல் இடைவிட்டு, இடைவிட்டுத் தோன்றும் கருத்தானது நிலைபெற்றிருக்க வந்து சிவத்தொண்டுகளைச் செய்யும் சிவனடியவர் தங்களின் திருக்கூட்டமும்,

நாட்டியம் ஆடுகின்றவரும், சிவந்த பொன்மயமாக விளங்கும் உதடுகள், குடம்போன்ற முலைகள், கெண்டை மீன் போன்ற கண்கள், பால் போன்ற இனிய சொற்கள், அழகிய பொன் போன்ற உடல் நிறம் ஆகியவற்றை உடையவரும் ஆகிய தேவரடியார்களும்,

பரவிச் செல்லுகின்ற அலைகளையுடைய வெள்ளம் என்று கூறுமாறு ஒன்ருகச் சேர்ந்து, தெருவோரங்களில் செல்ல;

### *அருஞ்சொற் பொருள்*

மெய்ப்பு - அழியாத வீடு பேறு. திருமுன்னூல் - பூணூல். பாவகத்தர் - தியானம் செய்பவர். வேதபாரகர் - வேதவல்லவர். ஆள்வாரி - ஆளோடி; நடைபாதை. இதழ் - உதடு. சேல் - கெண்டைமீன். வயனம் - சொல். பம்பு - பரவிய.

### *விளக்கவுரை*

நாற்பத்தெண்ணுயிரம் இருடிகளும் எப்பற்றுமற்றவர்கள் ஆதலிஞல் எப்பற்றுந்தீர் நாற்பத்தெண்ணுயிரவர் என்ருர்.

சுந்தரமூர்த்தி சுவாமிகள், இறைவன் "தில்லைவாழந்தணர்தம் அடியார்க்கு மடியேன்" என்று அடியெடுத்துக் கொடுக்கப் பாடிய நூல் "திருத்தொண்டத் தொகை" என்பது. இதுவே நம்பி யாண்டார் நம்பிகள் திருத்தொண்டர் திருவந்தாதி பாடுவதற்கும் சேக்கிழார் சுவாமிகள் பெரியபுராணம் பாடுதற்கும் அடிப்படையாக இருந்தது. இதில் குறித்த திருக்கூட்ட மாதவர் ஒன்பதின்மர். அவ ராவார் (1) அப்பாலும் அடிச்சார்ந்தார், (2) சித்தத்தைச் சிவன் பாலே வைத்தார், (3) திருவாரூர்ப் பிறந்தார், (4) தில்லைவாழ் அந்தணர், (5) பத்தராய்ப் பணிவார், (6) பரமனையே பாடுவார், (7) பொய்யடிமை இல்லாத புலவர், (8) முப்போதும் திருமேனி தீண்டுவார், (9) முழுநீறுபூசிய முனிவர் ஆவர்.

நாக்கில் வேதமும், மார்பில் பூணூலும் இடைவிடாது பயின்று வரும் தன்மையினுல் சந்ததமும் நாவகத்து நற்றிருநூலும், மார்பகத்து முன்னூலும் கிடக்கும் வேதபாரகர் என்ருர். நூல் வேதத்திற்கும் பூணூலுக்கும் பொதுவாய் நின்றது.

சைவப்பெருமறையோர் - ஆதி சைவ அந்தணர். இவர் இறைவனைத் தொட்டுப் பூசை செய்வதற்குரியவர்.

'சைவ மார்க்கப் பதினெண் மடத்தார்' என்பது சிவாகம பத்ததிகள் பதினெட்டும் இயற்றிய சைவ ஆசிரியர் பதினெண் மரின் வழித்தோன்றல்கள். அவராவார் துர்வாஸசிவர், பைங்கள சிவர், உக்கிரஜ்யோதி, ஸ்ரீகண்டர், விஷ்ணுகண்டர், ஸுபோதர், வித்தியாகண்டர், இராமகண்டர், ஞானசிவர், ஞானசங்கரர், ஸோமசம்பு, பிரம்மசம்பு, அகோரசிவர், வருணசிவர், திரிலோசன சிவர், பிரஸாதசிவர், இராமநாத சிவர், ஈசானசிவர் என்பர் (உ. வே. சா). இவர்களேயன்றித் தற்காலத்து இருப்பனவாகிய சைவமார்க்கத்துத் தலைசிறந்த குருமகா சன்னிதானமாகிய திருக் கைலாய பரம்பரை திருக்கோவலூராதீனம் சிவத்திரு ஞானியார் சுவாமிகள், திருக்கைலாய பரம்பரை, திருப்பொம்மபுர ஆதீன மயிலம் சிவத்திரு சிவஞான பாலய அடிகளார், திருவாவடுதுறை ஆதீனம், திருத்தருமபுர ஆதீனம் முதலிய பதினெண்வகை ஆதீனத் தலைவர்களைக் குறித்தது என்று கொள்ளுதல் பொருத்தமுடைய தாகும்.

திருக்கண்ணராசேந்திர உத்துங்கர் - திருக்கண்ணதேவர். இவர் திருப்பூவணத்துக் கோயிலில் முன்மண்டபம், சபாபதி மண்டபம் ஆகிய இரண்டையும் கட்டியவர். இவர் பரம்பரை யோர் திருப்பூவணத்தைச் சார்ந்த பிரமனூரில் இருக்கின்றனர்.

பூவணலிங்கம் பிள்ளை என்பவர் பூவணத்து இறைவன் பெயரையே தன் பெயராகக் கொண்டதால் "ஒருதன் வரிசைப்பேர் கொள் பூவணலிங்கம்" என்றார். இவர் கொடிக் கம்பத்தோடுகூடிய முன்னிடத்தைப்பொன்னொளி வீசுமாறு அமைத்தவர்; உமையம்மை யாரின் திருக்கோயிலில் முதற் பிராகார மதிலும் மண்டபமும் அமைத்தவர். இவர் வழித்தோன்றலாகிய மருதநாயகம் பிள்ளை யென்பவர் இப்போது மதுரையில் இருக்கின்றார் (உ. வே. சா.)

ஈசுவர மூர்த்தியாபிள்ளை என்பவர் கங்காகுலத்தில் தோன்றி யவர். இவர் மணிகர்ணிகைத் தீர்த்தத்துக் கரையில் மதில், மண்டபம் மதிலின் உட்பக்கத்தில் தீர்த்தக் குளத்தை மக்கள் சுற்றி வருவதற்கேற்ப நடைபாதை (ஆள்வாரி), படிக்கட்டு முதலியன அமைத்தவர். குளத்தில் இறங்கி முழுக்காடிய பிறகு ஏறுதற் குரிய படிகளை சுவர்க்கத்திற்கு ஏறும் படிகள் போன்றவை என்று கூறுவதன்மூலம் அவரது திருத்தொண்டின் சிறப்பை ஆசிரியர் வியந்து கூறினதாயிற்று. திருப்பூவணத்திற்கு மேற்கே ஒன்றரை நாழிகை தூரத்தில் ஈசுவர மூர்த்தியா பிள்ளை மடம் என்றொரு பழைய மடம் இருந்தது என்றும், சில ஆண்டுகளுக்கு முன் இடிந்து போயிற்று என்றும் கூறுவர். இவர் பரம்பரையோர் திருப்பூவணத் தில் இருக்கின்றனர்,

மின்னும் கருத்து, கருத்துக்கள் உள்ளத்தின் எழுச்சி காரண மாகத் தோன்றுபவை. மின்னலைப் போலப் பளிச்சிட்டுத் தோன்று வன என்றுவது, இடையீடுபட்டுத் தோன்றுவன என்றுவது கொள்ளலாம். ஒரு காரியத்தை அதிலும் சிவத் தொண்டினைச் செய்பவர் மனம், வாக்கு, காயம் ஆகிய மூன்றும் ஒன்றுக அமையச் செய்தல் வேண்டும். மனத்தை அடிப்படையாகக் கொண்டே வாக்கு காயம் ஆகியவை செல்லும். ஆதலினுல் மன ஒருமைப் பாட்டுடன் சிவத்தொண்டு செய்கிறவர் எனக் குறித்தார்.

திருக்கூட்டத்தார் மிகுதியாக வந்ததால் வெள்ளம் எனக் குறித்தார். வெள்ளம் என்பதற்கேற்ப அது புரண்டோடும் என்ற குறிப்பில் தெருவோரங்களில், "புரள" என்று அமைத்தார்.

## உலாப் போகுங்கால் உண்டாகும் பல்வகை ஒலிகளின் அமைப்பு.

### 1. பல்வகை இயங்களின் ஒலி.

107. எள்ளில் இருவர் யாழ்முரலத்—துள்ளுகணப்

108. பானுகம்பன் சங்கம் பரிந்தூத வாணன் கார்
மானும் குடமுழவம் வாசிப்ப—ஆனயர்

109. மெய்யஞ் செழுத்தால் விரவும் குழலோசை
ஐயன் செவிக்கின் னமுதூற்றப் — பொய்யன்பில்

110. சம்பந்தர் கைத்தாளம் தாக்கிட நீலகண்ட
எம்பெரும் பாணர் இசைகூட்டப் — பைம்பொன்

111. முருடு தடாரிதக்கை மொந்தை பதலை
இரலை திமிலைமுர சேங்க

*பொழிப்புரை*

இகழ்தல் இல்லாத தும்புரு, நாரதர் ஆகிய இருவர்களும் யாழ் வாசிக்க,

இறைவனைப் போல் ஆனந்தக் கூத்தாடிக் கொண்டிருக்கிற சிவ கணத் தலைவர்களில் ஒருவனாகிய பானுகம்பன் விருப்பத்தோடு சங்கினை எடுத்து ஊத,

வாணாசுரன் என்பான் மேகத்தை ஒத்த குடமுழாவை வாசிக்க,

ஆனய நாயனார் உண்மைத் தன்மை வாய்ந்த திருமந்திரமாகிய திருவைந்தெழுத்தோடு பொருந்திய குழலின் ஓசையைத் தலைவனாகிய பூவணத்திறைவனின் செவியில் இனிய அமுதம் போல் ஊற்ற,

உண்மை அன்பினராய திருஞானசம்பந்தப் பெருமான் திருக் கைத்தாளங்களைத் தாக்கி ஒலி செய்ய,

எம்முடையவரும், பெருமை அமைந்தவரும் ஆகிய திருநீல கண்ட யாழ்ப்பாணர் யாழிசையை ஒன்று சேர்க்க,

பசும் பொன்னால் அழகு செய்யப்பெற்ற முருடு என்னும் வாத்தியமும், தடாரி, தக்கை, மொந்தை, பதலை, இரலை, திமிலை, முரசு முதலிய வாத்தியங்களும் தத்தம் ஒலிகளைச் செய்ய.

*அருஞ்சொற் பொருள்.*

எள் - இகழ்ச்சி. இருவர் - தும்புரு, நாரதர். பரிந்து - பரிவுகொண்டு; அன்புகொண்டு. வாணன் - வாணாசுரன். கார்-மேகம். விரவும் – கலக்கும். பொய்யன்பு இல் – பொய்யன்பு இல்லாத ; உண்மை அன்பு கொண்ட.

**விளக்கவுரை.**

சிவகணத் தலைவர்களில் ஒருவன் பானுகம்பன். இவன் ஆயிரம் வாய்கள் உடையவன். இவன் மிகுந்த விருப்பத்தோடு சங்கம் ஊதினான். வாணாசுரன் ஆயிரம் கைகளையுடையவன். குடமுழா வானது மேகம்போல் ஒலி செய்ய வல்லது ஆதலின் கார்மானும் குடமுழவம் என்றார். மானும் - உவமையுருபு. ஆனாய நாயனார் ஆயர் குலவிளக்காய்த் தோன்றி அமுதென்னும் குழலோசையில் அரும் பொருளாகிய திருவைந்தெழுத்தை உள்ளுறையாக அமைத்து வாசிப்பவர். இவர் குழலூதும்போது எம்பெருமானை உள்ளிட்ட அனைத்துலக உயிர்ப் பொருள்களும் மயங்கின. உடனே இறைவன் அவருக்குச் சிவபதம் அளித்து என்றும் யாழ் வாசிக்குமாறு பணித்தான்.

> '' வள்ளலார் வாசிக்கும் மணித்துளைவாய் வேய்ங்குழலின்
> உள்ளுறை அஞ்செழுத்தாக ஒழுகியெழும் மதுரவொலி
> வெள்ளம் நிறைந்து எவ்வுயிர்க்கும் மேல்அமரர் தருவிளைதேன்
> தெள்ளமுதினுடன் கலந்து செவிவார்ப்பதெனத் தேக்க;''

என்ற பெரிய புராணச் செய்யுளின் முழுக்கருத்தையும் ஒட்டி இக் கண்ணி அமைக்கப்பெற்றுள்ளது. திருஞானசம்பந்தர் திருக் கோலக்காவில் எம்பெருமானை வணங்கித் திருவைந்தெழுத்துப் பொறிக்கப் பெற்ற தாளம் பெற்று ஒத்தறுத்துப் பாடினார் என்பது வரலாறு. ஏனைய வாத்தியங்களைப் போலல்லாமல் திருவைந் தெழுத்தையே தமக்குரிய பொருளாகக் கொண்டு அதையே இசைத்துவந்த பெருமையால் குழலும் தாளமும் சிறப்பாகப் பேசப் பெற்றன. இசைக் கருவிகளைக் கூறும்போது இசைக் கருவிகளை ஒலியுண்டாக்கும் முறைகளுக் கேற்ப முரலுதல், ஊதுதல், வாசித்தல் போன்ற வினைச் சொற்களை அமைத்த ஆசிரியர் திறம் வியத்தற் குரியது.

## 2. திருச்சின்னத்தின் ஒலி.

111. ..........................—திரை யெறியும்

112. வையை நதித்தீரன் வந்தான் மணிகுண்டச்
செய்யநெடுந் தீர்த்தச் சிவன்வந்தான் - துய்ய

113. நலஞ்செய் நவக்கிரக நாட்களிவை நாளும்
வலஞ்செய்யும் ஊருடையான் வந்தான் - பொலஞ்செய்ய

114. பொன்பதும மானனைய பொன்னனை யாள்மனைக்குள்
அன்பமுது கொண்டஅரன் வந்தான் - முன்பிரத

115. வாதஞ் செயுஞ்சித்தன் வந்தான் மதிக்குடைவேள்
போதஞ் செயும்போர் பொருன்வந்தான் - மோதுவிடம்

116. தண்கழுத்தில் வைத்துநெடுந் தாலிசெழுந் தாமரையின்
பெண்கழுத்தில் வைத்த பிரான்வந்தான் - எண்கழிக்கும்

117. துங்க வமரர் தொழும்பா வணங்கொடுக்குஞ்
செங்கம லச்சரணத் தேவந்தான் - எங்கள்

118. பழவினை வேரறுப்பான் வந்தான் பருவெண்
மழவிடை யேறுயர்த்தான் வந்தான் - அழகியமின்

119. மங்கைக்கு வாய்த்த மணவாளன் வந்தானென்
றங்கத் திருச்சின்ன மார்ப்பெடுப்பப்

*பொழிப்புரை*

அலை வீசும் வையையாற்றின் கரைக்குச் சொந்தமானவன் வந்தான் ;

மணிகர்ணிகை என்று கூறப்பெறும் அடைந்தார் வினைதீர்க்கும் செம்மைப் பண்பு வாய்ந்த உயர்ந்த தீர்த்தத்துக்கு உரிய சிவன் வந்தான் ;

தூய்மை பொருந்திய நன்மையை விளைவிக்கும் ஒன்பது கோள்களும் நாள்களும் ஆகிய இவைகள் நாள்தோறும் தங்கள் வினைதீர வலஞ்செய்து வருகின்ற ஊராகிய திருப்பூவணத்தின் இறைவன் வந்தான் ;

அழகிய தாமரை மலரில் வீற்றிருக்கும் மான்போன்ற இலக்குமியை ஒத்த பொன்னனையாளின் வீட்டிற்குள் பொன் செய்து தர வேண்டும் என எண்ணி வந்து அன்பினால் அவள் இட்ட அமுதை உண்ட சிவன் வந்தான் ;

முன்பு அப்பொன்னனையாளுக்காக இரசவாதம் செய்த சித்தன் வந்தான் ;

சந்திரனைத் தன் வெண்கொற்றக் குடையாகக் கொண்ட மன்மதனானவன் பூக்கள் ஐந்தினை வீசிச் செய்யும் சண்டையைப் பொருது அழித்த இறைவன் வந்தான் ;

மேல் வந்து தாக்கிய ஆலகால நஞ்சைத் தன்னுடைய கழுத்திலே இருக்குமாறு செய்து, செழுமையாகிய தாமரை என்னும் இல்லில் வாழும் பெண்ணாகிய திருமகளின் கழுத்தில் நெடிய தாலியை நிலைபெறச் செய்தவனாகிய தலைவன் வந்தான் ;

எண்ணிக்கையைக் கடந்தவர்களும், மேன்மை பொருந்தியவர்களும் ஆகிய தேவர்களுக்கு அடிமைச் சீட்டு வழங்கும் செம்மை

யான தாமரை மலர் போன்ற திருவடிகளையுடைய தேவன் வந்தான் ;

எங்களுடைய பழமையான வினைகளை வேரோடு அறுப்பவனாகிய இறைவன் வந்தான் ;

பருத்திருப்பதும், வெண்மையானதும், இளமையானதும் ஆகிய காளையைக் கொடியாக உயர்த்திப் பிடித்தவன் வந்தான் ;

அழகிய மின்னனையாளுக்கு வாய்த்த கணவனாகிய பூவணநாதன் வந்தான்.

என்று இவ்வாறு இறைவனின் உலா வாத்தியங்களில் முக்கிய அங்கமாகிய திருச்சின்னங்கள் ஒலி செய்ய,

### அருஞ்சொற் பொருள்.

*தீரன் - கரைக்குச் சொந்தமானவன் (தீரம் - கரை). மணி குண்டம் - திருப்பூவணத்துள்ளதும் சூரியனால் தோற்றுவிக்கப் பெற்றதும் ஆகிய மணிகர்ணிகா தீர்த்தம். துங்கம் – மேன்மை; உயர்வு. தொழும்பு - அடிமை. ஆவணம் - சீட்டு; பத்திரம்; ஓலை. தே – தேவன். மழ - இளமை. மின்மங்கை மின்னனையார் ; பூவணத்து இறைவி.*

### விளக்கவுரை

ஏனைய வாத்தியங்களைக் காட்டிலும் திருச்சின்னம் சிவனை முதல்வனாகக் கொண்ட ஆலயங்களில் முக்கியத் தன்மை பெறுவது ஒன்று ஆதலின் அதன் ஓசையை உயிர்கள் இறைவனைப் பார்த்துக் கூறும் முறையிட்டு ஒலியாக அமைத்தல் கவி மரபு. ஈண்டும் திருச்சின்னத்தின் ஒலி இறைவனின் பெருமையை எடுத்துக் கூறும் முறையில் அமைக்கப் பெற்றுள்ளது. ஒன்பது கோள்களும், இருபத்தேழு விண்மீன்களும் திருப்பூவணத்தில் உள்ள இயங்கு பொருள் நிலைப் பொருள் ஆகிய எல்லாப் பொருள்களையும் சிவலிங்கமே எனக் கருதி அவ்வூரை வலம் வருகின்றன எனத் திருவிளையாடற் புராணங் கூறுவதையும் உள்ளடக்கி நவக்கிரக நாட்களிவை நாளும் வலஞ் செய்யும் ஊருடையான் எனக் குறித்தார். மன்மதனின் வெண்கொற்றக்குடை முழுமதி என்பதை 'அடுத்து வானத்து அமர்மதியைத் தொடாக் கடுத்த வேள் குடைக் காம்பு' என்ற சிவப்பிரகாசர் வாக்காலும் உணரலாம். திருப்பாற்கடலைக் கடைந்த காலத்துப் பல்வகை நன்பொருள் வந்தன. அத்தனையையும் ஏற்றுக்கொண்டவர் திருமாலே. அவ்வாறே விஷம் வந்த போதும் கொள்ள வேண்டியவர் அவரே. ஆனால் அது அனைத்துலகத்தையும் அழிக்கும் நிலையில் வந்தது, காத்தற் கடவுளாகிய திருமால் உலகத்தைக் காக்க முடியாது கலங்கினார். தன்னையும் காத்துக்கொள்ள முடியாத சூழ்நிலை ஏற்பட்டபோது

அந் நஞ்சைத் தானுண்டு திருமாலைக் காப்பாற்றியதால் இலக்கு மிக்குத் திருமங்கலநாண் வாழ்வை நிலைபெறுத்தினன் என இறைவன் போற்றப்பட்டான். தன் கழுத்தில் என நிற்க வேண்டியது எதுகை நோக்கித் தண் கழுத்தில் என நின்றது. தேவர்களுக்கு அடிமை யோலை வழங்கும் திருவடி என்றது அவ்வோலை வைத்துள்ளவரைக் காலன் அணுகான் பேரின்ப வீட்டிற் குரியவராகிய அவர்கள் அதனைக் காட்டி உள் செல்ல முடியும். இத் தகைய நிலைகளை வழங்குவது இறைவனின் திருவடியே யாதலின் 'தொழும்பு ஆவணங் கொடுக்கும் செங்கமலச் சரண்' என்றார். இக் காலத்தில் வழங்கும் பல்வகை அனுமதிச் சீட்டுக்களைப்போல இறை திருவடிகளின் செயலையும் அனுமதிச் சீட்டு அளிப்பதாக அமைத்த நயம் உணர்தற்பாற்று.

## இறையருள் பெற்ற மாதர் நிலை.

119 ... ... ... —பொங்கு

120. நதிமாதர் கோக னகமாதர் தெய்வ
மதிமாதர் நீடுவசு மாதர் - கதிர்மாதர்

121. ஏழ்மாதர் வேலோன் இருமாதர் எண்திசைக்கே
வாழ்மாதர் ஏழ்முனிவர் மாதர்கள் - சூழ்வானச்

122. சுந்தர மாதரெனத் தோன்றிரதி மாதருடன்
அந்தர மாதர் அனைவர்களும் - சிந்தைமகிழ்

123. கோலங்காட் டித்தான் குனிக்குந் திருக்கூத்தை
ஆலங்காட் டிற்பார்க்கும் அம்மையரும் - மூலங்காண்

124. சீரிசை யாடிநிழற் செம்மல் தனைப்பயந்த
பேரிசை ஞானிப் பிராட்டியரும் - ஏரிசைதென்

125. சையத் தமிழ்நாட்டிற் சைவம் தலையெடுப்பச்
செய்விக்கும் பாண்டிமா தேவியரும் - உய்விக்கும்

126. அந்தண் வயற்பொலிதென் ஆரூரின் நம்பிக்கா
வந்துலகில் உற்பவித்த மங்கையரும் - செந்துவரின்

127. மின்தழைத்த வேணி விமலனைத் தன்வீட்டில்
அன்றழைத்த மெய்ப்பொ னனையாரும் - நின்றுருகி

128. ஆரணச் செம்பொன் அடிபோற்ற எம்பெருமான்
தோரண வீதிதனில் தோன்றினனால் சேரமரர்

129. தட்ப வனப் பாரி சாத வனமழையால்
புட்பவன மாம்பேர் புதுக்கினர்.

*பொழிப்புரை*

பொங்கி மேலெழுந்து வரும் ஆறுகளாம் பெண்கள், வெண்டா மரை, செந்தாமரை ஆகிய இரண்டு மலர்களிலும் வாழ்ந்து வரு கின்ற கலைமகள், இலக்குமி ஆகிய பெண்கள், தெய்வத் தன்மை பொருந்திய சந்திரனின் மனைவியராகிய பெண்கள், உயர் தன்மை பொருந்திய அட்ட வசுக்களின் மனைவியர்களாகிய பெண்கள், சூரியனுடைய மனைவியாராகிய பெண், ஏழு கன்னியர்களாகிய பெண் கள், வேலேந்திய முருகனின் மனைவியாராகிய வள்ளி தெய்வயானை ஆகிய இரு பெண்கள், எட்டுத் திசைக்குத் தலைவராகிய அட்ட திக்குப் பாலகர்களின் மனைவியார் ஆகிய எட்டுப் பெண்கள், ஏழு முனிவர்களின் மனைவியார் ஆகிய பெண்கள், சூழ்ந்திருக்கும் வானுலகத்தில் எல்லாரினும் சிறந்த அழகி இவளொருத்தியே என்னுமாறு தோன்றுகின்ற இரதி என்னும் பெண்ணுடன் ஆகா யத்தில் இருக்கின்ற பெண்கள் ஆகிய இங்கே குறிப்பிட்ட எல்லாப் பெண்களும்,

மனம் மகிழுமாறு அழகைக் காட்டி வளைந்து ஆடுகின்ற தம் முடைய திருக்கூத்தைத் திருவாலங்காட்டிற் கண்டு களித்துக் கொண்டேயிருக்கும் தாயாகிய காரைக்காலம்மையும்,

அனைத்திற்கும் மூலப் பொருளாம் இறைவனால் காணப் பெற்ற வரும், சிறப்பும் புகழும் கொண்டவரும், கண்ணாடியில் உண்டாய நிழலிலிருந்து தோன்றியவரும் ஆகிய சுந்தரமூர்த்தி சுவாமிகளைப் பூவுலகு உய்வான் வேண்டித் தெய்வத் தவமகனாகப் பெற்றெடுத்த 'இசைஞானியார்' என்னும் பெயர் வாய்ந்த அம்மையரும்,

அழகு மிகும் புகழ் பெற்ற பொதியமலையைத் தம்மகத்தே கொண்ட தமிழகத்திலே தலைகுனிந்திருந்த சைவசமயம் தலை யெடுத்துத் தழைக்குமாறு பற்பல செயல் பண்ணுவிக்கின்ற பாண்டி மா தேவியராம் மங்கையர்க் கரசியாரும்,

தன்னை அடைந்தவர்களையெல்லாம் வாழச் செய்கின்றதும், அழகிய குளிர்ச்சி பொருந்திய வயல்களாற் பொலிவு பெறுவதும் ஆகிய தென் ஆரூரின் நம்பியாம் சுந்தரமூர்த்தி சுவாமிகளுக்காக வந்து உலகில் தோன்றிய பெண்களாகிய பரவை நாச்சியார், சங்கிலி நாச்சியார் ஆகிய இரண்டு பெண்களும்,

செம்பவளத்தின் ஒளி விளங்கும் சடையினையுடைய மலம் அற்ற கடவுளாகிய இறைவனைத் தன் வீட்டில் அன்றொருநாள் அன்பால் வரவழைத்த உண்மைத் தவத்தியாம் பொன்னனையார் என்னும் அம்மையும்,

ஆகியவர்கள் நின்று மனம் உருகி வேதங்களால் புகழப்பெறும் சிவந்த பொன்மயமாகிய திருவடியைத் துதித்துக் கொண்டிருக்க,

எம்பெருமானுகிய பூவணநாதன் தோரணங்கள் அமையப்பெற்ற வீதியிலே தோன்றினன்.

அப்போது அங்குச் சேர்ந்த தேவர்கள் குளிர்ச்சி பொருந்திய காடாகிய பாரிசாத மரக் காட்டிலிருந்து பெய்யக்கூடிய மழையாகிய பாரிஜாத மலர் மழையைப் பெய்யச் செய்து அவ்வூரைப் 'புட்ப வனம்' என்ற பெயர் கொள்ளுமாறு செய்தார்கள்.

### அருஞ்சொற் பொருள்

குனித்தல் – வளைந்தாடல். ஆடி – கண்ணுடி. ஏர் – அழகு. தென்சையம் – பொதிய மலை. துவர் – பவளம். வேணி – சடை. ஆரணம் - வேதம். தட்பம் குளிர்ச்சி.

### விளக்கவுரை

மதிமாதர் என்பார் அசுவினி முதலாய இருபத்தேழு விண் மீன்கள் ஆவர். சூரியன் மனைவிபெயர் சாயாதேவி. ஏழுகன்னியர் எனப்பெறுவார் பிராமி, மகேஸ்வரி, கௌமாரி, நாராயணி, வராகி, இந்திராணி, சாமுண்டி என்போர். அட்டதிக்குப் பாலகர்களின் மனைவியர் இந்திரன் மனைவி, இந்திராணி; அக்கினியின் மனைவி சுவாகாதேவி, இயமனின் மனைவியர் அப்பிராப்தி, சாமளை, கிரி; நிருதியின் மனைவி தீர்க்காதேவி; வருணன் மனைவி சேஷ்டை; வாயுவின் மனைவி அஞ்சனை; குபேரன் மனைவி சித்திரரேகை; ஈசானன் மனைவி காளி.

காரைக்காலம்மையார் தம் கணவனுகிய பரமதத்தன் தம்மிடம் கண்ட தெய்வசக்தியால் பிரிந்து மறுமணம் புரிந்து தன்னைக் கண்ட போதும் வணங்கிய காரணத்தால் 'பெண் வடிவு நீங்கப் பேய்வடிவு அருள்க,' என்று இறைவனை வேண்டிப் பெற்றுக் கயிலைக்குத் தலை யால் நடந்து சென்றனர். தன்னைக் காண வந்த காரைக்காலம் மையாரை 'அம்மையே' என இறைவனே விளித்தமையின் ஆசிரி யரும் 'அம்மை' எனக் குறிப்பாராயினர். இவர் இறைவனிடம் வேண்டிய வரங்களுள் ஒன்று 'தேவரீர் திருத்தாண்டவம் செய்யும் போது திருவடியின் கீழ் மகிழ்ச்சியோடு தேவரீரைப் பாடிக்கொண்டு இருக்கவேண்டும்' என்பது. இறைவனும் 'தென் திசையிலுள்ள திருவாலங்காட்டில் நமது நடனத்தைத் தரிசித்துப் பேரானந்த முற்று நம்மைப் பாடிக்கொண்டிரு' என்ருர். அவ்வாறே திருவாலங்காடு வந்து இரத்தினசபாபதியாகிய இறைவன் தாண்டவத்தைக் கண்டு மகிழ்ந்து கொண்டிருக்கிருர் என்ற வரலாற்றையே ஆசிரியர் 123 ஆவது கண்ணியிற் குறித்தார்.

இறைவன் அலங்கரித்துக் கண்ணுடியின் முன் நின்றகாலை அக் கண்ணுடியில் தோன்றிய உருவத்தைச் 'சுந்தரா' என்று அழைக்க

அந் நிழலுருவம் உண்மை உருவம் கொண்டுவந்தது. அவ்வுருவத் தையே சுந்தரன் ஆலால சுந்தரன் என அழைத்தார்கள். பின்னர் அச் சுந்தரர்-பூக்கொய்யச் சென்ற காலை பூக்கொய்யும் பெண் களாகிய அனிந்திதை, கமலினி ஆகியோரை விரும்பியதால் அவர் நிலவுலகம் அனுப்பப் பெற்றார். அப்போது அவ்வெழிலுருவத் தைத் தம் திருவயிற்றில் ஏற்று உலக முய்யத் திருத்தொண்டத் தொகை யருளும் உத்தம ஆரூரராகப் பெற்றெடுத் தருளிய அம்மை யார் திருநாவலூர் வாழ் சடையனாரின் உத்தம மனைவியாராவர். இவர் பெயர் இசைஞானியார் என்பது. இவ்வரலாற்றையே 124-ஆவது கண்ணியிற் குறித்தார்.

சையத் தமிழ்நாடு - பாண்டியநாடு. பாண்டியநாட்டரசனாகக் கி. பி. ஏழாம் நூற்றாண்டில் (640) இருந்தவன் கூன்பாண்டி யன் எனக் கூறப்பெறும் மாறவர்மன் அரகேசரி என்பான். இவன் செழியன் சேந்தன் என்ற பாண்டியன் மகனாய் அவனுக்குப் பின்னர்ப் பட்டம் பெற்றவன். இவன் சுந்தரபாண்டியன் எனவும் வழங்கப் பெறுவான். இவன் மனைவியின் பெயர் மங்கையர்க்கரசி யார். இவர் சோழர்தம் குலக்கொடி. 'மங்கையர்க்கரசி வளவர் கோன் பாவை' எனக் குறிப்பர் சம்பந்தர். இவர் கணவனும் கூன் பாண்டியன் சமணமதத்தைச் சார்ந்திருந்தான். மங்கையர்க் கரசியார் குலச்சிறையார் என்ற மந்திரியாரின் துணைகொண்டு திருஞான சம்பந்த சுவாமிகளை வரவழைத்துச் சமணர்களை வாதில் வெல்லச்செய்து பாண்டியனைச் சைவமதத்தை மேற் கொள்ளுமாறு செய்தார். இவர் அறுபத்து மூன்று நாயன்மார்களில் ஒருவராகச் சேர்க்கப் பெற்றுள்ளார். இவ் வரலாற்றையே சையத் தமிழ் நாட்டிற் சைவந் தலையெடுப்பச் செய்விக்கும் பாண்டிமா தேவி யரும் என்பதனுள் குறித்தார்.

திருக்கயிலை மலையில் பூங்காவில் காதலித்த ஆலால சுந்தரர் ஆரூர் நம்பியாகத் தோன்றவே காதலிக்கப் பெற்ற இருவரும் பரவை யாராகவும், சங்கிலியாராகவும் வந்து உலகில் தோன்றினார்கள். அவ் விருவரையும் 126-ஆவது கண்ணியிற் குறித்தார்,

இறைவனின் சடை செம்மையானது; ஆனமையின் பவளத்தை நிறவுவமை பற்றிக் கூறினார். 'பவளவார் சடை' என்றார் சிவப்பிர காசரும்.

பொன்னனையாளின் இல்லத்துக்குச் சித்தவுருவம் ஏற்று வந்த செயல் இந் நூல் 375 ஆவது கண்ணி முதல் கூறப்பெறுகிறது. ஆரணம்-வேதம். வேதம் போற்றுகின்ற செம்மையான பொன் போன்ற அடி யென்றும், ஆடிச் சிவக்கும் அடியைத் தென்னா ரூரின் பாடிச் சிவப்பேற்றும் பாவலன் என்றாற்போல் வேதங்கள் பாடிச் சிவப்பேற்றலால் சிவந்த பொன்மயமான திருவடியென்றும்

கூறலாம். இனி ஆரணம் என்பதை மங்கலச் சொல் எனக் கொண்டு அழகிய சிவந்த பொன்மயமான திருவடி எனப் பொருள் கொள்ளல் இலக்கண வரம்பினுக் கேற்ற தொன்று. வேதங்களே இறைவன் திருவடிகளாக இருக்கின்றன எனப் பொருள் கொள் வாரும் உளர்.

இறைவன் உலாப் போகுங்கால் தேவர்கள் பாரிசாதப் பூக்களை மழைபோற் சொரிந்தமையின் 'புட்பவனம்' என்ற பெயரை உண் டாக்கினர் எனக் கூறினர். இதனுல் புட்பவனம், பூவனம் என் ருகிப் பூவனம், பூவணம் என மாறி அடைமொழியாகிய திரு சேர்ந்து திருப்பூவணம் என்ருகியிருக்கலாம் எனக் கருதவும் இடமேற்படு கிறது. புதுக்குதல்-புதுப்பித்தல். பழமையுடையது ஒன்றைப் புதுமையாக ஆக்குதலையே இவ்வாறு குறிப்பர். அதற்கேற்ப உரை கொள்ளுங்கால் முன்னர்ப் பாரிசாத மரம் வைத்து இறைவி யால் வளர்க்கப்பெற்றபோது பூவனம் எனப் பெயரோடு திகழ்ந்த ஒன்றை இந்த யுகத்தில் உண்மையாகவே புதுப்பித்தார்கள் தேவர்கள் என்ற கருத்தமையக் கூறினுர் எனக் கொள்ளலாம். இதற்கு இந்நூல் 29-ஆவது கண்ணியையும் ஒட்டிக் காண்க.

## குழாங்கள்

பாட்டுடைத் தலைவனுகிய பூவணத்து இறைவன் உலா வருங் கால் உருத்திர கணிகையர் வந்து நின்று பொதுவாக அவன்மேல் காதல்கொள்ளும் நிலை இத் தலைப்பிற் கூறப்பெறும். பின்னர் இவர் களிலே பருவ முறைப்படி ஒவ்வொருவராகச் சிறப்பாக அவன்மேல் காதல்கொள்ளும் முறையை எடுத்துக் கூறிச் செல்லுவர். இத் தலைப்பில் கணிகையர் கூட்டம் வந்து நின்ற நிலையினையும், அவர்கள் செயல்களையும் முறைப்படுத்திக் கூறுகிருர். குழாங்கள் என்ருல் யார்? என்பதற்கு உரிய எழுவாய் 138-ஆவது கண்ணியில் 'மடல் குவளைச் சேயரிக் கண் மின்னுர்' என்று கூறப்படுகிறது.

### குழாங்கள் வந்து நின்ற நிலை

129 ... ... ... —பெட்புமின்னுள்

130. போர்க்கைத் திருமழுவார் புட்ப வனப்புதுமை
பார்க்கத் திரண்டகிளிப் பண்பென்னப் - பேர்க்கரிய

131. நீலகண்டம் தம்போல் நிமலன் படைத்திருந்த
கோலநின்று பார்க்குமயிற் கூட்டமெனப் - பாலுகந்த

132. ஆகத் தழகியமின் னம்மை எழில்பார்க்க
மேகத்தை விட்டுவந்த மின்களென—ஏகவொற்றை

133. மான்விட் டதனுல் வசஞ்செய்தா னென்றறவோர்
தான்விட்ட மான்கூட்டத் தன்மையென - வான்முட்ட

134. ஏங்கக் குயிலைமகத் தீடழித்தான் என்றுபழி
வாங்கக் குயில்திரண்டு வந்தஎன - ஆங்கொரனம்

135. காணுப் பழிப்பகலக் கண்டறிவோம் என்றரன்முன்
சேணுட்டின் அன்னமெலாம் சென்றவெனத் - தாணுட்டு

136. முன்றிலின் மாட முகப்பினின் மேடையிற்செய்
குன்றினில் சாளரத்தில் கோபுரத்தில் - மன்றில்

137. தடத்தினில் மண்டபத்தில் சாரரங்கில் தெற்றி
இடத்தினில் வீதியினில் எய்தி - மடற்குவளைச்

138. சேயரிக்கண் மின்ஞர்நம் தெய்வப் பலாப்பழத்திற்கு
ஈயினத்தின் மொய்ப்பார் இருமருங்கும்

*பொழிப்புரை*

இதழ்களையுடைய குவளை போன்றதும், செம்மையான கோடு களை உடையதும் ஆகிய கண்ணையுடைய மின்னலைப் போன்றவர் கள், (138) விரும்பப்படும் தன்மையையுடைய மின்னனையாள் ஆய இறைவியும், போர்க்குரிய சிறிய அழகிய மழுவாயுதத்தையுடைய இறைவனும் புட்பவனம் ஆகிய இவ்வூரில் அமர்ந்திருக்கிற புதுமைக் கோலத்தைப் பார்ப்பதற்காகக் கூடியிருக்கிற கிளிகளின் தன்மை யைப் போலவும்.

நீக்க முடியாத நீல நிறம் பொருந்திய கழுத்தைத் தாம் பெற்றி ருப்பது போலவே மலமற்றவனுகிய இறைவனும் பெற்றிருக்கிற அழகை நின்று பார்க்கிற மயிற் கூட்டம் போலவும்,

இறைவனின் திருமேனியில் ஒரு பக்கத்தை விரும்பியேற்றுத் தங்கியிருக்கும் அழகிய மின்னம்மையாரின் அழகைப் பார்ப்பதற்காக மேகத்தை விட்டுக் கீழிறங்கி வந்திருக்கும் மின்னல்களைப் போலவும்,

வேகமாகச் செல்லும் தனி மானை அனுப்பியதால்தான் தனக்கு அடிமையாக ஆக்கிக் கொண்டான் என்று கூறிக்கொண்டு வந்ததாகிய தாருக வனத்து முனிவர்களால் அனுப்பப்பெற்ற மானின் கூட்டத்தைப் போலவும்.

தேவருலகம் முழுவதும் அரசனில்லையே யென ஏங்கிக்கொண்டு இருக்குமாறு தக்கனுல் செய்யப்பெற்ற யாகத்தின்கண்ணே குயில் வடிவு கொண்டு தப்பியோட முயன்ற இந்திரனைப் பெருமைக்

குறைவு செய்துவிட்டான் என்று பழி வாங்குவதற்காகக் குயில்கள் எல்லாம் திரண்டு வந்தன போலவும்,

முன்னொரு காலத்தில் பிரமனால் கொள்ளப்பெற்ற வடிவமாகிய ஒரு அன்னத்தினால் இறைவன் முடியைக் காணவில்லை என்ற பழிச்சொல் நீங்குமாறு அவனைக் கண்டறிந்து விடுவோம் என்று இறைவன் முன்னர் மிகுந்த தூரமாகிய நாட்டில் இருந்த அன்னங்க ளெல்லாம் ஒரு சேரத் திரண்டு வந்தன போலவும்.

தோரணத் தூண்கள் நாட்டப்பெற்றிருக்கிற முற்றத்திடத்திலும் மாளிகையின் முன் முகப்பிடத்திலும், மேடையிலும், செய்குன்றிலும் பலகணிப் பக்கத்திலும் கோபுரத்திலும், சபையிலும், நீர்க் கரை யிலும், மண்டபத்திலும், மண்டபத்தைச் சார்ந்த சபையிலும் திண் ணையாகிய இடத்திலும், தெருவிலும் வந்து இருபக்கங்களிலும் நம் முடைய தெய்வப் பலாப்பழத்திற்கு ஈக் கூட்டத்தைப் போல இறை வனாகிய பழம் வெளித் தெரியாதவாறு மூடிக் கொண்டார்கள்.

## அருஞ்சொற் பொருள்

மடல் - இதழ். பெட்பு - விரும்புதல். பேர்க்கு அரிய - நீக்கமுடியாத. ஆகம் - உடம்பு. பால்-ஒருபக்கம். அறவோர் - தாருகவன முனிகள். வான் முட்ட - தேவருலக முழுதும். மகம் - தக்கயாகம். ஈடழித்தான் - பெருமை குன்றச் செய்தான். தாள் - தோரணத் தூண்கள். சாளரம் - பலகணி; சன்னல். தடம் - நீர்க்கரை. தெற்றி - திண்ணை. மொய்த்தல் - பொருளை மூடிக் கொண்டிருந்துண்ணுதல்.

## விளக்கவுரை

சேயரிக்கண் மின்னார் (138) கிளிப்பண்பென்ன, மயிற் கூட்ட மென, மின்களென, மான் கூட்டத் தன்மையென, குயில் திரண்டு வந்தவென, அன்னமெலாம் சென்றவென முன்றில் முதலான இடங் களில் வந்தெய்தி, ஈக் கூட்டத்தைப்போல இருமருங்கும் மொய்ப் பார் எனப் பொருள் முடிபு கொள்ளுக. கிளியும் குயிலும் மொழி யாலும், மயில் சாயலாலும், மின்னல் தோன்றி மறையும் தன்மை யாலும், மான் நோக்கினாலும், அன்னம் நடையாலும் ஒப்புமை யாயின. செவிலித் தாயருடனன்றித் தனித்து வரப் பெறாமையின் பேதைப் பருவத்தாளை நீக்கித் தனித்துவந்து மொய்க்கும் தன்மை யுடைய பெதும்பைப் பருவமுதல் அறுபருவப் பெண்களும் வந்தார் கள் என்பதற்கேற்ப அறுவகை உவமைகளால் விளக்கினார். பெதும்பைப் பருவம் 8 முதல் 11 வயதுவரை உடைய காலமாதலின் அப் பருவப் பெண் காமக் குறிப்புக் கைவரப் பெறாதவளென்னினும் அது பற்றிய சொற்களை, நிகழ்ச்சிகளை ஓரளவு தெரிந்தவள். அவள் வாயினின்றும் அத்தகைய காமக் குறிப்புடைய சொல்முறை, செயல் முறை பிறப்பது பொருளற்றது ஆதலின் பொருள்நிலை அறியாது

பேசும் கிளியோடு பெதும்பைப் பருவத்தாளை ஒப்பிட்டுக் கூற லானுர். இனி மங்கைப் பருவமுடையாள் (12-13) காமத்தை ஓரளவு உள் வைத்துக் கண்டார்ப் பிணிக்குந் தகையவாய்ப் பிறரை மதியாது பெருமிதந் தோன்றச் செல்லும் நடையினையுடையாள் ஆதலின் அக்காலத்து அவள் நடையில் தோன்றும் ஒப்பற்ற பெரு மிதத் தன்மைக்கு ஒப்ப மயில் உவமிக்கப் பெற்றது. மடந்தைப் பருவமுடையாள் (14-19). காம நிலையினை நன்கு உணரும் தன் மையளாதலின் ஆடவரைக் காணுங்கால் நாணம் மிகுதிப்பட ஒரு இனந் தெரியா உணர்ச்சி வயப்படுதல் இயல்பாதலின் தோன் றியது தெரியாது மறையும் தன்மை அவட்கு உண்மையின் தோன்றி மறையும் மின்னல் உவமிக்கப் பெற்றது. அரிவைப் பருவத்தாள் (20-25) நாணம் ஓரளவு தாழ்ந்து காமம் சற்றுமிக்குத் தோன்றும் பருவத்தாள் ஆனமையின் ஆடவனைக் கண்டவுடன் திடீரெனச் சென்று மறையும் நாணத்தைச் சற்றுத் தடுத்துக் காமக் குறிப்பாம் கள்ளத்தன்மையோடு பார்க்கும் இயல்பினள் ஆதலின் அவட்கு மான் உவமிக்கப் பெற்றது. தெரிவைப் பருவத்தாள் (26-31) காமத்தைக் கண்டு, பழகிக், கொண்டு நுகர்ந்தவளாதலின் அப் பொருள் ததும்பப் பின்னும் பின்னும் நினைந்து கூறி அதன் வழிப் பட்டே காலம் போக்கும் இயல்பினளாதலின் பொருட் பொதிவோடு இனிமை உறையும் காம இயல் பேசுவதாகக் காம இயல் வல்லாரால் கருதப்பெறும் குயில் உவமை யாக்கப் பெற்றது.

இனிப் பேரிளம் பெண் காமம் முற்றும் கண்டு நுகர்ந்து இது சிறந்தது; இது தாழ்ந்தது என அதன் பெற்றியுரைக்கும் பெரும் பருவத்தினள் (32-40). மேலும் மலரினும் மெல்லிது காமம் சிலரதன் செவ்வி தலைப்படுவார் என்பதற்கொப்பக் காமப் பாதையில் நடக்கும் மென்மை நடை முற்றக் கைவரப் பெற்றவள் ஆதலின் அவ ளுக்கு அன்னம் உவமையாக்கி உரைக்கப் பெற்றது. இனி, ஆசிரியர் வெறும் உவமையோடு மட்டுமன்றி அவை வருதற்குரிய காரணங் களையும் கூறுகிருர். மயிலின் கழுத்து நீலநிறமாதலின் இறைவனின் கழுத்தும் தம்முடையதைப் போன்றே இருத்தலால் அதன் அழ கைக் கண்டு நிற்கின்றது மயிற் கூட்டம். மேலும் தன் கழுத்து அழகைத் தானே காணும் நிலை மயிலுக்கு முடியாதது ஆதலின் இறைவன் கழுத்தைப் பார்த்து அதனோடு தன் கழுத்தின் தன் மையைக் கூட்டி யுணரும் தன்மையுடையது எனவும் கொள்ளலாம். இறைவனின் ஒருபாதி உமையாதலின் 'பாலுகந்த ஆகத்தழகிய மின்னம்மை' என்ருர். மின்னம்மையைப் பார்க்க மின்னலே வந்தது. என்ற நயமும் இருக்கிறது. தாருகவன முனிகள் யாகத்தின் மூலமாக மானை உண்டாக்கி இறைவனைக் கொல்லுமாறு ஏவிய காலத்து இறைவன் அதைத் தன் வயப் படுத்தி விட்டான். இவ்வரலாற்றை

நினைவூட்டி ஒற்றை மானை அனுப்பியதால் அவ்வாறு செய்து விட்டான்; கூட்டமாகப் போவோம் என மான் கூட்டம் வந்தது. என்றார். சிவனை மதியாது செய்யப்பட்ட யாகம் தக்க யாகம். தேவரனைவரும் சென்றிருந்தனர். இறுதியில் வீரபத்திரரால் அந்த யாகம் அழிக்கப் பெற்றது. தேவரனைவரும் வீரபத்திரரால் பற்பல வகையில் தண்டிக்கப் பெற்றனர். அப்போது இந்திரன் குயில் வடிவு கொண்டு ஓட அதைக் கண்ட வீரபத்திரர் வாளால் தடிந்து அவனுக்குக் குறைபாடு உண்டாக்கினர் என்பது வரலாறு. அன்னம் காணுப் பழிப்பு என்பது அடி முடி தேடுங்கால் பிரமன் எடுத்த வடிவாகிய அன்னத்தால் முடியைக் காண முடியாத இழிவு. அம்மை வைத்து வளர்த்த பாரிசாதத் தரு இறுதி யுகத்தில் தெய்வப் பலாமரமாய்த் தழைத்த காரணம் பற்றி அதன் அடியில் இருக்கும் இறைவனைத் தெய்வப் பலாப்பழம் என்று குறித்தார். குழாங்களைத் தேனீக் கூட்டம் எனப் பொதுவுவமையில் கூறினர்; அனைவரும் சேர்ந்து ஒரு பொருளையே மொய்த்து உண்ணும் காரணம் பற்றி.

## குழாங்களின் செயல்

குழாத்தினரின் கூற்றும் செயலும் இடையிடையே விரவி வருகின்றன வாதலின் இப் பகுதிக்குக் குழாங்களின் கூற்று எனத் தலைப்பு அமைக்க இயலவில்லை. கூறுதலும் செயல் வகையுள் ஒன்றாதலின் இத்தலைப்பு அமைக்கப் பெற்றது.

138. ... ... ... —நேயமிகப்

139. பூத்து மலர்கருணைப் புட்பவனப் பூந்தேனைப்
பார்த்திருகண் வண்டால் பருகுவார் - தீர்த்தனணி

140. கங்கை தவத்தை வியப்பார் கதிரிமவான்
மங்கை தவத்தை வழுத்துவார் - தங்கள்

141. தவக்குறையை நோவார் தடந்தோளை நோக்கி
நிவக்கு முலைநோக்கி நிற்பார் - உவக்கும்

142. மிகச்சின்ன நுண்ணிடையார் மெல்லியலாள் வைத்த
நகச்சின்ன நோக்கியுளம் நைவார் - பகைச்சின்னம்

143. ஆவதென் என்றிவர்மேல் அவ்வேளெய் யானென்பார்
பாவம் கொடிதெம் பழியென்பார் - தேவரிவர்

144. வெள்ளிக் கிரிமுலையாய் மேவற் குபாயமிதென்
றள்ளித் திருநீ றலங்கரிப்பார் - உள்ளுறுபொன்

145. வாகார் பசலையிற்கை வன்சிலையாக் கொள்ளுமெனா
ஏகாசம் வீழ எதிர்நிற்பார் - மாகாதல்

146. வெள்ளத்தை நீந்த விடையோனை நாவாய்கேட்
டுள்ளத்தின் உள்ளே உருகுவார் - வள்ளல்

147. திருமேனிப் பாதியே தெள்ளமுதம் மற்றை
ஒருபாதி யும்விடமென் றோர்வார் - அரன்மேல்

148. விரிபூ மழைபோல் விரியாது தம்மேல்
சொரிபூ மழைநோக்கிச் சோர்வார் - அரிதாய

149. எம்மருந்தி னுற்சடைமேல் இந்து குளிர்ந்திருப்ப
தம்மருந்தைச் சொல்லீர் அடிகளென்பார் - விம்மியமீன்

150. மேல்வலைவீ சிப்பிடித்தீர் மேனுளிந் நாள்விழிமீன்
மால்வலைவீ சிப்பிடிப்பீர் வந்தென்பார் - சால்கூடல்

151. செய்க்கரும்பைக் கல்லானை தின்னக் கொடுத்தீர்வேள்
கைக்கரும்பைத் தின்னுதோ காணென்பார் – மெய்க்கரும்பாம்

152. பட்பவள வாயர்முனி பன்னியர்வாழ் தாருவனம்
புட்பவனம் ஆக்கினீர் போந்தென்பார் - புட்பவனம்

153. காணி உமக்கோவிற் காமனுக்கோ சொல்லீர்கைப்
பாணிமழு வேந்துநீர் பார்த்தென்பார் - தூணிமத

154. னுரைத் தடுத்தே அடைவார் வினைதீர்த்த
பேரைப் புதுக்கீர் பிரானென்பார் - பாரித்த

155. தேரோட ஓடப்பின் சென்றோடி ஓடிக்கண்
நீரோட ஓடநின்று நெட்டுயிர்ப்பார் - சீரோடும்

156. அவ்விரத வாதந்தான் அன்றுசெய்தார் இன்றுசெய்தார்
இவ்விரத வாதம் எமக்கென்பார் - கவ்வைக்

157. கிடைவார் கலையும் இழப்பார் உருகி
உடைவார்

*பொழிப்புரை*

புட்பவனம் என்னும் பூவணத்திலே அன்பு மிகுதியும் பூத்து மலர்ந்திருக்கின்ற (மலரில் உள்ள) கருணை என்கிற மலர்த் தேனைப் பார்த்து இரு கண்களாகிய வண்டுகளாற் பருகுவார் ;

எல்லாவுயிர்களின் வினைகளையும் தீர்த்து வைப்பவனுகிய இறைவன் அணிந்திருக்கிற கங்கையின் தவச்சிறப்பை வியந்து கூறுவார்;

புகழ் என்னும் கதிர்களை (கிரணங்களை) வீசுகின்ற இமயமலையரசனின் மகளாகிய பார்வதியாம் உமையம்மையின் தவத்தை வாழ்த்திக் கூறுவார் ;

தங்களின் தவக் குறைபாட்டை நோக்கி வருந்துகின்றவர் ஆனார்கள்;

இறைவனுடைய தோளைப் பார்த்த வண்ணம் மேல் நோக்கி நிற்கும் முலைகளின் பெருமிதத்தை நோக்கி நிற்பார்கள் ;

தன் கருத்து நிறைவேறப் பெற்றதால் மகிழ்ந்து கொண்டிருக்கிற மிகச் சிறிய நுட்பமான இடுப்பினை யுடையவராகிய பொன்னனை யாள் இறைவனை அள்ளி முத்தம் இட்டகாலை அமைத்த நகக்குறி யைப் பார்த்து உள்ளம் வருந்துவார் ;

முன்னொரு முறை பகைத்ததால் உருவிழந்தோம் இனியும் பகைத்தால் ஆகக்கூடியது என்னவோ எனப் பயந்து இந்த இறைவன் மேல் மன்மதன் மலரம்பு எய்யான் என்பார்;

யாம் செய்த பாவம் கொடியது போலும் ஆதலின் இத்தகைய பழிப்பு-குற்றம் வந்தது போலும் எனக் கூறுவார் ;

தெய்வத் தன்மை பொருந்திய உயர்ந்தவனும் இத்திருப் பூவண நாதர் தாம் விரும்பித் தங்கியிருக்கும் வெள்ளிமலை நம்முடைய முலையாகவே அமைய, நம்மை விரும்பித் தங்கியிருப்பதற்கு நாம் மேற்கோள்ள வேண்டிய வழி இந்த ஒன்றுதான் எனக் கருதித் திருவெண்ணீற்றை மிகுதியும் எடுத்து உடம்பில் அலங்கரித்துக் கொள்வார் ;

உட்பகுதியிலே மிகுந்த பொன்னைப் போல் அழகு அமைந்த பசலையை உடைமையால் (இவையும் மேரு போன்றவையே) இவை களை (முலைகளை) முன் பொன் மயமான மேருவை வில்லாகக் கொண்டது போல இப்போதும் கையில் பழகிக் கொண்டேயிருக்கும் வன்மையாகிய சிலையாக ஏற்றுக் கொள்ளுக என்று கூறி மேலாடை விழுமாறு எதிர்நிற்பார்;

விடையூர்ந்த விமலனிடம் பெரிய காதல் வெள்ளத்தை நீந்திப் பிழைக்க ஒரு கப்பலைக் கேட்டு, (நாவாய்-நாக்கும் வாயும்- நாவால் விளையும் இனிய காதல் மொழிகளையும், வாயால் விளையும் இனிய முத்தங்களையும் கேட்டு) உள்ளத்துக் குள்ளேயே உருகிக்கொண்டு இருப்பவரானார்;

இறைவனும் வள்ளலின் உடம்பில் பாதியளவே இன்பத்தை அளிக்கும் தெளிந்த அமுதம் ஏனைப் பாதியும் துன்பத்தை விளைவிப் பதால் நஞ்சுபோன்றது என்று கருதி ஆராய்பவரானார்;

இறைவன் மேல் தேவர் முதலியோர்களால் வீசப்பெறுகிற விரிந்த பூமழையைப் போல மன்மதன் தம்மேல் மிகுதியாக வீசு கின்ற விரியாத மொட்டுக்களாகிய பூமழையை நோக்கிச் சோர்வு அடைவாராயினர் ;

இறைவன் சடைமேல் இருக்கும் சந்திரன் அருமையுடைய தாகிய எந்த மருந்தினுல் குளிர்ச்சியுடையதாக இருக்கிருன், இறைவனே! அம்மருந்தை எனக்கும் கூறுவீராக என்று கூறுவார்;

விம்மித முற்றுப் பருத்த மீனின் மேல் வலைவீசிப் பிடித்தீர் முன்னெருநாள் மதுரையில், அதேபோல் இன்று என்னுடைய விழிகளாகிய மீன்களை மயக்கம் என்னும் வலை வீசி வந்து பிடிக்கின்றீர் என்று கூறுவார்;

அமைந்த நான்மாடக் கூடலாகிய மதுரையில் வயலில் விளைந்த கரும்பைக் கல்யானை தின்னுமாறு கொடுத்தீர். நிலத்தில் விளைந்த கரும்பை நீக்கி, மன்மதன் கையில் உள்ள வில்லாகிய கரும்பைக் கொடுத்தால் தின்னுதோ என்று கூறுவார்;

உண்மைக் கரும்பைப்போல் இனிக்கும் பண்முறை அமைந்ததும் பவளம் போன்றதும் ஆகிய வாயினையுடையவராகிய முனி பத்தினியர் வாழ்கின்ற தாரு வனத்தை நீர் வந்து முன்னெருநாள் புட்பவனமாக ஆகுமாறு செய்தீர்;

திருக்கையில் சிறிய மழுவாயுதத்தை ஏந்தும் நீர் இப்புட்பவனம் உரிமை நிலமாக இருப்பது உமக்கா அல்லது வில்லைக் கையிலே கொண்ட மன்மதனுக்கா என்பதை ஆய்ந்து பார்த்துச் சொல்வீராக என்பார்;

அடைபவர்களின் வினைகளைத் தீர்த்து 'வினைதீர்த்தான்' என வைத்துக்கொண்ட பெயரை அம்பருத்தூணியையுடைய மன்மதனைத் தொழில் செய்ய வொட்டாது தடுப்பதன் மூலமாகப் புதுமைப் படுத்திக் கொள்ளுக என்பார்;

இறைவனைத் தாங்கிக் கொண்டிருக்கிற தேரானது ஓட ஓட அதன் பின்னுல் சென்று ஓடி ஓடிக் கண்ணில் நீர் ஓட ஓட நின்று பெருமூச்சு விடுவார் ஆயினர்;

சிறப்பு மிகுகின்ற அந்த இரசவாதத்தை முன்னெரு நாள் செய்தார்; இன்று நாங்கள் அவரை அடைய முடியாதபடி இந்தத் தேரினுல் என்னைத் தடுத்தலை எமக்கு இன்று செய்து விட்டார் என்று கூறுவார்;

மேன்மேல் வருந் துன்பத்துக்குப் பின்னிட்டு வருந்துவார்; உடுத்திய ஆடையையும் இழப்பார்; உள்ளம் உருகிக் கட்டுத் தளர்வார்.

## அருஞ்சொற் பொருள்

நோதல் - துன்பத்தை எண்ணி எண்ணி வருந்துதல். நிவக்கும் - மேல் நோக்கும். பகைச்சு — இன்னல்; பகைச்சின்னம். பகைத்து, பகைச்சு என்ருயது. வாகு - அழகு. ஏகாசம் – மேலாடை. நாவாய் -

கப்பல். இந்து – சந்திரன். மால் – மயக்கம். கூடல் - மதுரை. செய் - வயல். பன்னியர் - பத்தினிகள். காணி - உரிமை நிலம். பாணி - கை. கை - சிறிய. தூணி - அம்புப்புட்டில். பாரித்த – பரித்த - தாங்கிய, நெட்டுயிர்த்தல் - பெருமூச்சு விடுதல். இரதவாதம் - இரசவாதம்; ஒரு உலோகத்தை வேறு உலோகமாக்கல். இரதம் – தேர். வாதம் - தடுத்தல். கவ்வை- துன்பம். இடைதல் - பின்னிடுதல். கலை - ஆடை.

*விளக்கவுரை*

பூவணத்து இறைவன் ஓர் அன்பு மலர். அம்மலரில் கருணை என்ற தேன் இருக்கிறது. அதனைக் குழாங்கள் தங்கள் கண்கள் என்ற வண்டுகள் மூலம் பருகுகின்றார்கள் என்பதை 139 ஆம் கண்ணியால் குறிக்கின்றார். மலர் இருக்கின்ற இடம் புட்பவனம் என்பது இயல்பிலேயே பெயராய் அமைந்து விட்டது அவ்வூருக்கு. அன்பு என்ற மலர் கருணை என்ற தேனை உண்டாக்குகிறது. அன்பு தாய்; அருள் குழந்தை என்ற கருத்தை அருளென்னும் அன்பு ஈன் குழவி என்ற வள்ளுவர் வாக்கால் உணர்க.

பொன்னனையாள் அள்ளி முத்தமிட்ட காலை உண்டாகிய நகக் குறியை ஆசிரியர் 398 ஆவது கண்ணியால் விளங்க உரைக்கின்றார். இறைவன் விரும்பித் தங்குவது வெள்ளிமலையாதலின் நம் முலையையே வெள்ளி மலையெனக் கொண்டு இறைவன் தங்கியிருக்க வேண்டும் என்பது குழாங்களின்கருத்து. இப்பேற்றைப் பெறுவதற்கு வழி எப்பேறும் அளிக்கும் திருநீறு பூசுதலே எனத் தெரிந்து அதைப் பூசினர் என்பது. 'வெள்ளிக்கிரி முலையாய்' என்பதை விளியாகக் கொள்ளக் கூடாது; குழாங்களின் கூற்றில் ஒருவரை ஒருவர் தங்களுக்குள்ளேயே பார்த்துக் கூறிக் கொள்ளுதல் என்பது இல்லையாதலின்,

'வள்ளல்திருமேனிப் பாதியே தெள்ளமுதம் மற்றை ஒருபாதியும், விடம்' என்ற தொடர் இரு பொருள் கொள்ள நின்றது. இறைவன் திருமேனியில் ஒருபாதி அமுதமாக இருந்து இன்பம் அளிப்பது, ஏனைப் பாதி நஞ்சுபோல் துன்பம் அளிப்பதாகவுள்ளது எனக் கூறினர். காம வயப்பட்டு நிலையழிந்து கூறுகின்றார் ஆகலின் பார்வதியின் உருவமாகிய ஒருபாதி தங்களை ஏதும் வருத்தாமையின் அப்பாதியை அமுதம் என்றும், ஏனைப்பாதி பெருமானின் உருவமாக இருந்து காமநிலையை மிகுதியும் வளரச் செய்து உள்ளத்தை வெதுப்புகின்றது ஆதலின் அப்பகுதியை விடம் என்றும் குறித்தார் எனக் கொள்ளலாம். இனி, பார்வதியின் பாகமாகிய பாதியை விடம் என்றும் இறைவன் பாகமாகிய பாதியை அமுதம் என்றும் கூறியதாகவும் கொள்ளலாம். பெண்களின் உளநிலைப்படி நோக்கும்போது அவர் தன்னால் விரும்பப் பெற்றுத் தனக்கு இன்பம் நல்கும் ஒருவன் வேறு பெண்ணுக்கும் இன்பம் தருகிறான் என்பதை எள்ளளவும்

பொருள் என்பது விளங்கும். அவ்வாறே தன்னால் இன்பம் நுகரும் அமுத பாகத்தைப் பார்வதியும் நுகர்கிறாள் என்பதைப் பொருதவர் ஆனமையின் அப்பார்வதியாகிய பாகத்தை நஞ்சு என்றார். காமம் உயிரைக் கொண்டு போகாதவாறு நிலை நிறுத்துகின்ற காரணத்தால் அமுதம் என்றும், உயிரழிவு செய்கின்றமைக்குக் காரணமாக இருத்தலின் நஞ்சு என்றும் குறித்தார். இரண்டு உரைகளுக்கும் இது பொருந்தும்.

மன்மதன் எய்கின்ற அம்புகளாகிய மலர், மொட்டு அரு மலராதலின் 'விரியாது தம்மேற் சொரி பூமழை' என்றார். இறைவன் சாபத்தால் சுறுமீன் வடிவு கொண்ட திருநந்தி தேவர் எவ்வலைஞர்க்கும் அகப்படாது கடலைக் கலக்க, அப்போது வலைஞர் தலைவன் மகளாய்ப் பிறந்து வளரும் பார்வதியை மணக்க விரும்பி வலைஞன் உருக்கொண்டு வந்து கடலிற் சென்று வலைவீசிச் சுறுமீனைப் பிடித்துப் பார்வதியை மணந் தார் என்ற திருவிளையாடற் புராண வரலாற்றை 150 – ஆவது கண்ணியிற் குறித்தார். மீனை வலைவீசிப் பிடித்த பழக்கத்தால் மயக்கம் என்ற வலையை வீசிக் கண் என்னும் மீனைப் பிடிக்க வந்தீர் போலும் எனக் குறித்தார். கூடல்மாநகரில் பாண்டியன் விருப்பப் படி கல்யானையைக் கரும்பு உண்ணச் செய்தான் இறைவன் என்ற திருவிளையாடலை நினைவு படுத்தி, மன்மதன் கையிலிருக்கிற வில்லாகிய கரும்பை அப்போதே அளித்திருந்தால் இன்று இக் காமன் என்மேல் அம்பு எய்து வெல்லமாட்டான் ஆதலின் சாதா ரணக் கரும்பைக் கொடுத்தால் தின்னுதோ எனக் குறிப்பாகக் கேட்டனர் குழாங்கள்.

முனிபன்னியர் என்பார் தாருக வனத்து முனிபத்தினியர். இவர் இருந்த இடம் தாருவனம். இங்குள்ள முனிபத்தினியர் இறைவனைக் கண்டு காமம் மிகப் பெற்றார் ஆதலின் அக்கருத்தை உட்பொருளாக வைத்துத் தாருவனத்தை மன் மதனின் அம்பு நிறைந்ததால் புட்பவனமாக்கினீர் என்றார்கள். காணி – உரிமை நிலம். நீவிர் காமனை வென்றவர். உமது ஊரில் காமனால் துன்புறுத்தப் படுகிறார்கள் எம்போன்றவர். ஆதலின் இந்த நிலத்திற்கு உரிமை யுடையவர் நீரா? அல்லது காமனா? நீரோ கையில் மழுவினைக் கொண்டுள்ள வேந்து. அது மட்டுமின்றி அடைவார் வினை தீர்த்தவன் என்ற பட்டப் பெயரையும் உடையாய். இவ்வளவிற்கும் இழுக்கு வரும். ஆதலின் மன்மதனுரின் செயலை மழுவாயுதம் கொண்டு தடுத்து, நிலத்தை உனதாட்சியிற் கொண்டு வந்து, அடைந்தவர் வினையைத் தீர்ப்பவன் என்ற பெயரையும் புதுப் பித்துக் கொள்ளுக என்று கூறினார்கள். பொன்னனையாளுக்காக வந்து இரசவாதம் புரிந்த செயல் பாண்டி நாட்டுத் திருவிளையாடல்

களுள் ஒன்று. இதுவரை எம்பெருமானையே பார்த்து அவரிடம் சொல்லிக் கொண்டிருந்தவர்கள், எம்பெருமானைத் தேர் தன்னிடமிருந்து அழைத்துச் சென்றுவிட்டது ஆகலின் தாங்களே தங்களுக்குள் கூறிக்கொள்ளும் முறையில் 156 – ஆம் கண்ணியை அமைத்தார்.

# 1. பேதை

பூவணத்து இறைவன் உலாப் போகுங்கால் பேதை முதல் பேரிளம் பெண் ஈருக எழு பருவப் பெண்களும் கண்டு காமம் கொண்டதாகச் சொல்ல முற்படும் ஆசிரியர் முதலாவதாகப் பேதைப் பருவத்தாள் இறைவனைக் கண்டு காமுற்ற நிலையைக் கூறுகிறார். இவள் ஐந்து முதல் ஏழுவரை உள்ள வயதுடையவள். காமம் அறியாப் பருவத்தினள்.

### பேதைப் பருவத்தாளின் எழில் விளக்கம்

157. ... இவருள் ஒருத்தி—தடமலரோன்

158. அட்டதிக்கார் பெண்மை அழகு குடிபுகுத
விட்டதொரு மூர்த்தமென்னு மென்பேதை - கிட்டுநனை

159. கூறும் பொதிமலர்பூங் கொட்டை மதுமணமோர்
ஆறுந்தன் உள்ளடக்கும் அம்புயம் - சீறும்

160. விழிதாங்கு நாதனைவில் வேளிரதி பண்டைப்
பழிவாங்கப் பெற்றனைய பாவை - எழில்தாங்கு

161. சங்கை மருவாத் தரளம் இரதிபதி
செங்கை மருவாச் சிறுகரும்பு - பொங்கநலம்

162. பூத்தறியாப் பூங்கொம்பு போகமறி யாப்பைங்கூழ்
கோத்தறி யாத குலரத்னம் - ஏத்த

163. விரித்தறியாத் தோகைமயில் வெண்பாலு நீரும்
பிரித்தறி யா தவன்னப் பிள்ளை - மரித்தறியா

164. மைதிகழு நீலகண்டன் வாழ்கின்ற புட்பவனம்
எய்திவினை யாடா இளஞ்சுரும்பு - வைதிகநூல்

165. நேசன் திருக்கரத்தி னின்றுந்தென் புட்பவன
வாசம் செயக்குதித்த மான்கன்று - வீசியவாட்

166. போரறி யாத பொலங்குழையாள் மன்மதனால்
பேரறி யாத பிராயத்தாள் - வார்வீழ்த்த

167. கொங்கையைச் செப்பென்றுவைத்துக் கொண்டுவிளை
[யாடமட
மங்கையரைக் கேட்டு வருந்துவாள் - தங்குமனைச்

168. செய்யசுவர்ச் சித்திரத்தில் தீட்டுகத லிக்கனியைக்
கையில் கிளியருந்தக் காட்டுவாள் - ஐயமறப்

169. பூசைவரக் கண்டோடிப் போயோ வியப்புறவை
ஆசையுடன் கூட்டில் அழைத்தயர்வாள் - வீசுமுன்றில்

170. வெள்ளைக் கதிர்நிலவை வெண்பால் எனப்பளிக்கு
வள்ளத் தினின்முகந்து வாய்வைப்பாள் - விள்ளும்

171. படிசேர் இருலிற் படுகோது நீக்கி
வடியாத தேன்மழலை வாயாள் - கடியாமுன்

172. பல்லைவிடப் போகாப் பணிநஞ்சு போலத்தன்
எல்லைவிடப் போகா இருவிழியாள் - தொல்லபர

173. பக்கக் கலைகள் பயப்பயப் போய்த்திரும்ப
ஒக்க நிறைந்தனைய ஒள்நகையாள் - மிக்கமுத்தி

174. நாட்டினுமா ரூர்விரும்பு நாவலூ ரன்மணம்போல்
கூட்டினும் கூடாத கூந்தலாள் - வீட்டில்

175. நிறைந்த திருநெடுமால் நீள்செவியி னுள்ளே
மறைந்த மதுகயிட வர்போல் - பெறும்பிரண

176. வத்தில் அடங்கு மறைபோல் ததீசிசரீ
ரத்தில் அடங்குவச்சி ராயுதம்போல் - குத்திரத்தின்

177. மேலொரு நாளொருத்தி மெய்யிற் கனல்வேந்தன்
சால ஒளித்த தகைமைபோல் - வாலிதனை

178. எய்ய மறைந்த இராமன்போல் தோன்றிவர
மெய்யின் மறைந்த வியன்முலையாள் - துய்யநிறம்

179. துன்னு பளிக்குமுன்றில் தோன்றுநிழற் பாவைதனை
இன்னுயிர்ப் பாங்கி எனக்கொண்டு - தன்னகத்தில்

180. சிற்றில் இழைத்தயரும் சேயிழையாள்

## பொழிப்புரை

குழாங்கள் எனக் குறிப்பிட்டவருள் ஒருத்தி, பெரிய தாமரை மலரில் வீற்றிருக்கின்ற பிரமன் எட்டுத் திக்குக்களிலும் அமைந்திருக்கும் பெண்மையின் அழகு முழுவதும் ஓரிடத்தில் திரண்டு குடி-

புகுமாறு அமைத்துப் போக விட்டதாகிய ஒரு வடிவம் என்று சொல்லத் தகும் மென்மையையுடைய பேதை,

இறுக்கிக் கிடக்கும் இதழ்களையுடைய அரும்பு, தான் இருப்பதைப் பிறருக்கு எடுத்துக் கூறும் தன்மையுடையதாகிய போது, நன்றாய் மலர்ந்த மலர், பொலிவு பெற்ற கொட்டை, தேன், மணம் என்று கூறப்பெறும் ஆறினையும் தன்னுள்ளே அடக்கி வைத்துக் கொண்டிருக்கும் தாமரை,

தன்னைக் கோபிக்கும் நெற்றிக் கண்ணைத் தாங்கிக் கொண்டிருக்கிற சிவனை முன் எரித்த நிகழ்ச்சி காரணமாகப் பழி வாங்குவதற்காக வில்லைக் கையில் கொண்ட மன்மதன் இரதியோடு கூடிப் பெற்றாலொத்த கொல்லிப் பாவை யனையாள்,

அழகைத் தாங்கிக் கொண்டிருக்கிறதும், சங்கிலிருந்து தோன்றாததும் ஆகிய முத்து,

இரதிதேவியின் கணவனாகிய மன்மதன் கையைச் சேராத சிறிய கரும்பு,

அழகு பொங்குமாறு பூத்து அறியாத பொலிவு வாய்ந்த கொம்பு,

விளைச்சலை அறியாத பசுமையான பயிர்,

கோக்கப் பெறுதலை அறியாத உயர்குலத்துத் தோன்றிய மாணிக்க மணி,

புகழ்ந்து பேசுமாறு விரிப்பதை அறியாத தோகை மயில்.

வெண்மையாகிய பாலையும் நீரையும் தனித்தனியே பிரித்து அறிந்து கொள்ள முடியாத சிறிய அன்னம்,

இறத்தல் என்பதையே அறியாதவனாகிய கருமை விளங்கும் நீலக் கழுத்துடையவனும் இறைவன் வாழ்கின்ற திருப்பூவணத்தை அடைந்து விளையாடாத இளவண்டு,

வேதத்தை அடிப்படையாகக் கொண்ட ஒழுக்க நூல்களை விரும்பும் சிவபெருமானின் திருக்கரத்திலே யிருந்து திருப்பூவணத்தில் வசித்தலை மேற்கொள்ளுதற்காகக் குதித்த மானின் கன்று,

வீசிச் செய்யப் பெற்ற வாளை ஒத்த கண்களின் போரை அறியாத பொற் குழையை உடையவள்,

மன்மதன் நூலாகிய காம இயல் நூலின் பெயரைக் கூடத் தெரிந்து கொள்ளாத வயதுடையவள்,

(பிற மங்கையர்களின்) கச்சு நீங்கிய முலைகளைக் குடம் என்று கருதி, கையகத்து வைத்துக்கொண்டு விளையாடுதற்காக அந்தச்

செப்பினைத் தருக என்று மடமைத் தன்மை வாய்ந்த பெண்களைக் கேட்டு அவர்கள் கொடுக்காத காரணத்தால் வருந்தும் நிலையுடையாள்,

தாம் வசிக்கும் வீட்டினையுடைய சுவரிலே செம்மையாக எழுதப் பெற்ற ஓவியத்தில் உள்ள வாழைப் பழத்தைத் தன்கையில் உள்ள கிளிக்குத் தின்னுவாயாக என்று காட்டுவாள்,

சந்தேகம் இல்லாத முறையில் (உண்மையாகவே) பூனை வருவதைப் பார்த்து ஓடிச் சென்று ஓவியத்தில் அமைந்த புருவை 'பூனை வருகிறது கூண்டிற்கு வந்துவிடு' எனப் பன்முறையும் ஆசையோடு அழைத்து வராத காரணத்தால் சோர்வு பெறும் நிலையுடையாள்,

வீட்டின் முன் முகப்பில் வீசுகின்ற வெள்ளையாகிய நிலவின் ஒளியை வெண்மையான பால் எனக் கருதிக் கண்ணாடிக் கிண்ணத்தில் முகந்து வாயிலே வைத்துக் கொள்ளுவாள்,

உடைந்து ஒழுகத்தான் வேண்டும் என்ற நிலையுண்டாகும்படி அதிகமாகச் சேர்ந்திருக்கின்ற தேனைக்கொண்ட தேனடையில் இருக்கின்றதும், குற்றம் தரும் பொருள்களை நீக்கி வடித்து எடுக்கப் பெறாததும் ஆகிய தேனைப் போன்ற மழலைச் சொல் பேசும் வாயினையுடையாள்,

கடிக்காததற்கு முன் பல்லின் இடத்தை விட்டு அந்தப் பக்கம் (வெளிப் பக்கம்) போகாத பாம்பின் விஷத்தைப்போலத் தன்னுடைய எல்லையை விட்டு அப்பால் செல்லாத இருவிழிகளையுடையவள்,

சந்திரனின் பழமையான பின் பக்கத்தில் (அமரபக்கம்) கலைகள் கொஞ்சம் கொஞ்சமாகத் தேய்ந்து கொண்டே சென்று பின்னர் ஒருசேர வந்து நிறைந்தது போன்ற ஒண்மைத் தன்மை வாய்ந்த பற்களை யுடையவள்,

எல்லாப் பண்புகளையும் மிகுதியாகக் கொண்டு விளங்கும் முத்தியுலகத்தைவிடத் திருவாரூரையே சிறந்ததெனக் கொண்டு விரும்புவரும் திருநாவலூரிற் பிறந்தவரும் ஆகிய சுந்தரமூர்த்தி சுவாமிகளுடைய திருமணத்தைப்போல முயற்சி செய்து முடிப்பதற்காக ஒன்று சேர்த்தாலும் ஒன்று சேராத கூந்தலினையுடையவள்,

பிரளயகாலத்தில் அனைத்தையும் அடக்கி அறிதுயில் கொண்டிருந்த திருமாலின் நீண்ட இரு காதுகளினுள்ளே மறைந்திருந்த மது கயிடவர் என்ற இரண்டு அசுரர் போலவும்.

பெருமைத் தன்மை வாய்ந்த ஓம் என்ற பிரணவப் பொருளில் அடங்குகின்ற வேதத்தைப் போலவும்,

ததீசி முனிவனின் உடலில் அடங்கியிருந்த வச்சிராயுதத்தைப் போலவும்,

வஞ்சனையினால் முன்னொரு காலத்தில் ஒருத்தியின் உடம்பிலே நெருப்புக் கடவுள் மிகுந்த காலமாக மறைந்திருந்த தன்மையைப் போலவும்,

வாலியைக் கொல்வதற்காக மறைந்த இராமனைப் போலவும் பின்னொருகால் வெளிப்பட்டு வருவதற்காக மறைந்திருக்கின்ற பருத்த முலையினையுடையாள்,

தூய்மையான நிறம் பொருந்திய பளிங்குக் கல்லால் அமைக்கப் பெற்ற முன் வீட்டிலே தோன்றுகின்ற தன்னுடைய நிழலாகிய பாவை போன்ற உருவத்தைத் தன்னுடைய இனிய உயிர்த்தோழி எனக் கருதிக் கொண்டு தன் வீட்டிலேயே சிறுவீடு ஒன்று கட்டிப் பின் சோர்வடைகின்றவளாகிய செம்மையான ஆபரணங்களை அணிந்து கொண்டிருக்கும் பேதை,

### அருஞ்சொற் பொருள்

மூர்த்தம் - உருவம். நனை - அரும்பு. பொதி - போது; மலர்ந்தும் மலராதும் இருக்கின்ற நிலையுடைய பூ. இரதிபதி - மன்மதன். போகம் - விளைச்சல். கூழ் - பயிர். மரித்தறியா - இறந்தறியாத ; அழியாத. வார் - கச்சு. செப்பு : சிறு குழந்தைகள் விளையாட்டுக்கென வைத்திருக்கும் குடம். கதலிக்கனி - வாழைப்பழம். பூசை - பூனை. வள்ளம் - கிண்ணம்: இறால் - தேனடை. கோது - குற்றம்; சக்கை. பணி - பாம்பு. அபரபக்கக் கலைகள் - தேய்பிறைக் கலைகள். குத்திரம் - வஞ்சனை.

### விளக்கவுரை

உலகில் உள்ள அழகுக்கெல்லாம் உறைவிடமாகிய வடிவமே பேதை என்று கூறினார்.

தாமரையானது அரும்பு, போது, மலர், கொட்டை, தேன், மணம் என்ற ஆறையும் தனக்குள் அடக்கிக் கொண்டிருப்பதுபோல் பேதைப் பெண்ணும் இனி வரும் பெதும்பை, மங்கை, மடந்தை, அரிவை, தெரிவை, பேரிளம் பெண் என்ற ஆறுபருவங்களையும் தன்னுள் அடக்கியிருக்கிறாள் என உருவகமாக்கிக் கூறினார்.

பாவை - கொல்லியம்பாவை. இது வல்வில் ஓரிக்குச் சொந்தமாகிய கொல்லிமலையில் இருந்தது ; மிக்க அழகு வாய்ந்தது ; இயற்கைக் கோளாறுகள் எவற்றாலும் அழியாதது; அதை ஒத்த அழகு நிலையுடையாள் பேதை என்பதாம்.

எழில்தாங்கு சங்கு எனச் சிறப்பித்தது வலம்புரி என்ற குறிப்பு உணர்த்தியது. முத்தினையும், கரும்பினையும் போன்றவள் என்பதையே நயமுற அமைத்தார். 'கண்டு கேட்டு உண்டு உயிர்த்து

உற்று அறியும் ஐம்புலனும் ஒண்தொடி கண்ணே யுள' என்ற வள்ளுவர் வாக்கின்படிப் பெண் ஐம்புலவின்பமும் தரு தற்குரியளாயினும் பேதைப் பருவத்துப் பெண் உற்று, உண்டு என்ற இரு இன்பமட்டுமே விளைப்பவளாதலின் முத்து, கரும்பு ஆய இரண்டை மட்டுமே உவமை ஆக்கினர். முத்து, தொடுதல் உணர் வால் குளிர்ந்தின்பம் தருவது. கரும்பு நெருக்கி நுகர்ந்துண்டகாலை இன்பம் விளைப்பது. இளங்கோவடிகள் கோவலன் வாயிலாகக் கண்ணகியைப் புகழ்ந்து கூறிய 'மலையிடைப் பிறவா மணி' என்பது போன்ற தொடர்களை இக்கண்ணி (161) நினைவுறுத்துகிறது.

இற்றைக்குப் பேதையாக இருக்கும் இவளே பின்னர்ப் பூத்த கொம்பு, விளைந்த பயிர், கோத்த இரத்தினம், விரித்த தோகை மயில், பால்நீர் பிரித்தறியும் அன்னம், புட்பவனம் எய்தி விளை யாடும் வண்டு ஆக ஆகிறவள் என்று குறித்தார். இங்கே குறித்த கொம்பு, பயிர் முதலிய ஆறும் அவளுடைய பின்வரும் பெதும்பை முதலாகிய ஆறு பருவங்களைக் குறித்தன. கொம்புக்குப் பூத்தலும், பயிருக்கு விளைவும் முதலியன பிறர் செய்விக்க வேண்டாது இயல் பில் தோன்றுவன. பேதையும் "விளையும் பயிர் முளையிலே" என் பதற்கொப்பப் பின் விளைவுக்கு ஏற்ற திறமையுடனேயே இருந்து வந்தாள் என்பதாம். பேதையின் நிலை அவள் பிற்கால நிகழ்ச்சியை முன் கூட்டியே ஆசிரியர்க்கு உணர்த்தியது என்பதாம்.

பேதைப் பருவத்தாள் இயற்கையறிவின் தன்மையை - சிறு பிள்ளைத் தனத்தை, மட மங்கையரின் கொங்கையைச் செப்பு என்று கேட்டல், ஓவியத்திற் கண்ட வாழைக் கனியைக் கைக் கிளிக்குக் காட்டி உண்ணுமாறு வேண்டல், உண்மைப் பூனையைக் கண்டு ஓவியப் புருவைக் கூட்டிற்கு வரவழைத்துச் சோர்தல், நிலவைப் பாலென்று எண்ணல் ஆகிய செயல்களின் மூலம் அமைத்துக் காட்டினர்.

வீசிய வாட்போரறியாத பொலங்குழையாள் (166) என் பதையே வேறொரு வகையாகத் 'தன் எல்லைவிடப் போகா இரு விழியாள்' எனக் குறித்தார்.

பாம்பின் பல்லில் உள்ள நஞ்சு அப்பாம்பினல் பிறர்மேல் செலுத்துங்கால் அந்நஞ்சு அவரைக் கொல்வது போலப் பேதையின் கண்களும் உரிய காலம் வாய்த்து அவளால் பிறர்மேல் செலுத்தப் பெறுமாயின் அவர் அழிவர் என உவமை அமைத்தார்.

ஒள்+நகையாள் என்பது ஒண்மையுடைய பற்களையுடையாள் என்பதாம். இளமைப் பற்கள் ஒவ்வொன்ருக விழுந்து ஏழு வயதள வில் புதிய பற்கள் முளைக்கும் என்பதை ஒட்டிப் பேதைக்கும் இள மைப் பற்கள் ஒவ்வொன்ருக முளைத்துச் சரியாக நிறைந்து விட்டன

என்ருர். இதற்குச் சந்திரனின் தேய்பிறைக் கலைகள் எல்லாம் ஒவ்வொன்ருகக் குறைந்து வந்து பின்னர் வளர்பிறைக் கலைகள் மெல்ல வளர்ந்து முழுமதியானதை உவமையாக அமைத்தார்.

முத்தியில் அடையக்கூடிய இன்பத்தை ஆரூரிலேயே அடைய முடியும். ஆனல் முத்தியில் ஐம்புல இன்பங்களையும் நுகரக்கூடிய இவ்வுடல் இல்லாமல் அறிவையே வடிவாகக்கொண்டு அனுபவ உணர்வால் அனுபவித்தல் வேண்டும். அம்முத்தியின்பத்தையே இவ்வுடல் கொண்டு அனுபவிக்க உதவுவது திருவாரூர். மேலும், முத்தியுலகத்தில் இறைவன் ஆண்டானுகத் தான் அடிமையாக இருந்தே நாவலூரர் இன்பம் பெறவேண்டும். ஆனல் ஆரூரில் தான் உயர்நிலையிலிருக்க, இறைவன் ஏவல் கேட்க முத்தியுலக இன்பத்தை அனுபவிக்கும் நிலை நாவலூரர்க்கு உண்டு ஆதலின் ஆரூரைச் சிறந்தாகக் கொண்டார். பிறந்த ஊரைக் காட்டிலும் பெருமையது ; முத்தி நாட்டினும் முன்னிய விளைப்பது ஆரூர் எனக் கருதினுர் என்பது தோன்ற முத்தி நாட்டினும் ஆரூர் விரும்பும் நாவலூரன் என்ருர்.

சுந்தரமூர்த்தி சுவாமிகளுக்கும், சடங்கவி சிவாசாரியரின் மகளுக்கும் அறிஞரால் நிச்சயம் செய்து முயன்று கூட்டப்பெற்ற மணம் இறைவனல் தடுக்கப்பெற்று முடியா தொழிந்தது போலத் தாய் முதலியோர் முயன்று ஒன்று சேர்த்தாலும் ஒன்று சேராத கூந்தலையுடையவள் என்பதாம்.

மது, கைடவர் என்பார் இரு அசுரர். இவர்கள் பிரளயகாலத்தில் விஷ்ணுவின் காதுகளில் தங்கியிருந்து பின் பிறந்தவர் என்பதாம். வீட்டில் - பிரளயகாலத்தில் ; அழிவுக் காலத்தில். ஸ்ரீ வைகுந்த வாசனுகிய விஷ்ணுவை வீட்டில் (முத்தி) நிறைந்தவனெனக் கூறமுடியாமை கொண்டு இவ்வாறு திரு. ஐயரவர்கள் எழுதிய குறிப்பு சிந்தனைக் குரியது.

ததீசி என்பார் 'அதர்வ' என்னும் இருடிக்குச் 'சாந்தி' என்பாளிடம் பிறந்தவர். தேவர்களும் அசுரர்களும் பாற்கடல் கடைய வந்தபோது உடன் கொண்டுவந்திருந்த படைக்கலங்களை யெல்லாம் வாங்கித் ததீசி முனிவரிடத்து அடைக்கலப் பொருளாக வைத்தார் திருமால். அவற்றுள் இந்திரனின் வச்சிராயுதமும் ஒன்று. ததீசி முனிவர் நெடுநாளாகியும் யாவரும் கேட்காததால் அவைகளை விழுங்கிவிட்டார். அவையெல்லாம் அவர் முதுகெலும்புடன் மறைந்திருந்தன. இதையே ததீசி முனிவன் உடலில் அடங்கியிருந்த வச்சிராயுதம்போல் என்ருர். மீளவும் இந்திரன் வந்து கேட்டபோது தன் உயிரை மதியாது முதுகந்தண்டையே அவனுக்குதவி வச்சிராயுதம் பெறச் செய்தார்.

## செவிலித்தாயின் செயல்

180. ... ... ... —அங்கவளை
மற்ருெரு கைத்தாய் மடியிருத்தி - முற்ரு

181. அழகு தரக்கனிந்த ஆரமுதச் செவ்வாய்
மழலை மொழிதிருந்தும் வண்ணம் - பழையமறைப்

182. பூவணம் என்றும்நிறை பூவணங்கோ யில்கொண்ட
தீவண மேனிச் சிவனென்றும் - காவணவும்

183. தெய்வப் பலாவென்றும் தெய்வப் பலாவடியில்
சைவப் பொருளாம் தவமென்றும் - துய்யதிரை

184. வையைநதி என்றும் மணிகர் ணிகையென்றும்
ஐயன் இடம்பிரியா அம்மையென்றும் - மொய்கயிலைக்

185. குன்றில் இருந்தருளும் கோனென்றும் தில்லைமணி
மன்றில் நடம்புரிபெம் மானென்றும் - மென்துவர்வாய்ப்

186. பைங்கிளிக்கு மென்சொற் பயிற்றுதல் போற்பயிற்றி
அங்கவள்கேட் டுள்மகிழும் அவ்வெல்லை

*பொழிப்புரை*

அங்கு, அப் பேதையாளை மற்று ஒரு செவிலித்தாய் தூக்கித் தன் மடியின்மேல் அமருமாறு செய்து, முற்ருத இளமை அழகைத் தருதற்காகக் கனியின் தன்மையைக் கொண்டிருப்பதும், எவர்க்கும் கிடைத்தற்கரிய அமுதம் ஊறுவதும் ஆகிய சிவந்த வாயிலே உண்டாகும் மழலைச் சொற்கள் திருத்தம் பெறுவதற்காக, கீழ்க் கண்டவாறு பயிற்றுகிருள்.

பழமையாகிய வேதம் என்று சொல்லப்பெறும் பூவின் தன்மை என்றும் நிறைந்து மணம் வீசுகின்ற திருப்பூவணத் தலத்தைத் தனது இருப்பிடமாகக் கொண்டிருக்கின்ற நெருப்பைப் போன்ற நிறம் அமைந்த உடலைக் கொண்ட சிவன் என்றும், காத்தல் தொழிலை மேற்கொண்ட (சோலையைப் போல் விளங்கும்) தெய்வப் பலா என்றும், திருப்பூவணத் தலமரமாகிய தெய்வத் தன்மை வாய்ந்த பலாமரத்தின் அடியில் சைவ சமயத்து உட்பொருளாம் சிவலிங்க மூர்த்தமாகிய உயர் பொருள் என்றும், தூய்மையாகிய அலைகளையுடைய வையை நதி என்றும், மணிகர்ணிகா தீர்த்தம் என்றும், இறைவனிடமிருந்து என்றும் பிரியாத மின்னனையாள் என்றும், தவம் முதலியவற்ருல் உயர்ந்த வலிமையைக் கொண்ட திருக்கயிலை மலையில் எழுந்தருளும் அரசன்

என்றும், சிதம்பரத்தில் இருக்கின்ற அழகிய சபையில் திருக்கூத்து இயற்றுகின்ற பெருமான் என்றும், (இவ்வாருக சொற்களை) மென்மையான பவளம் போன்ற வாயினைக் கொண்ட பச்சைக் கிளிக்கு மென்மையாகிய சொற்களைப் பயிலுவித்தல் போலப் பேதைப் பருவத் தாளையும் பயிலச் செய்து, (பேதையாள் சொல்ல) அங்கு அச் செவிலித்தாயும் அவற்றைக் கேட்டு உளமகிழ்ந்து கொண்டிருக்கும் போது,

### அருஞ்சொற் பொருள்

கைத்தாய்-சிறிய தாய்; செவிலித் தாய். ஆரமுதம்-கிடைத்தற்கரிய அமுதம்; அருமை அமுதம். அருமை - யாவருக்கும் எளிதில் கிடைக்காமை. கா - காத்தல். சோலை. மொய் - வலிமை. மணி - அழகு. துவர் - பவளம்.

### விளக்கவுரை

செவிலித்தாய் பேதையை மடிமீதிருத்திச் சொற்பயிற்றும் முறை கூறப்பெறுகிறது. இப் பகுதியில் பூவணத் தலச் சிறப்பும், தீர்த்தச் சிறப்பும், இறைவன் இறைவி இயல்பும் பேதையிடம் கூறுமுகமாகப் புலப்படுத்தப் பெற்றுள்ளது. தவம்—உயர் பொருள். தவம் என்பது உயர் செயலைக் குறிக்கும். உயர்ந்த செயலால்-தவத்தால் கிடைத்த பொருளைத் தவம் என்றே கூறல் உலகியல் வழக்கு. பிள்ளைகளைப் பெற்றவர்கள் எம் தவம் எனக் கூறலைக் காணலாம். அவ்வாறே ஈண்டும் சைவ சமயத்து உட்பொருளாய் விளங்கும் சிவலிங்க மூர்த்தமாய் விளங்கும் உயர்பொருள் என்று உரை செய்யப் பெற்றது. பயிற்றுதல் - ஒன்றையே பலமுறை திருப்பித் திருப்பிச் சொல்லச் செய்து பழக்குதல். இதனை உப அத்தியயனம் செய்தல் என்றும் கூறுவர்.

## திருத்தேர்ப் பவனி வரக் கேட்டல்

186. ... ... ... —எங்குமொரு

187. தாய்வயிறு காணுத் தருமத் திருஉடம்பை
வேய்வயிறு கண்ட வியன்பதியும் - காவிரிவாய்ச்

188. சீருருவப் பேருருவச் செந்தீத் திருஉருவம்
நீருருவம் ஆக நிகழ்பதியும் - ஒருமையால்

189. ஆர்க்கும் தெரியா அருமைத் திருமேனி
சேர்க்கும் தழும்பிருந்த சீரூரும் - ஏர்க்குமறை

190. தேற்றுமயன் காணுத் திருமுடியை வையைப்பே
ராற்றின் மணல்கண் டறிபதியும் - போற்றுநெடு

191. மாயன் அறியா மலர்ப்பாதம் பொன்னனையாள்
தூய மனையறியும் தொல்நகரும் - மேயபிரான்

192. தேவர் நெருங்கத் திருத்தேர்ப் பவனிவரல்
தாவில் திருச்சின்னந் தானிசைப்ப

*பொழிப்புரை*

எவ்விடத்தும் ஒரு தாயின் வயிற்றைக் கண்டறியாத தரும மாகிய அழகிய உடம்பை மூங்கிலானது தன்னுடைய வயிற்றில் அமைத்துக் கொண்ட வரலாற்றைக் கொண்டிருக்கும் அகன்ற திரு நெல் வேலியும்,

காவிரியின் கரையிலே சிறப்புப்பெற்ற உருவமும், பெருமை பெற்ற உருவமும், செம்மையாகிய தீயைப் போன்ற திருவுருவமும் ஆக விளங்கி வரும் இறைவன் தண்ணீர் உருவமாக விளங்கி வரும் திருப்பதியாகிய திரு ஆனைக்காவும்,

யாவருக்கும் தெரியாத அருமையைக் கொண்ட அழகிய (இறைவன்) உடம்பிலே ஒப்பற்ற உமையம்மையால் உண்டாக்கிய முலைத் தழும்பு இருக்கின்ற சிறப்புப் பொருந்திய பதியாகிய திருக்காஞ்சிமா நகரமும்,

அழகு தரும் வேதங்களை நாள்தோறும் படித்துத் தெளிவு காணும் பிரமன் காணாத அழகிய முடியை வையைப் பேராற்றின் கரையில் உள்ள மணலானது பார்த்து அறிந்த பதியாகிய மதுரையும்,

அன்பர்களால் போற்றப் பெறும் திருமால் அறியமுடியாத மலர் போன்ற திருவடியைப் பொன்னனையாளின் தூய்மை பொருந்திய இல்லமானது அறிந்த பழமை பொருந்திய நகரமாகிய திருப் பூவணமும் ஆகிய இடங்களில் விரும்பித் தங்கிய இறைவன், தேவர்கள் நெருங்கிவர அழகிய தேரிலே நகர்வலம் வருதலைக் குற்றமற்ற திருச்சின்னம் என்ற ஊதுகொம்பானது இசையுடன் கூட்டித் தெரிவிக்க,

*அருஞ்சொற்பொருள்*

வேய் - மூங்கில். தழும்பு – அடையாளம். ஏர்க்கும் – அழகுதரும்.

*விளக்கவுரை*

சிவன் பிற கடவுளரை வணங்காதவன் என்பதை-பிற கடவுளருக்கு மேம்பட்டவன் என்பதை உணர்த்த வந்த மணிவாசகப் பெருமான் 'சேர்ந்துஅறியாக்கையானை' என்றுகூறியது போலத் தாய் வயிற்றிற் கருவுற்றிருந்து பிறக்கும் பிறப்பு நிலை இல்லாதவன் என்ற கருத்துத் தோன்ற "எங்கும் ஒரு தாய் வயிறு காணாத் தருமத் திருவுடம்பு" என்றார். திருநெல்வேலியில் மூங்கிலின் அடியில் தானே முளைத்துத்

தோன்றிய காரணத்தை வைத்து நயம்பெற 'வேய் வயிறு கண்ட' எனக் குறித்தார். தீயுருவம் நீருருவமாக வருதல் அதிசயம் ஆகும் என்னும் நயந்தோன்ற செந்தீத் திருவுருவம் நீருருவமாக நிகழ்பதியும் எனக்குறித்தார். பஞ்சபூதங்களைத் தன் உருவமாகக்கொண்டிருக்கிறான் இறைவன் என்ற இலக்கணத்துக்கு இலக்கியமாக இறைவன் ஆனைக்காவில் நீர்வடிவமாயிருப்பது கருதத் தக்கது. காஞ்சியில் தோன்றி எண்ணான்கு அறம் வளர்த்த பிராட்டி இறைவனை மணலால் அமைத்துப் பூசிக்க அப்போது பெருகிய ஆறு அவ்விலிங்கத்தை அழிக்காதிருக்கும் பொருட்டு, அப்படியே கட்டித் தழுவினாளாக அப்போது அவள் முலைத் தழும்பும் வளைத்தழும்பும் அவ்விலிங்கத்திற் பதிந்தன என்பது தழுவக் குழைந்த படலத்துட் கண்ட வரலாறு. இதையே 189-ஆவது கண்ணியிற் குறித்தார். பிரமன் முடியையும், திருமால் இறைவன் திருவடியையும் காண முற்பட்டு முடியாமல் இடர்ப்பட்ட செய்தி அடி முடி தேடிய வரலாற்றால் அறியப் படுவதொன்று. அவ்வாறு பிரமனால் அன்னவுருக் கொண்டு தேடியும் காணாத முடியை வையைப் பேரியாற்று மணல் கண்டதெனக் குறித்தார். வந்தியென்பாளின் பிட்டுக்காக மண் சுமந்த வரலாற்றை உளத்திற் கொண்டு நயம்பட ஆசிரியர் தெரிவித்தார். இனிப் பன்றி வடிவு கொண்டு மாயனால் அறிய முடியாத பதத்தைப் பொன்னனையாளின் வீடு கண்டது எனக் குறித்தார். பொன்னனையாள் இல்லத்துக்கு இறைவன் சித்தவுருக் கொண்டு எழுந்தருளிய செயலை உளத்து வைத்து இவ்வாறு கூறினர். 'ஏர்க்கு மறை' என்பதை 'ஏற்குமறை' எனப் பாடம் கொண்டு எதுகை நோக்கித் திரிந்தது எனக் கோடல் நலம் பயப்பதொன்றாம். அவ்வாறு கொள்ளின் ஏற்கும் என்பதற்குப் 'பொருந்தும்' என்ற உரை கொள்க. திருச்சின்னம் சைவ சமயக் கோயில்களில் முக்கியத்துவம் பெறும் சிறப்பு வாய்ந்த காரணத்தால் அதன் ஒலியை வெற்றொலி எனக்கொள்ளாது, திருநெல்வேலி, திருவானைக்கா, காஞ்சி, மதுரை, திருப்பூவணம் ஆகிய தலங்களில் கோயில் கொண்டருளிய பிரான் தேர்ப்பவனி வந்தான் எனக் கூறுவதாக அமைத்த நயம் சிறப்புடையது.

## செவிலித்தாய்க்கும் பேதைக்கும் நடந்த உரையாடல்

192. ... ... ... - பாவையன்னை

193. முன்செலப்பின் சென்றுகர முன்குவிக்கப் பின்குவித்து
நன்குதுதிக் கத்துதித்து நாடிய - பின்பேதை

194. கைத்தா யரைப்பார்த்துக் காண்தகு சோதிதரும்
இத்தேரில் ஆர்சொல் எனக்கேட்டாள் - அத்தேரில்

195. தேவி வளர்த்ததிருத் தெய்வப் பலாவடியில்
மேவிப் பழுத்த வியன்கனியென் - ருவலுற

196. மாது தனக்குரைப்ப மற்றதனைத் தாருமெனக்
காதலுடன் கேட்டழுது கண்பிசையப் - பேதைகேள்

197. இந்தக் கனியெவர்க்கும் எட்டா நறுங்கனிகாண்
முந்தப் பழமறையீ மொய்ப்பதுகாண் - சந்ததமும்

198. ஒன்ருய்ப் பலவாம் உருவில் பொருந்தியெங்கும்
நன்ருய்ப் புறம்புமுள்ளு நண்ணுங்காண் - குன்ருத

199. பாவு மலையிற் பசுந்தே னுடன்கலந்தங்
கோவில் கருணைரசம் ஊறுங்காண் - மேவுமன்பர்

200. உள்ளத் தினிக்குங்காண் ஓர்பொன் னனையாட்குக்
கிள்ளப் பழுத்துக் கிடக்குங்காண் - விள்ளும்

201. பெரிய முகுந்தப் பிரமா தியர்க்கும்
அரிய பழங்காண் அணங்கே - பரிவகல்நீ

202. என்னும் பொழுதில் இரதமேல் கொண்டிருக்கும்
பன்னும் கருணைப் பழமகல - அன்னையரும்

203. அந்தக் கனிநம் அகத்தில் இருப்பதென
இந்தக் கனியையிற்கொண் டேகினுர் - வந்தமதன்

204. என்றும் சிறியார்க் கினியதுகாட் டாரெனத்தன்
வன்திண் சிலையை மறைத்தகன்ருன்

*பொழிப்புரை*

கொல்லிப் பாவையை ஒத்த அழகு வாய்ந்த பேதைப் பருவத்தாள், செவிலித்தாய் (இறைவனின் தேர்ப் பவனியைக் கேட்டு) முன்னே செல்லத் தான் பின்னே சென்று, கையை முதலில் செவிலி குவிக்கத் தானும் குவித்து, செவிலி வாயால் புகழ்ந்து பாடத் தானும் புகழ்ந்து பாடி இத்தகைய செயல்களைச் செய்த பின்,

பேதையானவள் செவிலித் தாயைப் பார்த்து, காண்பதற்கு ஏற்ற ஒளியைத் தரும் இந்தத் தேரில் இருப்பது யார்? சொல்வாயாக எனக் கேட்டாள்.

கேட்ட பேதைக்கு (196) அந்தத் தேரில் இறைவியால் வளர்க்கப் பெற்ற தெய்வத் தன்மை வாய்ந்த பலாமரத்தின் அடியில் பொருந்திப் பழுத்திருக்கின்ற புகழ்மிகுந்த பழமாகும் என்று விருப்பம் பொருந்தக் கூறினுளாக,

(பேதையானவள்,) அதனை எனக்குத் 'தாரும்' என்று அன்புடன் கேட்டு அழுது கண்களைப் பிசைய,

(செவிலித்தாய்) பேதையே! கேட்பாயாக. இந்தப் பழம் யாவர்க்கும் அடைய முடியாத சிறந்த மணம் வீசும் பழம். உண்ணும் வேட்கையோடு மேன்மேல் முந்தி முந்தி வரும் இயல்புடைய பழமையாகிய வேதங்களென்னும் ஈக்களால் மொய்க்கப் படுவது. எக்காலத்தும் தான் ஒரு பொருளாயிருந்து, உலகில் காணப்பெறும் உயிர்ப்பொருள் உயிர்இல் பொருள் ஆகிய கண்ணுக்குத் தோன்றும் உருவப் பொருள் அனைத்திலும் பொருந்தி, எவ்விடத்தும் நன்முறையில் புறத்தும் உள்ளும் கலந்திருப்பது. குறையாத வெல்லப்பாகு, மலையில் உள்ள பசுமையான தேனோடு கலந்து அங்கு ஒழிதல் இல்லாத கருணை என்னும் சுவைநீர் ஊறிக் கொண்டிருப்பது. பொருந்தும் அன்பர்களின் உள்ளத்தில் இனித்துக் கொண்டிருப்பது. ஒப்பற்ற பொன்னனையாளுக்குக் கிள்ளிப் பார்க்கப் பழுத்துக் கிடப்பது. எப்பொழுதும் அவன் புகழே பேசிக் கொண்டிருக்கும் பெரிய திருமால், பிரமன் முதலியவர்க்கும் காண முடியாத பழம். பெண்ணே! நீ துன்பம் நீங்கு என்று சொல்லும் பொழுதில்,

தேரைத் தனக்குரிய ஊர்தியாகக் கொண்டிருப்பதும் (இரஸம் - சுவை நீரைக் கொண்டிருக்கும்) புகழ்ந்து பேசப் பெறுவதும் ஆகிய கருணைப் பழம் (சிவன்) செல்ல,

செவிலித்தாயரும் அந்தக் கனி நம் வீட்டில் இருக்கிறது எனக் கூறி இந்தக் கனி போன்றவளாகிய பேதையை இல்லத்துக்கு அழைத்துச் சென்றனர்கள்.

அப்போது அத்தேரின் உடன் வந்த மன்மதன் சிறியவர்க்கு என்றும் "இனிப்புடைய பொருள்களைத் தெரியுமாறு காட்ட மாட்டார்கள்" என்ற மொழிக்கிணங்கத் தன்னுடைய வன்மையையும் திண்மையையும் கொண்ட வில்லை மறைத்துச் சென்றுவிட்டான்.

### அருஞ்சொற் பொருள்

பாவை - கொல்லிப்பாவை. பழமறை ஈ - பழமையாகிய வேதங்களாகிய ஈக்கள். ஓவில் - ஒழிதல் இல்லாத; நீங்குதல் இல்லாத. ரசம் - சுவைநீர்.

### விளக்கவுரை

இப்பகுதியில் பெருமானைக் கருணைப்பழம் என்று கூறியது. நயம் வாய்ந்தது. சாத்திர நூலுள் 'இறைவன் ஒன்றாகி, வேறாய், உடனுமாய்' என்று கூறிய கருத்தையே ஆசிரியர் 'சந்ததமும் ஒன்றாய்ப் பலவாம் உருவிற் பொருந்தி யெங்கும் நன்றாய்ப் புறம்பும் உள்ளும் நண்ணும்' எனக் குறித்தார். ஒன்றாக நிற்கும் அகரம்

தான் தனித்து நிற்பதோடு பல்வகைப்பட்ட எழுத்துக்களோடும் சேர்ந்து அவை தோன்றுதற்குக் காரணமாயிருப்பது போலப் பற்பல வடிவுகளைக் கொண்ட உயிர்த் தொகுதிகளில் எல்லாம் கலந்திருக்கின்றான். இனி உடலின்கண் உயிர் ஒருபங்கு ஒற்றுமைப்பட்டும் ஒரு பங்கு வேற்றுமைப்பட்டும் நின்று அவ்வுடலை இயக்கும் நிலையுடையது. இந்நிலையை உடனிலையாக நிற்கும் நிலை என்பர். உடலுக்கு வைத்த பெயரால் அதை அழைக்கும் போது உயிர், என்ன? என்று கேட்கும். அப்படிக் கேட்டாலும் உயிர் உயிரே; உடல் உடலே. உயிர் உடலாகாது; உடல் உயிராகாது. இன்னும் செவி கேட்பதை நான் கேட்டேன் என்பது முதலியவற்றாலும் அறியலாம். உயிர் நின்று உடலை இயக்கும். இறைவனும் அவ்வாறே உயிரைத் தனக்கு உடலாகக் கொண்டு தங்கியிருப்பன். நம் உயிரை உடலாகக் கொண்டு இயக்கும் வகையில் ஒன்றெனக் காணப்பட்டாலும் இறைவன் வேறு உயிர்வேறு எனக் கொள்ள வேண்டும். இதையே எங்கும் நன்றாய்ப் புறம்பும் உள்ளும் நண்ணுங்காண் என்றார். பாவு என்பதைப் பாகு எனக் கொண்டு பொருள் கூறப்பெற்றது. இன்றேல் மலைக்கு அடைமொழியாக்கிப் பரவி வளர்வதாகிய மலை எனவும் பொருள் கொள்ளலாம். பழம் கருணைப் பழம் ஆனமையால் அதில் ஊறும் சுவையும் கருணைச் சுவைநீர் (கருணைரசம்) எனப்பட்டது. பழரசம் உடலை இனிக்கச் செய்யும். இது உள்ளத்தை இனிக்கச் செய்யும். இறைவனாகிய கருணைப் பழத்தை சுவைநீராகப் பிழிந்து எடுத்து அமைத்த மணிவாசகரின் வாசகத்தைப் பாடியுணர்ந்த அருட்டிரு இராமலிங்க அடிகள்,

> வான் கலந்த மாணிக்க வாசக நின் வாசகத்தை
> நான் கலந்து பாடுங்கால் நற்கருப்பஞ் சாற்றினிலே
> தேன் கலந்து பால்கலந்து செழுங்கனித் தீஞ்சுவை கலந்து
> ஊன் கலந்து உயிர் கலந்து உவட்டாமல் இனிப்பதுவே.

எனக் கூறிய உட்பொருளை யுணர்ந்த இவ்வாசிரியர் இறைவனை மேவும் அன்பர் உள்ளத்து இனிக்கும் என்றார். கற்பனைக் களஞ்சியம் இறைவனைக் கருணைக்கடல் என்றாற்போல இவரும் இறைவனைக் கருணைப் பழம் என்றார். இனி மலையிற் பசுந்தேன் என்பதை இறைவியெனக் கொண்டு இறைவியொடு கலந்திருந்து அருளமுதம் ஊறும் கருணைப் பழம் என்ற நயமும் தோன்றுதல் காண்க! கையாற் கிள்ளியகாலை உடற்பகுதி பழம்போல் சிவத்துக் காணப்படுவது உலகியலிற் கேட்பதொன்று. இதைப் பொன்னனையாள் இறைவனைப் பொன்னுருவமாகச் செய்து அள்ளியெடுத்து முத்தமிட்டகாலைத் தோன்றி இன்றுவரை மறையாதிருக்கும் வடுவை உள்ளத்துட் கொண்டு பொன்னனையாட்குக் கிள்ளப் பழுத்துக் கிடக்குங்

காண் என்றார். அந்தக்கனி நம்மகத்தில் உண்டென்று இந்தக் கனியை இற்கொண்டேகினார் என்றார்; பேதையைக் கனியாகக் கூறலாம் என்னும் முறை பற்றி. இன்றேல் 'கன்னி' என்பது கனி என்றாயிற்றென்றும் கூறலாம். இந்தக் கனி நம் அகத்தில் இருப்பது என்பது குழந்தையின் உள்ளத்தைத் திருப்பவே என்றாலும் அதை முழுப்பொய் எனக் கொள்ளலாகாது. இறைவனாகிய கனி எப் பொழுதும் அகத்தில் (உள்ளத்தில்) இருக்கும் நிலையுடையது என்பதாம்.

கரும்பினால் ஆகிய வில்லினைக் கையிற்கொண்டு காமத்தை விளைவிப்பவனாதலின் கரும்பொடு வந்து தோன்றினால் சிறிய வளாகிய பேதை அதையும் கேட்க நேரிடும் எனக் கருதி, சிறியவர் களுக்கு முன்னால் இனிய பொருள்களைக் காட்டுவதும் குற்றம் என்கிற பழமொழியையும் உள்ளத்து எண்ணி வில்லை மறைத்துக் கொண்டு சென்றுவிட்டான்.

பேதைப் பருவத்துக் குழந்தைகளின் உள்ளம், கண்ணுக்கு எதிரில் தோன்றும் இனிமைப் பொருள் ஒவ்வொன்றையும் விரும்பும் இயல்புடையது. இவ்வுலாவாசிரியர் பழம் என்று கூறியவுடன் தனக்கு வேண்டும் என்று கூறியதாக அமைத்தது பேதைப் பருவத் தின் உளநிலையை நன்கறிந்தவர் என்பதை விளக்குகிறது. 'கோவை யுலா அந்தாதிக்கு ஒட்டக் கூத்தன்' என்று புகழப்பெறும் கவிச் சக்கரவர்த்தியும் மூவருலாவில் அரசனின் 'மாலையை' விரும்பிக் கேட்டதாக அமைத்தார். எனவே உலாவில் பருவத்து நிலைகளுக் கேற்ற உளநிலையை அமைத்துப் பாடுதலே புலமைத் திறம் என் பதை அறிந்து கொள்ளல் வேண்டும்.

## 2. பெதும்பை

எட்டு வயது முதல் பதினொரு வயது வரை உள்ள பெண்பாற் பருவத்தைப் பெதும்பைப் பருவம் என்பர். சங்க காலத்து வழக்கப்படி பெண்களின் மண வயது பன்னிரண்டு. அது மங்கைப் பருவமெனக் கணக்கிடப் பெறுகிறது. தொல்காப்பியம் முதலிய நூல்கள் இப் பன்னீரகவைப் பருவத்தைக் காமம் சான்ற இளமைப் பருவம் எனக் குறிக்கும். பேதைப் பருவமோ காம எண்ணத்தைக் கடுகளவும் காணமுடியாப் பருவம் - அறியாப் பருவம். மங்கைப் பருவமோ காம எண்ணம் சான்ற (நன்கு அமைந்த) பருவம். இடைப்பட்ட பெதும்பைப் பருவமோ காம எண்ணத்தை அறிந்த பருவம் என்றும் சொல்ல முடியாது; முழுவதும் அறியாத பருவம் என்றும் சொல்ல முடியாது. எனவே, இப்பருவத்தை அறிந்தும் அறியாப் பருவம்

என்று குறிக்கலாம். இது ஒருநிலையில் அமையப் பெருத பருவம் ஆனமையாலேதான் இத்தகைய பருவத்துப் பெண்ணின் உள்ளத் திறனை விளக்கிக் காட்டுதல் புலவர்க்கு அரிய செயலாகின்றது. இதன் அருமைத் திறத்தைப் "பேசும் உலாவிற் பெதும்பை புலி" என்ற தொடர் விளக்கும்.

## பெதும்பையின் எழில் நிலை

204. ... ... ... - துன்றும்

205. கரைஅற்ற பெண்மைக்கவின் சிறிது காட்டும்
உருவப் பெதும்பை ஒருத்தி - இருள்போய்ப்

206. புலர்ந்தும் புலராப் பொழுதில் சிறிதே
அலர்ந்தும் அலரா அரும்பு - கலந்தன்பு

207. கூரவரும் தாய்சமைத்த கூட்டில் கிடவாத
தேரும் இழாத சிறுகிள்ளை - சீரியதன்

208. கார்க் குஞ்சென வளர்த்த காக வன் புள் மருண்டு
பார்க்க நிறம்காட்டும் பசிய குயில் - ஏர்க்க

209. நிறைந்துவிடும் பாலும் நீரும் பிரிக்க
அறிந்தும் அறியாப் பருவ அன்னம் - உறைந்து தனி

210. மேவி இருந்து இனிமேல் வேண்டும் உரைபார்க்க
பூ வில் மதன் நூல்பாடம் போற்றுவாள் - பாவை உமை

211. ஆர்த்த சரவணத்தில் அண்ணல் உருக் கூட்டுதல்போல்
சேர்த்து இருளைகூட்டும் திருக்குழலாள் - கூர்த்து

212. வியல்நீரில் தாயுடன்போய் மென்மெல நீந்தும்
கயல்போல் புடைபெயர்ச்சி காட்டி - அயலவரைத்

213. தெட்டும் புரட்டும் திருட்டும் புகுந்து கொலை
மட்டும் புகுதா வரிவிழியாள் - எட்டஅரிய

214. அண்ட பகிரண்டம் அளக்கத் திருநெடுமால்
கொண்ட குறள்போல் முகம்கொள் கொங்கையாள்
- திண்திறல் வேள்

215. கூடும் இளம்பருவக் கோலத்தில் ஏறிவிளை
யாடும் சிறுதேர்அனைய அல்குலாள் - தோடு உருவும்

216. அத்திரக்கண் மங்கையரும் ஆடவரும் செய்கலவி
சித்திரத்தின் அல்லால் தெரிந்திடாள் - மெத்தஉரு

217. அன்னச் சிறுநடையால் ஆலிங்கன வனப்பால்
கன்னிக் கொலை சிறிது கைவந்தாள்.

*பொழிப்புரை*

நெருங்கியதும், எல்லை இல்லாததும் ஆகிய பெண்மையி னுடைய அழகின் சிறு பகுதியை அனைவர்க்கும் தெரிவிக்கின்ற வடிவத்தையுடைய பெதும்பைப் பருவத்துப் பெண்ணானவள் ஒருத்தி ;

இரவுக் காலத்து இருள் மென்மெலச் செல்ல விடிந்தும் விடியா திருக்கும் காலத்தே சிறிது பூத்தும் நன்றாகப் பூவாது இருக்கின்ற பெரிய அரும்பினை ஒத்த பருவத்தாள் ;

எப்பொருளிலும் சேர்ந்த அன்பானது மிகுதியடையுமாறு வரும் தாய்க் கிளியானது தானே கட்டிய கூட்டினில் தங்காததாய்த் (மன்மதனுக்குரிய) தேரினையும் இழுத்துச் செல்லாத இளமை பொருந்திய கிளியைப் போல்வாள் ;

சிறப்புப் பொருந்திய தன்னுடைய கருநிறம் வாய்ந்த குஞ்சு என்று கருதி (குயிற் குஞ்சை) வளர்த்து வந்த காக்கை என்ற வலிமை வாய்ந்த பறவையானது (தன் குஞ்சுதான அன்று என்று) மருட்சியுற்றுப் பார்க்க, அப்போது தன்னுடைய மாறுபாடான நிறத்தைக் காட்டும் இளமை வாய்ந்த குயிலை ஒத்தவள் ;

பொருந்துமாறு கலந்து விடுகின்ற பாலையும் நீரையும் தனித் தனியாகப் பிரிப்பதற்குச் (சிறிது) தெரிந்தும் (முழுவதும்) தெரியாத அன்னத்தைப் போன்றவள் ;

இனி வருகின்ற மங்கைப் பருவ முதலிய பருவங்களில் விரும்பப் பெறும் உரை காணுதற்காக இப்பெதும்பைப் பருவத்திலேயே நடமாடிக் கொண்டும், தனித்து ஒரு இடத்தைப் பொருந்தியிருந்தும் அழகிய வில்லைக் கையிலே கொண்ட மன்மதனது நூலாகிய காம நூலின் மூல பாடத்தை முறையாக நெட்டுருச் செய்வாள் ;

பெண்ணின் நல்லாளாய உமையம்மையானவள் அலைகள் ஒலி செய்கின்ற சரவணப் பொய்கையில் (இறைவன் திருவருளால் அமைந்த) முருகப் பெருமானின் (ஆறு) உருவங்களையும் ஒன்று சேர்த்துக் கூட்டுவதுபோல் தோழியானவள் தன் கையால் ஒன்று சேர்த்துக் கூடுமாறு செய்கின்ற அழகிய கூந்தலையுடையவள் ;

கூர்மையுடையதாகி, பரந்திருக்கின்ற நீரில் தாய் மீனுடன் சென்று மெல்ல மெல்ல நீந்தும் சிறு மீன்போல் பிறழும் தன்மையைச்

செய்து, பக்கத்திலுள்ள ஆடவரை வஞ்சிக்கின்ற மாறுபாட்டுத் தன்மையும் பிறரறியாமல் அவருள்ளத்தைத் தன்னிடம் இழுத்துக் கவரும் களவுத் தன்மையும் சேர்ந்திருக்கக் கொலைத் தன்மை ஒன்று மட்டுமே சேர்ந்திருக்கப் பெருத செவ்வரி, கருவரி அமைந்த கண்களையுடையவள் ;

அழகிய நெடியோனுகிய திருமால் யாவராலும் நெருங்கி அடைதற்கு இயலாத அண்டங்களையும், அவைகளுக்கு அப்பாற்பட்ட பேரண்டங்களையும் அளப்பதற்காக (எண்ணி அதற்கு அடிப்படையாக) மேற்கொண்ட குறுகிய வடிவத்தைப்போல உருட்சியுடன் பக்கந் திரண்டு இருக்கின்ற முலைகளை உடையவள் ;

திண்மை வாய்ந்த வலிமையைக் கொண்ட மன்மதனுனவன் பொருந்தும் இளமைப் பருவத்து அழகுடன் (இளமைப் பருவக் காலத்தே) ஏறி விளையாடுகின்ற சிறு தேரினை ஒத்த அல்குலையுடையவள் ;

காதணியைச் சென்று மோதுவதும், அம்பைப் போன்றதும் ஆகிய கண்ணையுடைய பெண்களும் ஆண்களும் ஒன்று சேர்வதாகிய காமச் சேர்க்கையை ஓவியத்திற் கண்டவளே யல்லாமல் நேரிற் கண்டறியாதவள் ;

அன்னத்தின் நடையை முழுவதும் பொருந்தாது சிறிதளவே பொருந்தியிருக்கிற நடையின் தன்மையாலும், கட்டித் தழுவ வேண்டும் என்ற எண்ணத்தை விளைக்கும் உடலழகாலும் முதற் கொலைத் தொழிலில் சிறிது பழக்கம் வாய்ந்தவளாகவே அமைந்தாள்.

### அருஞ்சொற் பொருள்

கரை அற்ற - எல்லை இல்லாத. கவின் - அழகு. உருவம்-வடிவம். புலர்தல்-விடிதல். கூர - மிகுதிப்பட. சமைத்த – செய்த. கார்க்குஞ்சு - கருமையுடைய சிறு பறவை. வன்புள் – வலிமையுடைய பறவை. ஏர்க்க - ஏற்க - பொருத்தமாக. உறைதல் - நடமாடுதல், சஞ்சரித்தல். பூவில் - அழகிய வில். மதன்நூல் - காமநூல். பாவை – பெண் என்பதற்கு வழங்கும் பெயர். இகுளை - தோழி. கூர்த்தல் - கூர்மை உடையதாதல். புடைபெயர்ச்சி - பிறழுதல். தெட்டும் – வஞ்சிக்கும். வரி - செம்மைக் கோடுகள். குறள் - குட்டை ; வாமன வடிவம். முகங்கொளல் - உருண்டு திரண்டு முற்பட்டுத் தோன்றுதல். தோடு - காதணி. அத்திரம் - அம்பு. ஆலிங்கனம் - தழுவுதல். கன்னிக்கொலை - முதற்கொலை.

### விளக்கவுரை

பெதும்பையின் உருவத்திலே பெண்மையின் அழகு சிறிதளவே வாய்க்கப் பெற்றிருந்தது என்பது 205-ஆவது கண்ணியின் கருத்து. பெண்மை என்பதற்குக் கண்டாரால் விரும்பப்படும் அமைதித் தன்மை என்று பொருள் காணுதல் சான்றோர் நெறி.

இத்தகைய பெண்மையை அழகுபெறச் செய்வன ஆடை அணி கலன்களல்ல; அச்சம், மடம், நாணம், பயிர்ப்பு என்பனவே. சுடச் சுடப் பொன் ஒளிர்வதுபோல் அச்சம் முதலிய நால்வகைக் குணங் களால் பெண்மையானது அழகு பெறுகிறது. பேதைப் பருவத்தாள் பெண்மையே யாயினும் பெண்மைக்கு அழகு தரும் அந்நான்கு பண்புகளை அறியாதவள். மேல் வரும் மங்கைப் பருவத்தாள் அப் பண்புகளை நன்கு அறிந்தவள். இப்பெதும்பையோ சிறிது அறிந்தும் பெரிதும் அறியாமை அமைந்த பருவத்தாள் ஆதலின் பெண் மையின் அழகு சிறிது மட்டுமே அமையப் பெற்றது என்றார்.

காம எண்ணம் சிறிது தோன்றியும் பெரிதும் தோன்றாத பருவம் ஆதலின் சிறிது மலர்ந்தும் பெரிதும் மலராதிருக்கின்ற பேரரும்பை உவமையாக்கினார். மலர்ந்தும் மலராதிருக்கின்ற நிலை மலருக்கு இயல்பால் உண்டாகிய குற்றம் அல்ல; காலத்தின் மேலுளவாகிய குற்றம். இரவு சென்று பகல் முற்ற விடியுமேல் அம்மலரும் விரிந்தே தீரும் என்று காலத்தின்மேல் குற்றத்தை ஏற்றிக் கூறினார். அவ் வாறே பெதும்பையும் தனது அறிவின்மைக் குறைவால் அறிந்தும் அறியாதும் இருக்கிற நிலை பெற்றாள் அல்லள். அப்பருவத்தின் குறைபாடே அவள் குறைபாடு: அப்பருவம் நீங்கப் பெறுமாயின் அவளும் அவ்வெண்ணங்கள் முழுவதையும் நன்றே அறியும் திறன் பெறுவள் எனக் கொள்ளல் வேண்டும்.

கலந்த+அன்பு—கலந்தன்பு. கலத்தல் - எப்பொருள்களிலும் இடையீடின்றிக் கலந்திருக்கும் அன்பு; அது தாயன்பு. தாயன்பு, தமக்கை அன்பு, தங்கை அன்பு, தம்பி அன்பு, கணவன் அன்பு, மனைவி அன்பு என அன்பு பலவகைப்படும். தங்கை, தம்பி, கணவன், மனைவி ஆகிய அன்புகள் கலவாத ஓர் உயிர்ப் பொருள் உலகில் இருத்தலும் ஆகும். ஆயின் தாயன்பு கலவாத ஓர் உயிர்ப் பொருள் இருக்க முடியாது. இதைக் கருதியே 'தாயன்பு' என் பதைக் கலந்தன்பு எனக் குறித்தார்; கிளி முதலிய பறவைகள் ஒரு குறிப்பிட்ட காலம் வரையிலுமே தம் குஞ்சுகளைத் தாம் கட்டிய கூட்டில் வைத்து உணவூட்டிக் காக்கும். ஒரு குறிப்பிட்ட நிலையை அக்குஞ்சு அடைந்ததும் கூட்டைவிட்டுத் துரத்திவிடும். இங்கே ஆசிரியரால் குறிக்கப் பெறும் கிளிக் குஞ்சானது கூட்டிற்கிடவாதது. எனவே ஒரு பக்குவ நிலையை அடைந்து கூட்டிலிருந்து விரட்டப் பட்டது. என்றாலும் அது முழுப் பக்குவ நிலையையும் அடைய வில்லை. முழுப் பக்குவநிலை அடைந்த கிளி மன்மதன் தேரை இழுக்கும் குதிரையாகப் பயன்படுவது. ஆசிரியர் குறிக்கும் கிளி மன்மதன் தேரை இழுக்காத கிளி. எனவே, சிறிது பக்குவம் அடைந்தும் பெரிதும் பக்குவம் அடையாத கிளியை மலர்ந்தும் மலராப் பருவமுடைய பெதும்பைக்கு உவமையாக்கிக் கூறினார்.

மன்மதனுக்குத் தென்றலைத் தேராகவும், கிளியைக் குதிரையாகவும் ஆக்கிக் கூறுதல் கவி மரபு. மன்மதன் தேரைக் கிளி யிழுத்துச் செல்லும் என்பதை

> ''—நீளத்தான்
> வீரச் சிறகினில் நீ மேவாவிடில் மதனன்
> தேரைக் கிளியிழுத்துச் செல்லுமோ.''

என்ற பத்மகிரிநாதர் தென்றல் விடு தூது 66-ஆம் கண்ணியாலும் உணரலாம்.

இனிக் குயிற் குஞ்சைப் பெதும்பைப் பருவத்தாளுக்கு உவமை யாக்கிக் காட்டுகின்றார். குயில் முட்டையிடுமே தவிர அடை காத்துக் குஞ்சு பொரிக்கத் தெரியாதது ஆதலின் அது தன் முட்டைகளைக் காக்கைக் கூட்டிலே இட்டுவிட்டுச் சென்றுவிடும். அம் முட்டைகளை அடைகாத்துக் குஞ்சு பொரித்து உணவு தந்து காப்பதெல்லாம் காக்கைதான். காக்கையானது குயிற் குஞ்சு ஒரு குறிப்பிட்ட பருவம் வரப் பெற்றதும் அதனுடைய நிறமாற்றத்தைக் கண்டு தன் குஞ்சு அல்லவெனக் கருதி வெளியே துரத்தி விடும். இங்கே ஆசிரியர் குறிப்பிடும் காக்கையானது குஞ்சினைச் சந்தேகித்து விட்டது என்றவுடனேயே குயிற்குஞ்சானது ஒரு குறிப்பிட்ட நிலையினை அடைந்து விட்டது என்பது வெளிப்படை. தன் குஞ்சு அல்ல என்பதைக் காக்கை நன்கு அறிந்து விட்டதேயானால் வெளியில் துரத்திவிடும். ஆனால் அது அவ்வாறு செய்யவில்லை. காரணம் குஞ்சின் நிலை காக்கைக்கு ஓரளவுதான் அவ்வெண்ணத்தைக் கொடுப்பதாக இருக்கிறதே யொழிய முழுவதும் அவ்வெண்ணத்தைத் தெரிவிப்பதாக இல்லை. குயில்தான் என்ற நிலையைச் சிறிது உணர்த்தியும் பெரிதும் உணர்த்தாதிருக்கின்ற குயிற் குஞ்சை மலர்ந்தும் மலராதிருக்கின்ற பெதும்பைப் பருவத்தாளுக்கு உவமையாக்கிய நுண்ணயம் அறிந்து மகிழ்தற்குரியது.

ஏற்க என்பது ஏர்க்க என எதுகை நோக்கித் திரிந்தது. காமமும் ஒருவகை அன்பாயினும் ஏனைய அன்பு வேறு, காமம் வேறு என்பதை ஓரளவு உணர்ந்தும் நன்கு உணரப்பெறாத பெதும்பைப் பருவத்தாளுக்குப் பாலும் நீரும் சிறிது பிரிக்கத் தெரிந்தும் பெரிதும் பிரித்தெடுக்கத் தெரியாத பருவமுடைய அன்னத்தை உவமை யாக்கிக் கூறினார்.

மூலபாடம் நெட்டுருச் செய்த பின்பே உரைகேட்டல் என்பது முன்னைய வழக்கு. கல்வியை நன்கு பெற விரும்பும் மாணாக்கன் அதைத்தான் தவறாது செய்தல் வேண்டும். ''படியில் கல்வி விரும்பினேன் பாடம் போற்றுமது போல'' என்றார் சிவப்பிரகாசரும். நெட்டுருச் செய்பவர் நடந்துகொண்டும் தனியே அமர்ந்திருந்து

கொண்டும் செய்தல் மரபு. உறைந்தும் தனிமேவியிருந்தும் பெதும்பை நெட்டுருச் செய்ததாகக் கூறினர். எண்ணும்மை விகாரத்தால் தொக்கது. உறைதல் - சஞ்சரித்தல்.

பூவில் மதன் என்பதில் பூ என்பது அழகு என்னும் பொருள் தந்தது. பூக்களாலாகிய வில்லையுடைய மன்மதன் என்று கூறுவாருமுளர். மன்மதன் நூல் - காமநூல். காமநூல் பாடம் போற்றினுள் பெதும்பை என்ற குறிப்பு காமத்தின் அடிப்படைப் பண்புகளைச் சிறிது சிறிதே உணர்ந்து வரலானுள் என்பதை உணர்த்தியது.

பாவை என்பதற்குக் கொல்லிப்பாவை எனக் கொண்டு அதை ஒத்த அழகுடையவள் உமை எனப் பொருள் கொள்வது ஒப்பிலா அழகுடை அம்மைக்குப் பெருந்தாததாகலின் பாவையுமை என்பதற்குப் பெண்ணினல்லாளாய உமை எனப் பொருள் செய்யப் பெற்றது. உமையம்மை சரவணப் பொய்கையில் அமைந்த "அவ்வுருவம் ஆறினையும் தன்னிரண்டு கையால் எடுத்தணைத்து" ஒன்று சேர்த்த போது ஆறுருவமும் ஒருருவமாகப் பொருந்தியது போல் இங்கேயும் பெதும்பையின் கூந்தலைத் தோழியானவள் ஒன்று சேர்க்க அக் கூந்தலும் ஒன்று சேர்ந்தது என்பதாம். இறைவி ஆறு குழந்தைகளையும் ஒன்று சேர்த்தபோது உடல்மட்டும்தான் ஒன்ருகியது. தலைகள் ஆறும், கைகள் பன்னிரண்டும் ஒன்று சேரவில்லை. அவ்வாறே பெதும்பையின் கூந்தலும் முழுவதும் ஒன்று கூடவில்லை. சிறிது கூடியும் பெரிதும் கூடாமலும் இருந்தது என்பதாம்.

பெதும்பையின் முலைகளுக்குத் திருமாலின் வாமன அவதாரம் உவமையாக்கப் பெற்றது. மாவலியிடம் மூன்றடிமண் கேட்டு உலகமெலாம் அளப்பதற்கு வேண்டிய திருவிக்கிரமாவதாரத்தை மறைவாகக் கொண்டு தோன்றிய வாமனுவதாரம் போல் உலகம் முழுவதையும் தன் கவர்ச்சியால் அடிமைப்படுத்துவதை உள்ளடக்கிக் கொண்டு சிறு அளவில் தோன்றியிருக்கின்றன முலைகள் என்பதாம்.

அல்குல் தேர்த்தட்டினைப் போன்றது என்று கூறுதல் கவிமரபு. இங்கே மலர்ந்தும் மலராப் பருவத்தாளாதலின் சிறுதேரை உவமையாக்கினர். எனினும் காம இயல்பு சிறிது கைவரப் பெற்றதாகலின் மன்மதன் இளமைக் காலத்தே இளமை அழகோடு ஏறிவிளையாடும் தேர் எனக் குறித்தார்.

ஆலிங்கன வனப்பு - கட்டழகு. நடையாலும் அழகாலுமே பிறரைச் சிறிதே கொலை செய்யவும் செய்தாள் என்பதாம். கன்னிக் கொலை - முதற் கொலை - இளமைக் காலத்துக் கொலை. அரசர்கள்

முதன் முதல் செய்யும் போரை - இளமையில் செய்யும் போரைக் கன்னிப்போர் என்பது வரலாற்று மரபு.

## பெதும்பையின் விளையாட்டு

217. ... ... ... - மின்னும்

218. சுதைநிலா முற்றத்துத் தோழியரும் தானும்
புதியகுடநீர் வார்த்துப் போற்றிப் - பதம் அறிந்து

219. தன்னை வளர்க்கும் செவிலித் தாய்போல் நிதம்பேணி
மன்னி வளர்க்க வளர் முல்லை - அன்னது தான்

220. தன்சிறு பல்போல் அரும்பு தான் படைப்பக் கண்டுசிறந்து
அன்பு மலர அகம் மலர்ந்து - முன் பணியும்

221. தாதியர் ஏவல் செயத் தாயர் களி தூங்க
மேதகு பல்லியம் விட்டு ஆர்ப்ப - போது அவிழும்

222. கோதை புதுவிழாக் கொண்டாடித் தன் பருவ
மாதருடன் அங்கண் மகிழ் போதில்

### *பொழிப்புரை*

ஒளி விடுகின்ற வெள்ளிய சுண்ணும்பு பூசப்பெற்ற மாடத்தின் ஒருபக்கத்துள்ள நிலாவொளி வீசும் முன்னிடத்திலே தோழியர்களும் தானுமாக இருந்து, புதியதாகிய குடத்தில் முகந்து கொண்டுவரப் பெற்ற தண்ணீரை மென்மை பொருந்த ஊற்றிக் காப்பாற்றி, திறன் அறிந்து - முறை அறிந்து தன்னை வளர்க்கின்ற வளர்ப்புத் தாயைப் போல் நாள்தோறும் பாதுகாத்துப் பொருந்தி வளர்க்க, அதனுல் வளர்ந்து வரும் முல்லைக் கொடியானது, தன்னுடைய (பெதும்பையினுடைய) சிறிய பல்லைப் போல் பூ மொட்டினை உண்டாக்க, (பெதும்பை) அம்முல்லை மொட்டினைப் பார்த்து, மகிழ்வு கொண்டு, அன்பு வெளிப்பட்டு மலருமாறு உள்ளம் மலர்ந்து, தனக்கு முன்னுல் இருந்து தன்னை வணங்குகின்ற பணிப் பெண்கள் இட்ட பணிகளைச் செய்ய, நற்றுய் செவிலி ஆகிய தாயர் மகிழ்ச்சி கொள்ள, மேன்மை பொருந்திய பல வாச்சியங்கள் தம் வாய்விட்டு ஒலிசெய்ய, மலர்கள் சிந்துகின்ற கூந்தலையுடைய அப் பெதும்பை புதுமை பொருந்திய திருவிழாவைக் கொண்டாடித் தன்னை ஒத்த பருவமுடைய பெண்களோடு அங்கே மகிழ்ந்து பேசி விளையாடிக் கொண்டிருக்கும் சமயத்தில்,

### அருஞ்சொற் பொருள்

சுதை - சுண்ணும்பு, பதம் - சமயம். முறை, திறம். பல்லியம் - பலவகை வாத்தியம்.

### விளக்கவுரை

பெண்கள் முல்லையைத் தம் இல்லத்தே வைத்து வளர்ப்ப துண்டு என்பதும், அம்முல்லை முதன்முதல் பூத்த மலரின் காரணமாக அதற்கென விழாக் கொண்டாடுவது உண்டு என்பதும்

" அல்லியங் கோதை மாதர் அன்பொடும் வளர்த்த முல்லை
மெல் அரும்பு ஈன்றது என்று விழா அயர் முழவிளேடும் "

என்ற நைடதச் செய்யுளான் அறிக ! என்ற திரு. உ. வே. சா. அவர்களின் குறிப்பு ஈண்டு உணர்தற் பாலது.

## சிவக்கொழுந்து சைவத்திருவீதி சாருதல்

222. ... ... ... - மோது பணி

223. மொய்வந்த தென்இமய முல்லைக்கொடி படர்ந்த
செவ் அந்திவண்ணச் சிவக்கொழுந்து - மெய்வரைவில்

224. கோட்டும் திருப்புயத்தில் கொன்றையொடும் சொல்மாலை
பூட்டும் தேவாரப் புலவர்களும் - நாட்டுபுகழ்த்

225. தென்னம் தமிழில் திருவாசகப் புலவன்
என்னும் பெரியஅன்பின் எம்கோனும் - பொன் அலரும்

226. செந்தாது இலங்கும் திருக்கொன்றை வேணியர்மேல்
அந்தாதி பாடிய என் அம்மையும் - நம் தேவர்

227. வீதிஉலாம் கயிலைவெற்பில் அரங்கேற்றும்
ஆதியுலா உரைத்த அன்பனும் - சோதிமலைப்

228. பெண் பாகம்கொண்ட பிரான் மெய்ப்பதிதோறும்
வெண்பாவினுல் புகழ்ந்த வேந்தனும் - பண்பா

229. பிரமனை முன்னுள் சிரங்கொள் பெம்மானுக்கு அன்பாய்ப்
பரமனையே பாடுவோரும் - மருது இடங் கொள்

230. பைமணி கோவைப்பணி ஆபரணர் மேல்
மும்மணிக் கோவை சொன்ன மூர்த்தியும் - தம்உருவாய்

231. வாழ்வாரும் வாழ்த்தி வருவாரும் மெய் உருகிச்
சூழ்வாரும் எம்மருங்கும் சூழ்ந்துவர - தாழ்வுஇல்லாத்

232. தெய்வப் பலாவின் திருநீழல் வீற்றிருப்போன்
சைவத் திருவீதி சாருதலும்,

*பொழிப்புரை*

தாக்கி வருத்துகின்ற பனியானது மிகுதியாக அமைந்திருக்கும் அழகிய இமயமலையில் தோன்றிய (உமையம்மையாராம்) முல்லைக் கொடியானது படர்ந்த, செக்கர் வானத்தைப் போன்ற நிறம் அமையப் பெற்ற, அன்பு மலர் பூக்கும் கொழுந்து ஆயவனும், (231) குறைபாடு இல்லாத தெய்வத்தன்மை பொருந்திய பலா மரத்தின் அழகிய நிழலிலே எழுந்தருளியிருப்பவனும் ஆகிய பூவணத்து இறைவன்.

அழியாத் தன்மை வாய்ந்த மேருமலையாகிய வில்லை அமைத்துக் கொண்டிருக்கிற அழகிய தோள்களில் கொன்றை மாலையோடும்; சொற்களைக் கொண்டு அமைக்கப் பெறும் தேவாரப் பாக்களாகிய மாலையையும் சேர்த்து அணிவிக்கின்ற தேவாரம் பாடிய மெய் யறிவினர்களாம் சம்பந்தர், நாவுக்கரசர், சுந்தரர் ஆகிய மூவரும் ;

நிலைபேறுடைய புகழையும், இனிமையையும், அழகையும், உடைய செந்தமிழில் ' திருவாசகத்தை ' அருளிச் செய்த புலவன் என்று சொல்லப்படும் சிறந்த அன்பினையுடைய எம் தலைவனும் மாணிக்க வாசகப் பெருமானும் ;

பொன்னைப் போல் ஒளியுடையதாகத் திகழும் செம்மையான மகரந்தப் பொடிகள் மிகுந்து விளங்கும் அழகிய கொன்றையை அணிந்து கொண்டிருக்கும் சடையையுடைய சிவபெருமான் மேல் ' அற்புதத் திருவந்தாதி ' என்னும் சிறு பிரபந்த நூல் ஒன்று பாடிய என்னுடைய தாயாகத் திகழும் காரைக்காலம்மையாரும் ;

இறைவன் திருவுருவையே தமக்குரிய திருவுருவாகக் கொண்டு வாழ்கின்றவர்களும் ;

நம் தேவராம் இறைவர் உலவி வருகின்ற தெரு அமைந்திருக்கின்ற திருக்கயிலை மலையில் அரங்கேற்றம் செய்த முதல் உலா என்று சொல்லப்பெறும் திருக்கைலாய ஞானவுலாவைப் பாடிய அன்பனாகிய சேரமான் பெருமாள் நாயனாரும் ;

ஒளிபொருந்திய இமயமலை வல்லியாகிய பார்வதியாம் பெண்ணைத் தன் பாதிப் பாகத்திலே கொண்ட தலைமையுடைய வனாகிய சிவபெருமான் எழுந்தருளியிருக்கும் உண்மைத் தலங்கள்

ஒவ்வொன்றையும் வெண்பாப் பாட்டினுல் (சேத்திரத்திருவெண்பா) பாடிப் புகழ்ந்த அரசராகிய ஐயடிகள் காடவர் கோன் என்பாரும்;

முறைமை நிலைபெறப் பிரமனை முன்னொருநாள் தலைகொய்த பெருமையுடையவனுய சிவனுக்கு அன்பினராக இருந்து எப்போதும் மேன்மையுடையவனும் சிவனையே பாடிக் கொண்டிருப்பவர்களும்;

திருவிடை மருதூரைத் தமக்குரிய இடமாகக் கொண்டு எழுந்தருளியிருக்கின்றவரும் நச்சுப்பையோடு இரத்தினக் கோவையையும் உடைய பாம்பை அணியாக அணிந்தவரும் ஆகிய இறைவர் மேல் "மும்மணிக் கோவை" என்ற சிறு பிரபந்தத்தை அருளிச் செய்த மூர்த்தியாகிய பட்டினத்து அடிக ளாரும்;

இறைவன் பெருமையைப் பலவாருகப் பல்லாண்டு கூறி வாழ்த்தி வருகின்றவர்களும்;

அன்பினுல் எலும்பும் உருகிச் சூழ்ந்து வருகின்றவர்களும்,

ஆகிய இவர்கள் எல்லாப் பக்கங்களிலும் சுற்றி வந்து கொண்டிருக்க, சைவப் பண்பு நிலைபெற்ற உயர் செல்வமுடைய சிறந்த தெருவினை வந்து அடைதலும்,

## அருஞ்சொற் பொருள்

மோதுதல் – தாக்குதல். மெய் - அழியாத உண்மை. கோட்டும் - அமைத்துக் கொண்டிருக்கும். வேணியர் - சடையுடைய இறைவன். மருது - திருவிடை மருதூர். பை - நச்சுப்பை. பணியாபரணம் – பாம்பணி.

## விளக்கவுரை

உமையம்மை இமயமலையரசன் திருமகளாராய்த் தோன்றியமை பற்றி 'இமயமுல்லைக் கொடி' என்ருர். தென் என்பது அழகைக் குறித்தது. கொடி ஒரு கொம்பைப் பற்றிப் படரவேண்டும் என்ற இயற்கையை நினைத்து இறைவனை அன்பு மலர் பூக்கும் கொழுந்து என்ருர். சிவம் – அன்பு. "அன்பே சிவம்" என்ற தொடரும் இதனை வலியுறுத்தும்.

சைவத்திரு - சிவனைக் கடவுளாகக் கொண்டு வாழ்வதாகிய செல்வம். திருப்பூவணத்துத் தெரு எச்செல்வத்திலும் சிறந்த சிவப்பண்பு என்னும் செல்வம் நிலைபெற்ற தெரு. வீதி - விதி முறைப்படி அமைக்கப்பெறுவது.

## பெதும்பை உலாத்தலைவனைக் கண்டு காமம் கொண்டநிலை

232. ... ... ... —மையல்

233. செயல்சற்று அறிவிழியாள் சேயிழையாரோடும்
இயல்உற்று எதிர்போய் இறைஞ்சி - கயிலைக்

234. கிரிக்குள் அமர்ந்தபிரான் கேசாதி பாதப்
பரப்பின் அழகையெலாம் பார்த்தாள் - ஒருத்தி

235. தபோபலம் வாய்த்தபெரும் சாட்சிக்கு இருந்த
கபோல நகக்குறியைக் கண்டாள் - சுபாவம்

236. தெரிந்த மடவீர் ! இந்தத்தேவர் கபோலத்து
இருந்தகுறி என்னகுறி என்றாள் - திருந்துகுயிற்

237. பிள்ளையே ! எங்கள் தவப் பேறே ! வரிவளைக்கைக்
கிள்ளை ! நீ இன்னம்இது கேட்டிலையோ - தெள்ளுகடல்

238. வண்ணன் அறியாப்பதம் இல்வாயில்வரத் தவம்செய்
பெண்ணமுது கைபடைத்த பேறுகாண் - எண்ணில்

239. அருவுருவம் இல்லா அரனைக் கருணைத்
திருவுருவம் செய்தாள் செயல்காண் -இருநயனம்

240. துள்ளிமுத்தம் கொள்ள மனம்தூய திருப் பொன்னனையாள்
அள்ளிமுத்தம் கொண்ட அடையாளம் காண்-ஒள்ளி
[ழையாய்

241. கண்டருள் நீ என்ன உள்காதல் புறம் தெரியக்
கொண்ட புளகக் குறிப்பு எய்த - வண்டு ஊதக்

242. கேட்டு மலரும் கிளர்தாமரை முகைபோல்
ஈட்டிய செவ்வி எழில்படைத்தாள் - மீட்டுஇவளைப்

243. பார்த்ததும் பாராததுமாய்ப் பைங்கொன்றைத்
தீர்த்தனும் அந்தத்தெரு அகன்றான் - ஆர்த்த

244. சிறுநாண் உறுமடமின் செய்கைதெரி வில்வேள்
சிறுநாண் ஒலிதுலக்கிச் சென்றான்.

*பொழிப்புரை*

காம மயக்கத்தின் தன்மையைச் சிறிதளவு அறிந்துகொள்ளுகின்ற கண்களையுடையளாகிய பெதும்பை செம்மை வாய்ந்த அணிகள் பலவற்றை அணிந்த தோழியர்களோடு நடந்து இறைவனின் எதிரில் போய் நின்று வணங்கி, கயிலைமலைக்குள் விரும்பி எழுந்

தருளியிருக்கும் பெருமானுடைய முடி முதல் திருவடிவரை அமைந்த திருவுருவப் பரப்பில் நிறைந்த அழகினையெல்லாம் கண்டாள் ;

ஒப்புமை இல்லாதவளாகிய பொன்னனையாள் என்ற ஒருத்திக்குத் தவப்பயன் வாய்த்துவிட்டது என்ற நிகழ்ச்சியைப் பிறருக்கு எடுத்துக் காட்டுதற்குப் பெரிய சான்ருக அமைந்திருந்த தாகிய இறைவன் கன்னத்திற் காணப்படும் நகக்குறியைப் பார்த்தாள்;

(நகக்குறியைக் கண்ட பெதும்பை) இறைவன் இயல்பு முழுவ தும் நன்கு தெரிந்த பெண்களே ! இந்த இறைவனின் கன்னத்திலே அமைந்த குறி என்ன குறி ? என்று வினவினுள்.

மொழியானது பண்பாடு பெற்று அமைவதற்காக அடிக்கடி பேசித் திருந்துகின்ற இளங்குயிலே! யாங்கள் செய்த தவத்தின் காரணமாக எங்களிடம் வந்து தோன்றிய பயனே! கீற்றுக்களை யுடைய வளையல் அணிந்த கையையுடைய கிளி போன்றவளே ! இறைவன் கன்னத்தில் அமைந்த நகக்குறி வரலாற்றை நீ இதுவரை கேட்டு அறிந்து கொண்டது இல்லையோ! (இனியாவது அறிந்து கொள்வாயாக)

இது, தெளிந்த கடல்போன்ற நீலநிறமுடைய திருமால் பன்றி யுருவெடுத்து அகழ்ந்து சென்றும் அறிய முடியாத திருவடிகள் தன்னுடைய வீட்டு வாயிலுக்கு வருமாறு தவம் செய்தவளாகிய பெண்களிலேயே அமிழ்து எனத்தகும் பொன்னனையாளின் கை நகத்தால் உண்டாகிய பேறு என்பதை அறிவாயாக;

ஆராய்ந்து பார்த்தால் அருவப் பொருள் என்ருே உருவப் பொருள் என்ருே சொல்ல முடியாத இறைவனை அருள் திருவுருவ மாக ஆக்கிக் காட்டிய பொன்னனையாளின் செயல் என்பதை அறிவாயாக;

மாசு அற்ற மனமுடைய இலக்குமியை ஒத்த அழகுடைய பொன்னனையாள் இரு கண்களும் மகிழ்ச்சியால் துடித்து, ஆனந்தக் கண்ணீரை முத்துமுத்தாகக் கொள்ளுமாறு இறைவனை இரு கைகளாலும் சேர்த்தெடுத்து முத்தமிட்ட காலத்திலே தோன்றிய அடையாளக் குறி என்பதை அறிவாயாக ;

சிறப்புக்கள் பொருந்திய ஆபரணங்களை அணிந்த பெண்ணே ! நன்ருகப் பார்த்து உணர்ந்து கொள்வாயாக. என்று (தோழியர்) சொல்ல,

(பெதும்பையானவள்) நெஞ்சினில் கொண்டிருக்கின்ற காத லானது வெளிப்பட்டுத் தெரியுமாறு உடலில் மயிர்க் கூச்செறிதல் என்ற அடையாளம் தோன்ற,

வண்டானது ஊதுவதைக் கேட்டு மலர்ச்சியடைகின்ற கிளர்ச்சி பொருந்திய தாமரைப் பேரரும்பினைப் போல் பேதைப் பருவத்து இறுதியிலேயிருந்து வளர்த்து ஒன்று சேர்த்த பெதும்பைப் பருவத்து இளமை அழகு முழுவதும் ஒருசேர அமையப் பெற்றாள்.

பசுமையாகிய கொன்றை மலர்மாலையை அணிந்தவனும், அடைந்தார் வினைகளைத் தீர்த்த பெருமையுடையவனும் ஆகிய இறைவன் மறுபடியும் இவளைப் பார்த்தும் பாராதுமாகவே அந்தத் தெருவிலிருந்து நீங்கிச் சென்றான்.

கட்டப்பெற்ற சிறு நாணம் பொருந்திய மடமை வாய்ந்த பெதும்பைப் பருவத்தாளின் இச் செய்கையெல்லாம் தெரிந்த வில்லுடைய மன்மதன் தன்வில்லின் சிறிய நாணின் ஒலியை மெல்ல அசைத்து வெளிப்படுத்தி அவ்விடம் விட்டுச் சென்றான்.

### அருஞ்சொற் பொருள்

மையல்–மயக்கம். இயலுற்று–நடந்து. கிரி - மலை. கேசாதிபாதம் – முடிமுதல் அடிவரை. தபோபலம் – தவத்தால் விளைந்த பயன். கபோலம் - கன்னம். சுபாவம் - தன்மை. பதம் - திருவடி. பெண்ணமுது - பெண்களில் அமுதம் போன்றவள். புளகக் குறிப்பு-மயிர்க்கூச்செறிதலாகிய குறிப்பு. முகை அரும்பு. செவ்வி – இளமை. தீர்த்தன் - அடைந்தார் வினையைத் தீர்த்தவன் ஆர்த்த - கட்டப்பெற்ற. துலக்குதல் - உண்டாக்குதல்.

### விளக்கவுரை

கேசம் – மயிர். கேசாதிபாதம் - முடியிலிருந்து அடிவரை (கால் வரை) பார்த்தல்.

பேதைப்பருவம் அறியாப்பருவம். எப்பொருளைக் காணினும், அதனை வைத்து விளையாடுதல் வேண்டும் என எழுகின்ற ஆசையுள்ளமே பேதைப் பருவத்து உள்ளம். இதனாலேயே பேதைப் பருவத்தாள் இறைவனைப் பழம் என்றவுடனேயே அதை விரும்பும் நிலையாகக் குறித்தார். பழத்தின் தன்மைகள் பலவும் எடுத்துக் கூறியும் அறியாத நிலையிலேயே அவளை அமைத்தார். பின்னுள்ள மங்கைப் பருவமோ முற்ற அறிந்த பருவம். இடைப்பட்ட பெதும்பைப் பருவமானது அறியத் துடிக்கும் பருவம். எட்டு வயதுத் தொடக்கப்பருவம் வாய்ந்த பிள்ளைகள் பல்வகை வினாக்களைப் பன்னிப் பன்னி யெழுப்பிப் பெற்றோரையும் மற்றோரையும் கலக்கமுறச் செய்வதை இன்றும் உலகியலிற் காணலாம். இதைக் கொண்டே பெதும்பையும் இறைவன் கன்னத்திலேயுள்ள நகக்குறியை என்ன குறி ? என்று கேட்டதாக அமைத்தார்.

கடல்வண்ணன் - திருமால். பன்றியுருக்கொண்டு சென்று முயன்றும் இறைவன் திருவடி காணப்பெறவில்லையாதலின் "கடல்

வண்ணன் அறியாப் பதம்'' என்றார். இதைத் "திருமாலும் பன்றி யாய்ச் சென்றுணராத் திருவடி'' என்ற மாணிக்கவாசகர் வாக்கோடு நோக்குக.

உருவம் – வடிவம். கட்புலனால் அறியப்படும் பருப்பொருள். ஒவ்வொரு உருவத்துக்கும் அடிப்படையாகிய அருவம் ஒன்று உண்டு; அது கட்புலனுக்குப் பொருளாகாத நுண்பொருள். இவ்வரு வத்தின் - நுண்பொருளின் விரிவே உருவம் – பருப்பொருள். நுண்பொருள் பருப்பொருளாக மாறும்போதுதான் அருவுருவ நிலை ஏற்படுகிறது. எனவே அருவம், அருவுருவம், உருவம் என்றமூன்று நிலை அமைகிறது. இம் மூன்று நிலையும் மக்கள் போன்ற உருவப் பொருட்கும் உண்டு. ஆயின் இறைவனுக்கு அருவமும் அருவுருவமும் இல்லை, உருவமும் இல்லை. இயற்கையில் இம்மூன்றும் இல்லாத இறைவன் மக்களை மாயையினின்று காப்பாற்றி ஈடேற்றும் பொருட்டுக் கருணைத் திருவுருக் கொண்டு வந்து காட்சியளித்தல் செய்கை. இச்செயலையே 239-ஆவது கண்ணியில் குறித்தார். அருவுருவமே இல்லாத இறைவன் என்றதால் அருவம், அருவுருவம் உருவம் ஆகிய மூன்றுமே இல்லையென்ற குறிப்பை அமைத்தார். அத்தகைய பொருள் கருணையையே உருவமாகக் கொண்டு வரு மாறு செய்தார் என்பதாம்.

> உருமேனி தரித்துக் கொண்டது என்றலும் உரு இறந்த
> அருமேனி யதுவும் கண்டோம் அருவுருவு ஆனபோது
> திருமேனி உபயம் பெற்றோம் செப்பியமூன்றும் நம்தம்
> கருமேனி கழிக்க வந்த கருணையின் வடிவு காணே.

என்ற சிவஞான சித்தியார் செய்யுளால் மேற்கருத்துத் தெளிவு பெறும். அருவுருவமும் இல்லாத இறைவனைக் கருணைத் திருவுருக் கொண்டு தம் மில்லம் வருமாறு செய்தது பொன்னையாளின் தவமே என்பதாம்.

கொண்ட அடையாளம்-கொண்டதால் ஏற்பட்ட அடையாளம்; ஆறு சென்ற வியர் என்பது போல வந்த பெயரெச்சம்.

பேதைப் பருவத்தாள் மகிழ்ச்சி வருங்கால் வெளிப்படையாகவே சிரித்து விடுவதும், துன்பம் வருங்கால் வெளிப்படையாகவே அழுது விடுவதும் ஆகிய பண்புடையவள். உள்ளத்தைப் பிறருக்காக மாற்றிக் கொள்ளத் தெரியாத பருவம் அவளுடைய பருவம். மங்கைப் பருவத்தாளோ எவ்வளவு பேருணர்ச்சிகளையும் பிறரறி யாமல்மறைத்து வைக்கும் ஆற்றலுடையவள். இடைப்பட்ட பெதும் பைப் பருவத்தாளோ உணர்ச்சிகளை மறைக்க முயல்வாள்; ஆனால் முழுநிலையோடு கட்டுப்படுத்தும் ஆற்றல் இல்லாதவள். களவு செய்தார் கைப்பொருளோடு அகப்பட்டுக் கொண்டாற் போன்ற

தோர் நிலைபெறும் பருவத்தாள். இதையே 241-ஆவது கண்ணி யிற் குறித்தார். அள்ளி முத்தம் கொண்ட அடையாளம் என்பதைக் கேட்ட வுடனேயே உள்ளத்தில் இதுவரை மறைத்து வைத்திருந்த காதலை அவள் எவ்வளவோ மறைக்க முயன்றும் அவளுடன் மயிர்க் கூச்செறிதல் முதலிய அடையாளங்கள் வெளிப்படுத்திவிட்டன என்பதாம்.

பெதும்பைப் பருவத்தாள் மலர்ந்தும் மலராத பருவம் உடை யவள் என்பதற்கேற்பவே இறைவனும் பார்த்தும் பாராததுமாகவே சென்ருன் என நயம்படக் கூறினர்.

ஆர்த்த சிறுநாண் என்பதற்குப் பிணிப்புற்ற சிறுநாணம் என் பது பொருள். பேதைப் பருவத்தாள் நாணம் என்பதை அறியாதவள். மங்கைப் பருவத்தாள் நாணம் கைவரப் பெற்றவள். பெதும்பைப் பருவத்திறுதியில்தான் நாணம் இயல்பாகத் தோற்றும். ஆதலினால் பிணிப்புற்ற சிறு நாணம் கொண்ட பெதும்பை எனக் குறித்தார்.

வில்வேள்-மன்மதன். செவ்வேளாகிய முருகனைக் குறிக்காமைக் காக "வில்வேள்" என்றார். பெதும்பைப் பருவத்தாளை நோக்கிய மன்மதன் தன்னுடைய வில்லின் கயிற்றை மெல்லத் தட்டிச் சிற்றொலி யெழுப்பிச் சென்ருன். வெற்றி கொண்டவர்கள் மகிழ்ச்சியின் மிகுதியில் விளையாட்டாக வில்லின் கயிற்றைத் தட்டி ஒலியெழுப்புதல் போன்ற செயல்களைச் செய்வதுண்டு. அரும்பியும் அரும்பாப் பருவத்தாளையும் உட்காதல் புறந்தெரியும் உணர்ச்சி வயப்படுத்தி விட்டோம் என்ற மகிழ்ச்சியில் சிறுநாணொலி செய்து சென்ருன் எனக்கொள்க. இனி, மன்மதன் இப்பெதும்பைப் பருவத் தாளுக்கு அடிப்படைக் காமநிலைத் தோற்றத்திற்குரிய செயல் முடிந்தன; இனி வில்கொண்டு அம்பெய்தலே வேண்டும் எனக் கருதி அடிப்படையாக வில்நாணொலி செய்து சென்ருன் எனவும் கொள்ளலாம். இன்னும், நல்ல பருவம் வாய்த்த மங்கை முதலி யோராயிருந்தால் தன் வெற்றிக்கு ஏற்ப மன்மதன் வில் நாணினால் பேரொலியே செய்து காட்டுவன். இவள் அத்தகை நிலையில்லாப் பெதும்பைப் பருவத்தாளாதலின் அத்தகை வெற்றியில்லையாதலின் சிறு நாணொலி செய்து விட்டுச் சென்ருன் என்றும் கொள்ளலாம்.

## 3. மங்கை

மங்கைப் பருவம் என்பது பன்னிரண்டு வயது முதல் பதின் மூன்று வயது முடிய உளதாகும் பருவம். இது காமம் சான்ற இளமைப் பருவம். தமிழகத்து முறைப்படி உரிய திருமணப் பருவம். இப்பருவத்துப் பெண் காம இயல் நிலையை நன்கு அறிந்தவளாகவே இருப்பாள். இவள் அறிந்தவள் என்ற அளவிற் கூறலாமேயன்றிக்

காமத்தில் அனுபவவுணர்விலும் சிறந்தவளெனக் குறிக்க இயலாது. இவள் நிலைக்கேற்பவே ஆசிரியர் காமத்தை ஏற்கும் குறிப்போடு அமையுமாறு இவளழகைப் புனைந்து காட்டுகிறார். இவள் உலாவந்த பூவணத்திறைவனைக் கண்டு காதல் கொண்டாள் என்பதே இப் பகுதியின் உட்கோள்.

## மங்கைப் பருவத்தாளின் எழில்நிலை

244\. … … … … —மறு தெருவில்

245\. சட்டம்இடும் வில்வேள் தளநாயகப் பட்டம்
கட்ட வளர்ந்த கவின்மங்கை—முட்ட அசைந்து

246\. ஆரவளைந்து துவண்டு ஆடும்இடையும் கருத்தும்
பாரம் அறிந்த பருவத்தாள்—வீரம்மிகும்

247\. வாள்கைக் குமரருக்கு மையல்பிணி கொடுத்து
மீட்கத் தெரியும் விழியினாள்—வேட்கைதரும்

248\. வானில் சுரபியின்பால் வண்மையுடைக் கற்பகப்பூந்
தேனில் கலந்தனைய செவ்விதழாள்—மேல்நிற்கும்

249\. கார்உலவு தண்அம் கடல்போல் அகன்று பரந்து
ஆரமுதம் கொப்புளிக்கும் அல்குலாள்—சோர்வுதர

250\. வன்போர் புரிபொருவில் மன்மதன்தன் நூலினுக்குப்
பொன்போல் உரையறிந்துபூரிப்பாள்—என்பிறவி

251\. எண்ணைப் பறித்துஎறியும் ஈசன்போல் மால்ஆனார்
கண்ணைப் பறித்துஎறியும் காட்சியாள்.

### பொழிப்புரை

அடுத்த தெருவிலே, (உள்ளாள் ஒருத்தி) அவள், இன்னார் இன்ன காமநோய் நிலையை அடையவேண்டும் என்ற ஒழுங்கு முறையை ஏற்படுத்துகின்றவனாகிய கரும்பு வில்லைக் கையிற் கொண்ட மன்மதனனவன் தன்னரசுக்கு வேண்டிய சேனாபதிப் பட்டம் கட்டுதற்காக வளர்ந்திருக்கிற அழகு மங்கை ;

முலைகள் மிகப் பருத்து நெருக்குவதால் அசைந்து, நன்றாக வளைந்து தளர்ந்து தளர்ந்து ஆடும் இடுப்பும், உள்ளத்துக் கருத்தும் மேற்கொண்டிருக்கிற பாரம் இவ்வளவு என்பதைத் தெரிந்து கொள்ளும் வயதுநிலையைப் பெற்றவள் ;

வீரம் என்ற பண்பு மிகுந்தவரும், வாளைக் கையிலே கொண்டவரும் ஆகிய இளங்காளையர்க்கு மயக்க நோயைக் கொடுத்து, பிறகு

அவர்களை அந்நோயிலிருந்து காப்பாற்றி நன்னிலைக்குக் கொண்டு வரும் செயலை நன்ருகத் தெரிந்திருக்கின்ற கண்களை யுடையவள்;

குடிக்கக் குடிக்கத் தெவிட்டாமல் விருப்பத்தை உண்டாக்குவதும், தேவருலகத்தில் உள்ள பசுவாம் காமதேனுவினுடையதும் ஆகிய பாலை வளப்பத்தையுடைய கற்பகப் பூவின் தேனில் கலந்தது போன்ற பண்பையும் செம்மையையும் உடைய உதடுகளை யுடையவள் ;

ஆகாயத்தில் நிலைபெறுகின்ற மேகமானது சென்று உலவுகின்ற குளிர்ச்சி பொருந்திய அழகிய கடலினைப்போன்று அகலமுடையதாய் விரிவுடையதாய் இருந்து அருமையான இன்பநீர் மேன்மேல் பெருகும் நிலையுடைய அல்குலையுடையவள் ;

காமமயக்கத்தால் பிறர் மயக்கத்தை அடையுமாறு வலிமை மிகுந்த போரினைச் செய்பவனுகிய ஒப்புமையில்லாத கரும்புவில்லைக் கையிலேகொண்ட மன்மதன் நூலாகிய காமநூலுக்குப் பொன்போல் சிறந்து விளங்கும் உயர்ந்த உரையைத் தன் மதிவன்மையால் அறிந்து உளம் மகிழும் தன்மையுடையவள் ;

என்னுடைய பிறப்பின் எண்ணிக்கையைப் பிடுங்கி வீசுகின்ற இறைவனைப்போல் காமமயக்கம் கொண்டவர்களின் கண்களை இடம்விட்டுப் பெயரவைத்துப் பயனிழக்குமாறு செய்யும் பார்வையை யுடையவள் ;

### அருஞ்சொற் பொருள்

*சட்டம் - நியதி; முறை; ஒழுங்கு. தளநாயகம் - படைத் தலைவன்; சேனுபதி. கவின் - அழகு. முட்ட - நெருக்க. ஆர - நன்ருக. பாரம் - சுமை. சுரபி - பசு ; காமதேனு. மையல் - மயக்கம். மன்மதன் நூல் - காம நூல். மால் - மயக்கம்.*

### விளக்கவுரை

பெண்களை மன்மதனுக்குப் படைகளாகக் கூறுவது கவிமரபு. எல்லாப் பெண்களிலும் அழகில் சிறந்து விளங்கும் காரணத்தால் மங்கைப் பருவத்துப் பெண்ணைச் சேனுபதிப் பட்டங் கட்டுதற்காக வளர்ந்த அழகு மங்கை என்ருர். இடை துவண்டாடுதற்குக் காரணம் முலைகள் பருத்து நெருக்குகின்றமையே என்று கூறினர். மங்கைப் பருவத்தாளுக்கு அமைந்த இடையும் கருத்தும் தங்களிடம் சுமை ஏற்றப்பட்டுள்ளதை அறிந்துகொண்டன எனக் குறித்தார். பேதை, பெதும்பை ஆகிய பருவத்துப் பெண்களுக்கு முறையே முலைகள் தோன்ருமலும், தோன்றியும் தோன்ருமலும் இருக்குமாதலின் அவை இடைக்குப் பாரமாக அமையவில்லை. மங்கையாளுக்குக் கொங்கைகள் கச்சற நிமிர்ந்து, காழிடங்கொண்டு பணைத்துக் கோடுபடும் நிலையுடையன ஆதலின் அவற்றின் சுமையை அவள்

இடுப்பு நன்ருக அறிந்துகொண்டது என்ருர். அவ்வாறே பேதைப் பருவத்தாள் நெஞ்சம் காதலை அறியாதது; பெதும்பைப்பருவத்தாள் உள்ளம் காதலை அறிந்தும் அறியாதுமாய் இருப்பது. மங்கையோ முற்ற அறிந்தவள் ஆதலின் அவள் கருத்து—நெஞ்சம் காம நினைவுக ளாகிய பாரத்தை நன்கு அறிந்தது எனக் குறித்தார். இவைகள் இரண்டும் பாரத்தை அறிதற்குக் காரணம் அவள் பருவத்தால் வந்த நிலை என்பது கருத்து. இது நிற்க, இடையின் பாரத்தையும் கருத் தின் பாரத்தையும் தானறிந்தாள் என்பது பொருந்துவதில்லை யென்க.

இளைஞர்களுக்கு மயக்கத்தைக் கொடுக்கவும் பின்னர் அவர் களை அந்நோயிலிருந்து காப்பாற்றவும் தெரிந்த கண்களையுடைய வள் என்றது கீழ்வரும் திருக்குறள் கருத்தோடு ஒப்புநோக்கக் கூறியது.

> " இருநோக்கு இவள்உண்கண் உள்ளது ஒருநோக்கு
> நோய்நோக்கு ஒன்றுஅந்நோய் மருந்து "

இனி, பிறருக்கு மையல் நோய்கொடுத்து அம் மையலில் தான் அகப்படாது தன்னை மீட்டுக்கொள்ளும் தன்மையைத் தெரிந்த விழியாள் என்றும் கூறலாம்.

வானின் சுரபி - காமதேனு. இதனுடைய பால் இவ் வுலகப் பசுக்களின் பால்போலல்லாமல் எவ்வளவு குடித்தாலும் மேலும் குடிக்க வேண்டும் என்ற அவாவை எழுப்புவது. பாலோடு தேனைக் கலந்தாற் போன்ற சுவையுடைய இன்ப ஊற்றுநீரை அளிக்கும் உதடுகள் என்பது குறிப்பு. இது,

> "பாலொடு தேன்கலந் தற்றே பனிமொழி
> வாலெயிறு ஊறிய நீர் "

என்ற திருக்குறளை நினைவுபடுத்துகிறது. காமதேனுவின்பால் கற்பகப்பூந்தேனோடு கலந்து வரும் காட்சியை-அதன் இனிமையைக் குமரகுருபரரும் முத்துக்குமாரசுவாமி பிள்ளைத்தமிழ் 46-ஆவது செய்யுளில்,

> ''சேடுபடு புத்தேள் நிலத்துப் புனிற்றிளஞ்
> சேதா..............
> ..........மடி மடை திறந்தூற்று
> தீம்பால் சினைக் கற்பகத்து
> ஏடுபடு தடமலர்த் தேனருவியொடு சொரிந்து
> ஏரியொடு கால் நிரம்ப
> விழுதுபடு கழனியும் தெய்வமணம் நாற ஏன்று
> இன்சுவை முதிர்ந்து "

எனக் குறித்தார்.

மன்மதன் நூலின் மூலபாடத்தை அறிந்து போற்றும் பருவம் பெதும்பைப் பருவம் என்பதை 210-ஆவது கண்ணியிற் குறித்தார். இங்கே அவள் சிறந்த உரை அறிந்து உளம் பூரிக்கிருள் எனக் குறித்தார்.

இறைவன் குருமூர்த்தமாக வந்து திருவருட் பார்வையால் (சக்ஷு தீக்ஷை) உயிர்களின் பிறவியைக் கெடுத்தல்போல் மங்கையும் தன் பார்வைநிலேயால் மயக்கமடைந்தவர்களின் கண்ணுக்குள்ள அறிவுத்தன்மையை எடுத்து நிலேகுலேயச் செய்கிருள் என்பதாம்.

## மங்கை ஒரு மலர்வனம்

251. ... ... ... —வண்ணத்

252. திருமுகத் தெய்வீக நிறச் செந்தாமரையும்
மருமுகக்கும் கூந்தல்நிற வண்டும்—கரியவிழி

253. ஆர்ந்த நீலோற்பலமும் ஆம்பல்வாய்க் கிஞ்சுகமும்
சார்ந்த திருநிறத்துச் சண்பகமும்—பூந்தரள

254. மாலே முலேக்கோங்கும் வாய்ந்த நகைத்தளவும்
கோலம் இனியகொழுங் குமிழும் நூலின்இடை

255. வல்லியும் செங்கைமலர்க் காந்தளும் சரண
பல்லவமும் மற்றுளவையும் பார்த்தருளி—நல்லவர்பால்

256. போதுதிரு உள்ளத்துப் புட்பவனக் கோயிலார்
ஈதும்ஒரு புட்பவனம் என்றுஎண்ணக்—கோதுஅகல

257. மேயதிரு அழகின் மெய்யும் அவயவமும்
தூய நிறத்தில் துலங்குவாள்,

*பொழிப்புரை*

நல்லன்பர்களிடத்திலே சென்றருளுகின்ற அருள்நிறைந்த நெஞ்சினராகிய புட்பவனம் என வழங்கும் திருப்பூவணத்தில் கோயில்கொண் டெழுந்தருளியிருக்கிற திருப்பூவணநாதர்.

யாவராலும் விரும்பப்பெறும் நிறமென்னும் அழகு அமைந்திருக்கின்ற முகமாகிய தெய்வத்தன்மை பொருந்திய நிறமுடைய செந்தாமரை மலரையும், (முகமாகிய செந்தாமரை)

மணத்தை மிகுதியாக ஏற்றுக்கொண்டிருக்கிற கூந்தலாகிய கருநிறம் வாய்ந்த வண்டுகளேயும்,

கருமையமைந்த கண்களாகிய அழகு மிகுதியும் நிறைந்த கருங்குவளே மலர்களேயும்,

ஆம்பலைப்போன்ற வாயுதடுகளாகிய முள்முருக்க மலரையும்,

பொருந்திய அழகிய வடிவத்தில் அமைந்த நிறமாகிய சண்பக மலரையும்,

பொலிவு மிகுந்த முத்துமாலை அமைந்த முலைகளாகிய கோங்கு அரும்புகளையும்,

பொருந்திய பற்களாகிய முல்லையையும்,

மூக்காகிய அழகோடு இனிமையையுடைய செழுமைவாய்ந்த குமிழம் பூவையும்,

நூலினை ஒத்த இடுப்பாகிய கொடியையும்,
செம்மை சேர்ந்த கைகளாகிய மலர்ந்த காந்தளையும்,
கால்களாகிய தளிர்களையும்,

அடுத்த எல்லா அவயவங்களும் இவ்வாறே ஒவ்வொரு மலரை ஒத்திருக்கும் தன்மையையும் கண்டு, இம்மங்கை நல்லாளின் உருவமும் ஒரு மலர்வனம்தான் என்று எண்ணும் நிலையில், குற்றம் நீங்குமாறு பொருந்தியனவாய்க் கண்டாரால் விரும்பப்பெறும்அழகின்கண் நிலைபெற்ற உடலும் உறுப்புக்களும் தூய்மைபொருந்திய நிறத்தினால் விளங்கும் நிலையுடையாள்.

### அருஞ்சொற் பொருள்

மரு – மணம். கிஞ்சுகம் - முள்முருக்க மலர். தளவு - முல்லை. வல்லி - கொடி. சரணம் – கால். பல்லவம் – தளிர்.

### விளக்கவுரை

மங்கை நல்லாளின் ஒவ்வொரு அவயவமும் ஒவ்வொரு மலரை ஒத்திருந்ததால் அவளை மலர்வனம் என்றே குறித்தார். மயக்கத்தை நீக்கும் இறைவனுக்கே இவள் ஒரு மலர்வனம் தானோ என்று நினைக்கக்கூடிய மயக்கத்தைக் கொடுக்கும் நிலையுடையாள் என்பதாம். இக்காலத்தும் 'பூங்காவனம்' எனப் பெண்களுக்குப் பெயரிடும் வழக்கமுண்மையை உணரலாம். அழகிய மணவாளதாசர் 'அரங்கநாதனை மலையெனக் கூறி, அம்மலை பூத்ததோர் அரவிந்த வனமே, அரவிந்த மலர்தொறும் அதிசயம் உளவே' என்று கூறினார்.

## மங்கை அம்மானை யாடுதல்

257. ... ... ... —சாயல் இயல்

258. ஒத்த பருவத்து உயிர்ப் பாவையர் சூழச்
சித்திர மாமண்டபத்திற் சென்றிருந்து - முத்தமுலை

259. விம்ம நையும் நுண்ணிடையாள் வெண்முத்தம்
அம்மனை வாங்கி எறிந்தாட அவை—தம்ம [இட்டிழைத்த

260. திருமுகச் செவ்வி திருடத் திகழ்விண் திங்கள்
வருவதுவும் போவதுவும் ஆன - இருகை

261. வனசமலர் மாறி மாறி விளையாடும்
இனிய களி அன்னங்கள் என்னப் - புனைகுழற்குத்

262. தோற்ற முகில் திறையாத் தூமுத்தின் பந்து நிரை
போற்றி வரவிட்ட புதுமை யென—ஏற்றுஅதனைக்

263. கொள்ளாது எடுத்து எறியும் கொள்கையென
[விண்முகில்பின்
தள்ளாது மீளத் தருவது என—வள்ளல்பால்

264. தூதுவிடும் அன்னம்எனத் தொல்லை அனம் காணாத
நாதன்என மீளும் நலம் என்ன—மாதரசி

265. அம்மானை ஏந்துகரத்து அம்மானையே பாடி
அம்மானை ஆடும் அளவிலே,

### பொழிப்புரை

முத்துமாலையை அணிந்த முலைகள் பருக்கின்ற காரணத்தால் சுமைதாங்காது மெலிந்து போகின்ற மிகச் சிறிய இடுப்பை உடைய வளாகிய மங்கையானவள், (259)

மென்மைத் தன்மையாலும், பெண்மைக்குரிய இலக்கண முறைமையாலும் தன்னைப்போன்ற மங்கைப் பருவமுடையவர்களும், உயிரே போன்றவர்களும் ஆகிய பெண்கள் தன்னைச் சூழ்ந்து வர ஓவியம் அமையப்பெற்ற சிறந்த மண்டபத்துக்குச் சென்று அமர்ந்து,

வெண்மையாகிய முத்துக்கள் அமைத்துச் செய்யப்பெற்ற அம்மனைக் காய்களைத் தோழியர்களிடத்திலே யிருந்து வாங்கி மேலே வீசியெறிந்து விளையாட,

அவளால் மேலே வீசப்பெற்ற அம்மனைக்காய்கள் மங்கையினுடைய அழகிய முகத்தில் அமைந்த இளமை மிகுந்த அழகைத் திருடுவதற்காக வானத்தில் விளங்கும் வெண்மை மதி வருவதும் போவதும்போலத் தோற்றமளிப்பன ஆயின.

மங்கையர்க்கரசியாகிய அவள், (264) இரண்டு கைகளாகிய தாமரை மலர்களில் மாறிமாறி விளையாடுகின்ற இனிமையுடைய மகிழ்ச்சியால் சிறந்திருக்கும் அன்னங்கள் என்று கூறுமாறும்,

அழகுசெய்யப் பெறுகின்ற கூந்தலுக்குத் தோற்றுச் சென்ற மேகம் தான் தோற்றமைக்கு அறிகுறியாகக் கொடுக்கப்பெறும்

திறைப்பொருளாகத் தூய்மையான முத்துக்களால் அமைக்கப்பெற்ற பந்து வரிசையை நட்பைப்பேணி வருவதற்காக அனுப்பிய வியப்புக் காட்சி என்று கூறுமாறும்,

அவ்வாறு வந்த திறையை ஏற்றுக்கொண்ட கைகள் மீட்டும் அதனை அமைத்துக் கொள்ளாமல் வேண்டாம் என்று எடுத்துவீசும் தன்மை இது என்று கூறுமாறும்,

திறை திருப்பி அனுப்பப்பெற்றதால் பயம் கொண்ட ஆகாயத்து மேகம் தவறாமல் மறுபடியும் தரும் தன்மை இது என்று கூறுமாறும்,

வேண்டுவார்க்கு வேண்டிய நல்கும் இறைவன்பால் தன் காம நோயை எடுத்துச் சொல்வதற்காக மங்கையால் தூதுவிடப் பெறும் அன்னங்கள் என்று கூறுமாறும்,

பழைமையுடையதாகிய பிரமன் என்ற அன்னத்தாலேயே காணமுடியாதவன் என்று தம்முடைய முடியாமைக்கும் ஒரு காரணம் காட்டி மீளுகின்ற அன்னத்தின் தன்மைஎன்று கூறுமாறும்,

அழகிய மானைத் தாங்கியிருக்கின்ற கையையுடைய அவ் விறைவன் புகழையே பாட்டாகப் பாடி அம்மானை விளையாட்டு விளையாடிக்கொண்டிருக்கிற சமயத்திலே.

## அருஞ்சொற் பொருள்

சாயல்—மென்மை. விம்ம—பருக்க. நையும்—தேயும். தம்ம—தம்முடைய. தம்+அ—தம்ம. செவ்வி—இளமை அழகு. ஆன—ஆயின; ஆக்கவினை. வனசமலர்—தாமரைமலர்.

## விளக்கவுரை

அம்மானையாடுதல் என்பது பெண்களின் ஒருவகை விளையாட்டு. ஐந்தும் ஏழும் ஆகிய காய்களை வைத்துக் கொண்டு பெண்கள் மேலே வீசி யெறிந்தெறிந்து பிடித்து விளையாடும் ஆட்டம். மங்கை வைத்து விளையாடிய அம்மனைக் காய்கள் பந்து போன்ற அளவுடையனவாய் முத்துக்களால் ஆக்கப் பெற்றவை.

அம்மனைக்காய்களை அவள் மேலே வீசி வீசி எறிந்து பிடித்து விளையாடும்போது அக்காய்கள் உயரே போவதும் கீழே வந்து மங்கையின் கைகளில் பிடிபடுவதும் இருகைகளிலும் மாறிமாறிப் பிடிபடுவதும், மீண்டும் மேலெழுவதும் ஆகிய நிகழ்ச்சிகளை வைத்துக்கொண்டு ஆசிரியர் அமைக்கும் நயம் வியத்தற்குரியது.

முத்தம் என்பதில் முத்து என்ற சொல் அம் சாரியை பெற்றது. இங்கே முத்துக்களால் ஆகிய மாலையைக் குறித்ததால் காரிய

வாகுபெயர். முலை பருமை யடைதலே இடை தேய்வதற்குக் காரணம் எனக் குறித்தார்.

மேலே எறிந்த அம்மனைக் காய்கள் மங்கையின் முகத்தை நோக்கி வருவது விண்ணில் வாழும் திங்கள் மங்கையின் முகத்தில் அமைந்த இளமையழகைத் திருட வருவது போல் இருந்தது என்ருர்.

மேகத்திலிருந்து முத்துத் தோன்றும் என்பது கவிமரபு. 'கொண்டல் தருநித்திலந் தனக்குக் கூறும் தரமுண்டு' என்பது பகழிக் கூத்தர் வாக்கு. அதைக் கருத்தில் கொண்ட ஆசிரியர், மேகம் கூந்தலுக்குத் தோற்றுப் போனதாக அமைத்து அது மங்கைக்குத் திறைப்பொருளாக முத்துப் பந்தாகிய ஒருவரிசையை அனுப்பியதாக அமைத்தார். இது மேலேயிருந்து கீழே மங்கையின் கையில் வந்து வீழும் காய்களுக்கு உவமை. அடுத்து அவை மீண்டும் மேலேழுவதற்கு மங்கை அத்திறையை வேண்டாமெனத் திருப்பி அனுப்பியதாகக்குறித்தார். அக்காய்கள் மீண்டும் கீழிறங்குவதற்கு மேகங்கள் அத்திறையை மீண்டும் அனுப்பியதாகக் கூறினுர்.

காமம் கொண்டவர் அன்னத்தைத் தூதுவிடும் வழக்குப்பற்றி மங்கை அம்மனைக் காய்களை மேலே வீசியதை இறைவன்பால் தூதுவிட்ட அன்னம் எனக் குறித்தார். அவை மீண்டு வருவதைப் பிரமன் என்ற அன்னமே அவனைக் காணமுடியாமல் தோற்ற போது நாங்கள் எம்மாத்திரம் என்று கூறி மங்கையை அடைவதாகக் குறித்தார்.

'அம்மானை ஏந்து கரத்து அம்மான்' என்பதில் முதல் உள்ள அம்மானை என்பதை அம்+மானை எனப்பிரித்து அழகிய மானை என்று பொருள் செய்து 'அழகிய மானை ஏந்திய கையையுடைய இறைவனை' என அமைக்க.

அம்மானை ஆடும்போது இறைவன் புகழைப்பாடி அம்மானை ஆடினுர்கள்

## பூவணேசன் பவனி வருதலை மங்கை அறிதல்

265\. ... ... ... —பெம்மான் சூழ்

266\. கார் ஆழித்தேர்முதுகு காட்டக் கதிர்வெய்யோன்
ஓர்ஆழித் தேர்ஒதுங்கி ஓட்டெடுப்பக்-கூர்ஆழி

267\. பாதலக் கங்கை படிய நெடுங் கூவிரம்போய்
மீதலக் கங்கை மிசைப் பொங்க - போதருதேர்

268. மேல் வெண் துகிற் கொடிகள் விண்அம் சுரநதியின்
பால்வெண் திரைபோல் படிந்துஆடச் - சேல் கொண்டு

269. உருக்கும் திருக்கண் உமையம்மை பாகத்து
இருக்கும் திருப்பூவ ணேசன்—திருக்கொன்றை

270. மாலை அழகன் வரும்பவனிதான் உரைக்கும்
வேலை,

## பொழிப்புரை

ஒருகாலத்து இறைவனைச் சுற்றிநின்றதும் கரிய கடல்சூழ்ந்து வட்டமாக இருப்பதும் ஆகிய நிலம் என்னும் தேர் தன்னுடைய முதுகைக் காட்ட.

ஒளிக் கீற்றுக்களையுடைய வெம்மையோனுகிய சூரியன் ஏறிவரும் ஒற்றைச் சக்கரத்தையுடைய தேரானது இறைவனுடைய தேர் வானம் வரை உயர்ந்திருப்பதால் நேரே செல்ல முடியாமல் ஒருபக்கத்தே ஒதுங்கி ஓட்டமெடுத்து ஓட,

இறைவன் ஏறிவரும் தேரிலே உள்ள கூர்மையான சக்கரம் கீழுலகத்திலேயுள்ள கங்கையைச் சென்று பொருந்த,

இறைவன் தேரில் உள்ள நீண்ட உச்சியானது சென்று ஆகாயக் கங்கையின் மேலே அமைய, இறைவன் ஏறி உலா வருகின்ற தேரின்மேல் அமைந்த வெண்மையான துணியாலாய கொடிகள் விண்ணுலகத்திலுள்ள அழகிய தேவநதியின் பாலனைய வெள்ளிய அலை போல ஆகாயத்திலே படிந்து ஆட,

கெண்டை மீனைப் போலப்பிறழ்ந்து இறைவனைத் தன்வயமாக்கி உருக வைக்கின்ற அழகிய கண்களையுடைய உமையம்மையை ஒரு பாகத்தில் ஏற்று எழுந்தருளியிருக்கும் திருப்பூவண நகரத்துத் தலைவனும் அழகிய கொன்றை மாலை யணிந்த அழகுடையவனும் ஆகிய இறைவன் தேரேறித் திருவுலா வருகின்றான் என்ற செய்தியை எல்லோரும் எடுத்துக் கூறுகின்ற சமயத்தில்,

## அருஞ்சொற் பொருள்

ஓர் ஆழி – ஒற்றைச் சக்கரம். கூவிரம் - தேரின் மகுடம். போதருதேர் – ஊரும்தேர். சுரநதி - தேவநதி; கங்கை.

## விளக்கவுரை

பூமியாகிய தேர் இறைவனுடைய தேர் செல்லுவதற்குத் தன் முதுகாகிய இடத்தைக் காட்டியது என்றார். சிவன் திரிபுரதகனம் செய்யச் சென்றகாலை பூமியையே தேராகக் கொண்டு சென்ற

போது இறைவன் உள்ளே இருக்கத் தேர் இறைவனைச் சுற்றி நின்ற தாதலின் 'பெம்மான் சூழ் ஆழித் தேர்' என்று பூமியைக் குறித்தார். கார், ஆழி என்பன கருமை, வட்டம் ஆகியவற்றைக் குறிக்கும் பண்புப் பெயர்கள் முறையே ஆகு பெயர்களாய்க் கடலையும், பூமியையும் குறித்தன.

இறைவன் ஏறிவரும் தேர் பருத்து வானம் வரை நீண்டிருப்பதால் சூரியனின் தேர் நேர் வழியிற் செல்ல முடியாமல் ஒதுங்கிச் சென்றது. இறைவன் ஏறிவரும் தேரானது சக்கரம் பாதாளத்தில் உள்ள கங்கையைப் பொருந்த, அதன் உச்சி ஆகாய கங்கைக்கும் மேல் சென்று நிற்க, கொடிகள் ஆகாய கங்கையின் அலையென்றெண்ணுமாறு படிந்தாட வந்தது என்பதாம்.

### பவனிவரக் கேட்ட மங்கையின் செயலும் நிலையும்

270. ......திரு அம்மனை கைவிட்டு எறிந்தாள்-சேலை

271. இடைக்குள் இறுக்கி எழுந்தாள் நற்றுயர்
பிடிக்கப் பிழைத்துப் பெயர்ந்தாள்-தடுக்கும்

272. செவிலியர்க்கும் தப்பித் தெருவிற் புகுந்தாள்
நவில் இயற்கை வாசமலர் நங்கை - சிவபிரான்

273. தெய்வத் திருமார்பும் திண்தோளும் பொன்னனையாள்
கைவைக்கும் கோலக் கபோலமும் - சைவத்

274. திருநீறு சண்ணித்த தெய்வச் செம்மேனி
அருள்நீர்மை குன்றா அழகும் - பெருவாழ்வு

275. பெற்றதுபோல் கண்டு பெரிது இறைஞ்சிக் கண்பனிப்ப
முற்றும் உடல் பூரிக்க முன் நின்று-நல்தவர் சேர்

276. விண்ணூர்ந்த வெள்ளிமலை மேலிருக்கும் செந்தேனுக்கு
அண்ணுந்து பார்த்து உள் அயர்வுற்றாள்-தண் ஆர்

277. விது குடியேறு சடைவேதியன் மோகம்
புதுக்குடி யேறும் நெஞ்சு பூண்டாள்-மதுக்குமிழி

278. செற்றிய வெண்தரளச் செங்கனிவாய் நெஞ்சத்துள்
உற்றதுயர் பாங்கியருக்கு ஓதினாள்-மற்றவரும்

279. பொன்னே கிளியே புதுமயிலே அன்னமே
மின்னே மதன விசயமே-அன்னைக்

280. கொடியார் தடுத்த கொடுஞ்சகுனம் ஈது என்று
உடனே குயிலுக்கு உரைத்தார்-மடவரலும்

281. மற்றது மெய் என்று மயங்கி அறிவு அழிந்து
பொற்றொடி வீழப் புலம்புற்றாள்-முற்றும்

282. உரியார் கடைக்கணித்தது ஊங்கு உவட்கோ வேட்கோ
தெரியாது என அயிர்க்கச் சென்றார்-பொருவேள்

283. மதுஇருந்த மென்சாப வாளியின் வாய்க்குப்
புதுவிருந்து ஆயினாள் பூவை.

*பொழிப்புரை*

திருப்பூவணநாதன் உலாவருகிறான் என்பதைக் கேட்ட மங்கை, தான் ஆடிக்கொண்டிருந்த் அம்மானைக் காய்களைக் கையிலிருந்து வீசி எறிவாள் ஆயினாள்; ஆடையை இடுப்பில் நன்றாக இறுக்கிக் கட்டிக்கொண்டு போதற்கு எழுந்தாள்; பெற்றெடுத்த நற்றாயர் போகலாகாது எனத் தடுப்பதற்காகப் பிடிக்க முற்பட்ட போது அவர்கள் கையில் அகப்படாது தப்பித்துச் சென்றாள்; அய விருந்து அவ்வாறே தடுக்கும் வளர்ப்புத் தாயர் கைகளுக்கும் அகப் படாமல் தப்பித்துச் சென்று தெருவிலே நுழைந்தாள்.

சிறப்பாகப் பேசப்பெறுகின்ற இயற்கை மணம் கமழுகின்றவ ளாய் மலர்களை அணிந்த பெண்கள் திலகமாகிய மங்கையானவள், சிவபெருமானுடைய தெய்வத் தன்மை பொருந்திய அழகிய மார்பை யும், வலிமை மிகுந்த தோள்களையும், பொன்னனையாள் என்பாள் அள்ளி முத்தமிட்டதின் அடையாளமாகக் கை வைத்திருக்கும் அழகு வாய்ந்த கன்னத்தையும், சிவ மதத்தின் சின்னமாகிய திரு நீற்றினை நன்றாகப் பூசியிருக்கின்ற தெய்வத் தன்மை வாய்ந்த திரு வுடம்பில் திருவருள் தன்மையானது குறையாமல் விளங்குகின்ற அழகையும், எவ்வாழ்விலும் சிறந்த பெருவாழ்வாகிய பேரின்ப வீட்டை அடைந்ததுபோலப் பார்த்து மகிழ்ந்து, பலமுறை வணங்கி, கண்கள் மகிழ்வால் நீரைத் துளி துளியாகச் சிந்த, உடலின் முழுப் பகுதியும் மகிழ்ச்சியால் பூரிப்பு அடைய இறைவனுக்கு முன்னர் நின்று கொண்டு, புண்ணியம் மிகுந்த தவசிகள் சேர்ந்ததும், வானத்துவரை சென்று உயர்ந்ததும் ஆகிய வெள்ளிமலை மேல் இருக்கும் முற்றிய செம்மை சேர்ந்த தேனை அடைதற்காக நிமிர்ந்து பார்த்து உள்ளம் சோர்வடைந்தாள்.

குளிர்ச்சி பொருந்திய மூன்றாம் பிறைச் சந்திரன் தக்கன் சாபத் துக்குப் பயந்து குடியேறியிருக்கிற சடையையுடைய வேதநாயக னாகிய இறைவன் மேல் அமைந்த காதல் என்பது வியப்பான புதிய முறையில் குடியேறிய உள்ளம் அமைந்தவளானாள்.

தேனின் திரட்சியைப் பெய்து வைத்து, சுற்றிலும் வெண்முத்துக் களைப் பதித்து, செம்மையான கொவ்வைக்கனி போன்றிருக்கிற வாயினால் தன் உள்ளத்தில் வந்து பொருந்திய துன்பத்தை அடுத் துள்ள தோழியர்களுக்கு எடுத்துக் கூறினாள்.

அவள் கூற்றினைக் கேட்ட தோழியர்களும் பொன்போலும் நிறத்தாளே! கிளிபோலும் மொழியாளே! புதுமைகொள ஆடும் மயிலின் சாயலுடையவளே! அன்னத்தைப் போன்ற நடையாளே! மன்மதனின் வெற்றிக்குத் துணைபுரிபவளே! தாயர் எனப்படும் கொடியவர்கள் தடுத்தல் என்ற நிகழ்ச்சியால் உண்டாகிய கொடிய சகுனத்தால் விளைந்தது இச்செயல் என்று குயிலன்னாளாகிய மங் கைக்கு எடுத்துக் கூறினர்.

பெண்ணாகிய மங்கையும் அதுகேட்டு அவர்கள் கூறியது உண் மையே என்று கருதி மயக்கமடைந்து, அறிவு செயற்படாதொழிய, அணிந்திருந்த பொன்னாலாகிய தோள்வளை கழன்று வீழ அழுதலை மேற்கொண்டாள்.

நன்றாக இருந்தவளை இந்நிலைக்கு வருமாறு செய்த செயலுக்கு முழுவதும் பொறுப்பாளியாகிய பூவணேசர் கடைக்கண்ணோக்கம் அருளி மிகுதியாக அருள் செய்தது மங்கைக்கா அல்லது மன்மத னுக்கா என்பது தெரியவில்லையே என்று எல்லாரும் ஐயப்பட்டுக் கொண்டிருக்கத் திருத்தேரின் மேல் சென்றுவிட்டார்.

நாகணவாய்ப் புள்ளினைப் போன்ற மொழிபயிலும் மங்கை சண்டை செய்யும் மன்மதனுடைய தேன் தங்கிய மென்மையாகிய வில்லம்புகளின் குறிக்கு இலக்காக இருக்கும் புதிய விருந்துப் பொருளாக ஆயினாள்.

### அருஞ்சொற் பொருள்.

நவில் – சிறந்து பேசுதல். சண்ணித்த-பூசிய. பெருவாழ்வு - வீடு. விது - மூன்றாம் பிறை நிலா. குமிழி - திரட்சி; உருண்டை. செற்றிய – அமைத்த. ஊங்கு – அதிகம்; மிகுதி. உவட்கோ என்பது அவள், இவள், உவள் என்ப வற்றில் அமைந்த உவள் என்பது நான்கன் உருபு ஏற்றது. ஓகாரம் ஐயப் பொருள். சாபவாளி - வில்லுக்கென அமைந்த அம்பு. பூவை–நாகணவாய்ப்புள்.

### விளக்கவுரை

செயற்கையால் உண்டாக்கப்பெறும் மணம் இன்றி இயற்கை யாகவே மணங்கமழும் உடலினையுடையவள் மங்கை என்பதாம். அல்லது சிறப்பித்துப் பேசப்பெறும் இயற்கை மணம் அமைந்த மலர்களை அணிந்த மங்கை என்றும் கொள்ளலாம்.

பெருவாழ்வு பெறுதல் என்பதற்கு வீட்டின்ப நிலை பெறுதல் என்பது பொருள். தாழ்வு இல்லாததும் தவருததும் ஆகிய வாழ்வு அது ஒன்றே யாகலின் அதுவே பெருவாழ்வு எனப்பட்டது.

வெள்ளிமலை மேலிருக்கும் செந்தேன் என இறைவனைக் குறித்தார். இறைவன் வற்ருத தேனுகவும் உயிர்கள் சுவையாகவும் இருத்தலே முத்தியிலே இறையும் உயிரும் இருக்கும் முறை என்று கூறுவர்.

இந்தனத்தின் அங்கி எரியுறுநீர் தேன் இரதம்
கந்தமலர்ப் போது வான்கால் ஒளிகண் — சந்ததமும்
அத்துவித மாவது போல் ஆன்மாவும் ஈசனுமாய்
முத்தியிலே நிற்கும் முறை.

இதற்கொப்பவே ஈண்டும் இறைவனைத் தேனுகக் கூறினுர். மலையில் இருப்பது தேன் என்ற நயத்தாற் கூறினுரென்றும் கொள்ளலாம்.

மதுக்குமிழி-தேனின் திரட்சி; இங்கே வாயில் ஊறும் ஊறலைக் குறித்தது. வெண்தரளம் என்பது பல்வரிசையைக் குறித்தது.

மங்கை தன் துயரைக் கூறியவுடன் பாங்கியர் இதுதாயர்தடுத்த தீச்சகுனத்தால் விளைந்தது என்று கூறினுர்கள். தாயர்களைக் கொடியவர் என்று கூறினுர் தன் தலைவியின் இன்ப உணர்ச்சிக்குத் தடையாக இருந்து தடுத்த காரணத்தால். இனி கொடி என்பதற்குக் காக்கை என்று கொண்டு அன்னையாகிய காக்கைகள் தடுத்ததாகிய கொடுஞ்சகுனம் என்று குறித்தார். இதற்கேற்பவே மங்கையையும் குயில் என்றுகூறினுர். குயிலை அடைகாத்துக் குஞ்சாக்கிக் காத்தது காக்கை என்ற காரணம்பற்றி இவ்வாறு கூறியதாகவும் கொள்ளலாம்.

காம மயக்கம் தோன்றி அதனுல் வருந்தும்போது உடல் இளைப்புண்டதால் தொடி வீழ்ந்தன என்பதாம். இறைவன் எழுபருவ மகளிர்களையும் தான் காதலிக்காது பொது நோக்காக நோக்கிச் செல்வதுவாகக் கூறுவதே உலா இலக்கணமாதலின் அவர் பார்த்த அப்பொதுப் பார்வை மங்கை, மன்மதன் ஆகிய இருவர்களில் யாருக்கு மிகுபயன் விளைத்தது என்று கூற இயலவில்லை. இந் நிகழ்ச்சியில் இருவருக்கும் வெற்றி கிடைக்கவில்லை என்பதாம்.

மது இருந்த வாளி - தேனிருந்த மலரம்பு. மன்மதன் மலர்களையே அம்பாகக் கொண்டவன் என்பது முன்னும் அறிந்தது. சாபம் - வில். சாபவாளி - வில்லம்பு. வில்லில் வைத்தெய்தற்குரிய அம்பு. வாய்-குறி. அம்பு சென்று பொருந்த வேண்டிய குறிக்கு இலக்காக இருந்தாள் மங்கை. காதல் உணர்வை இப்போதுதான் முதன் முதல் உள்ளத்தில் குடியேற்றிக் கொண்டாள் ஆதலின் இது

வரை இவள் மேல் சென்றறியாத மன்மதன் அம்புகளுக்குப் புதிய விருந்தாக அமைந்தாள் என்பதாம்.

## 4. மடந்தை

மடந்தைப் பருவம் என்பது பதினன்கு முதல் பத்தொன்பது வயது முடியப் பெண்களுக்கு உளதாகும் பருவம். பேதை, பெதும்பை, மங்கை ஆகிய பருவத்துப் பெண்கள் உலாப்போகும் திருப்பூவணேசனைக் கண்டு காதல் கொண்டமையை முறையாகக் கூறிவந்த ஆசிரியர் மடந்தைப் பருவத்தாளும் அவனைக் கண்டு காதல் கொண்ட முறையைக் கூற முற்படுகிருர்.

### மடந்தையின் எழில் நிலை

283. ... ... ... —மதி ஆர்

284. இனத்தைப் பொருவேள் இரதிமேல் வைத்த
மனத்தைத் திருப்பும் மடந்தை - வனத்த அகில்

285. ஆவி முடித்து இளைஞர் ஆவி முடிக்க எனச்
சீவி முடித்த திருக்குழலாள் - பூவுலகில்

286. ஆற்று வன்காமுகர்தம் ஆயுள்நாள் எண்ணியெண்ணிக்
கூற்றுவன் பார்க்கப் பார்க்கும் கூர்விழியாள் - சாற்றரிய

287. கைசிவக்கக் காமவேள் கண்சிவக்க ஆடவர்தம்
மெய்சிவக்க வாய்சிவக்கும் மெல்லிதழாள் - மொய்முனிவர்

288. சாபம் பறக்கத் தவம்பறக்க மால்பிறக்கச்
சோபம் பெறப்பிறக்கும் சொல்லினுள் - கோபமதன்

289. போர்வளர நாண்ஓசை போய்வளரப் பேராசை
வேர்வளர மேல்வளரும் வெம்முலையாள் - தேர் மலயக்

290. கால்வளைய வேள்சிலைவன் கைவளைய ஆடவரை
மால்வளையப் போய்வளையும் வாள்நுசுப்பாள்-மேல்வரும் அன்பு

291. உள்ளூற ஆசைகிடந்து ஊற்று ஊற வாய்ஊற
அள்ளூறு அமுதுஊறும் அல்குலாள் - துள்ளுவிழி

292. சுற்ற மனம்சுற்ற மனந்தூயோர்க்கும் ஆசை தலை
சுற்ற உடைசுற்றும் துடையினுள் - வெற்றிமதன்

293. தேர்நடக்க மூன்றுலகும் செங்கோல் நடக்க மிகும்
போர்நடக்கத் தானடக்கும் பொன்னடியாள்,

## பொழிப்புரை

அறிவு அமைந்த உயிர்த் தொகுதியைக் காதல் உணர்வு கொள்ளுதற்காக மலரம்பு எய்து சண்டை செய்கின்ற மன்மதனும் கூட காதல் மனைவியாகிய இரதிதேவியின்மேல் வைத்த காத லுள்ளத்தைத் தன் வயமாக மாற்றி இழுக்கும் ஆற்றல் வாய்ந்த மடந்தைப் பருவமுடையாள்,

காட்டில் வளர்ந்தவைகளாகிய அகிற்கட்டையைப் புகைப்பதன் மூலம் உண்டாகிற புகையை ஊட்டி முடித்து, இளைஞர்க ளுடைய உயிரை முடிவுடையதாக ஆக்குதற்காகவே சீவி முடிக்கப் பெற்றிருக்கிற அழகிய கூந்தலையுடையவள்;

நிலவுலகத்திலே துணிவோடு செயலாற்றுகின்ற வன்மையான இழிகாமப் பரத்தர்களின் வாழ்நாளை அடிக்கடிக் கணக்கிட்டுக் கணக்கிட்டு இயமனே பார்க்குமாறு தன் பார்வையைச் செலுத்தும் கூரிய கண்களையுடையவள்;

புகழ்ந்து பேசுதற்கு அருமையான மன்மதனின் கை சிவக் குமாறும், காமத்தை விளைவிக்கும் அரசனும் மன்மதனின் கண்கள் சிவக்குமாறும், அவற்ருல் ஆடவர்களின் உடல் சிவக்குமாறும் தன் னுடைய வாய் சிவக்கும் மென்மையான உதடுகளையுடையவள்;

வலிமையையுடைய முனிவர்களின் கேடுவிளைவிக்கும் சொல் தவறுபடவும், அவர்களின் தவம் மாறுபடவும், அவர்களுக்குக் காம மயக்கம் உண்டாகவும், அவர்கள் கலக்கம் கொள்ளுமாறு தோன்று கின்ற சொல்லையுடையவள்;

சினத்தையுடைய மன்மதனுல் செய்யப்பெறும் சண்டை வளரு மாறும், அவனுடைய கரும்பு வில்லில் அமைந்த வண்டாகிய கயிற் றின் ஓசை எத்திசையிலும் செல்லக்கூடிய வகையில் வளருமாறும், காண்பவர்களுக் கெல்லாம் பெரிய ஆசை என்ற வேர் வளருமாறும் யாவற்றிலும் மேலாந் தன்மையுடையதாய் எழுந்து வளரும் விரும்பத்தக்க முலையிணையுடையவள்;

மன்மதனுக்குத் தேரெனப்படும் பொதிய மலையிலிருந்து தோன்றும் தென்றற் காற்று வளைந்து வரவும், மன்மதனின் கரும்பு வில்லேந்திய வன்மையான கைகள் அம்பு தொடுத்தற்கென வளை யவும், எதிர்ப்பட்ட ஆடவர்களையெல்லாம் காமமயக்கம் வளையவும் தான் சென்று வளைந்திருக்கின்ற ஒளியமைந்த இடுப்பை யுடையவள்;

மேன்மேல் பெருகிவரும் காதலானது உள்ளத்திடத்தே ஊற்றுப் போல் பெருகவும், அடையவேண்டும் என்ற ஆசையானது உள்ளத்தே அமைந்து ஊற்ருகவே பெருகவும், காமம் கொண்ட

ஆடவர்களின் வாய்நீர் உண்டாகவும், நெருங்கிச் சுரக்கும் இன்பநீர் மிகுதியும் ஊறுகின்ற அல்குலை யுடையவள்;

துள்ளிப் பாயும் கண்கள் சுழல, அதனால் காண்போர் மனமெல்லாம் சுழல, மனத்தூய்மையுடைய முனிவர்களுக்கும் காம இச்சையானது தலையைச் சுற்றுமாறு செய்ய, உடையால் சுற்றப்பட்டிருக்கும் துடையினையுடையவள்;

வெற்றியே கொள்ளும் மன்மதன் தேராகிய தென்றல் நடக்க, மூன்றுலகத்தும் அவன் செங்கோலாட்சி நடக்க, எல்லாவிடங்களிலும் அவனால் செய்யப் பெறும் போர் நடக்கத் தான் நடக்கும் அழகிய கால்களையுடையவள்;

### அருஞ்சொற் பொருள்

இரதி – மன்மதனின் மனைவி. மொய் - வலிமை. சாபம் - கொடுக்கப்பெற்றவர்களுக்குக் கேடு விளைவிக்கும் சொல். மால் - மயக்கம். சோபம் - கலக்கம். மலயக்கால் - பொதியமலைக் காற்று; தென்றல். நுசுப்பு - இடை. அள்ளூறு - நெருங்கிச் சுரத்தல். பொன்னடி - அழகிய கால்,

### விளக்கவுரை

ஓரறிவுயிர் முதலாக ஆறறிவுயிர் ஈறாக உள்ள அறிவுள்ள உயிர் இனம் முழுமைக்கும் காதலை விளைப்பதற்காகப் போர் செய்கின்றானாதலின் "மதிஆர் இனத்தைப் பொருவேள்" என்றார்.

அகிற் புகையூட்டிச் சிக்குநீக்கிச் சீவி முடிக்கப் பெற்ற கூந்தலை ஆடவர்களின் உயிரை வாங்குதற்காகவே முடிக்கப் பெற்றிருக்கிறது என்று கூறினார். வன்மையாகச் செயலாற்றும் காமுகர்களின் உயிர் இயமன் கண்ணுக்குப் படுமாறு பார்வை செலுத்துவாள் என்றார். எனவே மடந்தையின் பார்வையில் பட்ட . காமுகர் இறப்பர் என்பது கருத்தாம். மன்மதனின் கைசிவத்தல் மலரம்பு களை அடிக்கடி எய்யவேண்டி யிருப்பதால். அவன் கண் சிவத்தல் கோபத்தால். ஆடவர்களின் மெய்சிவத்தல் காம மயக்கத்தால். இவைகளெல்லாம் இவ்வாறு சிவப்பேறக் காரணம் மடந்தையின் இதழ்ச்சிவப்பே என்றார். இதழ் சிவப்பாக இருப்பதே அடிப்படைக் காரணம். மடந்தையின் பேச்சு தவமுனிவர்களின் சாபச் சொல்லையும் பயனிழக்கச் செய்கிறது; அவர்களுடைய கட்டுப்பாடான தவத்தைப் பறந்தோடச் செய்கிறது; அவர்களுக்கு மயக்கத்தோடு கலக்கத்தையும் கொள்ளுமாறு செய்கிறது.

காதல் ஒரு பொருளின்மேல் இயல்பாயெழும் உயர்ந்த அன்பு. ஆசை அதனின் வேறுயது; அப்பொருளை அடைய வேண்டும் என்றெழும் பற்றுள்ளம். பொருளைப் பார்த்தவுடன் முதல்நிலையில் எழுவது காதல். பின்னர்த் தோன்றுவதுதான் ஆசை. இதையே

ஆசிரியரும், "மேல்வரும் அன்பு உள்ளூற ஆசை கிடந்து ஊற்று ஊற" எனப் பிரித்தோதினர்

## மடந்தையும் விறலியும்

293. ... ... ... —சீர்நடக்கும்

294. தெள்நிலா முற்றத்திற் சென்றிருப்ப ஓர்விறலி
எண்இலா நேயத்து எதிர்நின்று - கண்இலான்

295. கண்பெற்றது என்ன மதன் கைகுவிக்கும் தெய்வமே
மண்பெற்ற செல்வ மடந்தையே - பெண்பெற்ற

296. பேறே எனவாழ்த்தப் பெண்ணரசி கொண்டாடி
வீறுஆர் இசையின் விறலியே - ஆறுஆர்

297. திருக்கங்கை வார்சடையார் தென்பாண்டி நாட்டில்
இருக்கும் தலங்கள் பாடு என்ன,

### *பொழிப்புரை*

(இத்தகைய மடந்தை) சிறப்பு மிகுதிப்படுகின்ற தெளிந்த நிலா முற்றத்தில் (ஒருநாள்) போய் அமர்ந்து இருக்க அப்போது ஒரு பாடினி இவ்வளவு என்று அளவிட்டுக் கூற முடியாத அன் போடு அம்மடந்தையின் எதிரில் சென்று நின்று, குருடன் கண் பெற்றமைபோல (உளமகிழ்ந்து) மன்மதனும் கைகூப்பி வணங்கக் கூடிய அழகுத் தெய்வமே! மண்ணுலகமானது பெற்றெடுத்த செல்வமடந்தை யெனப்படும் திருமகளே! பெண்மைக் குலமே தவம் செய்து பெற்ற செல்வமே! என்று வாழ்த்தினளாக.

மங்கையர்க்கு அரசியாகிய மடந்தை அப்பாடினியைப் புகழ்ந்து பேசி, பிறவொன்றிற்கு இல்லாத பெருமை அமைந்த இசையின் கண் நிலைபெற்ற வெற்றித் தன்மையை யுடையவளே! அற்று அற்றுச் செல்லும் ஒழுங்குப்பாட்டைப் பொருந்திய அழகிய கங்கையை அணிந்த நீண்ட சடையையுடைய இறைவன் தென்பாண்டி நாட்டிலே எழுந்தருளி யிருக்கும் தலங்களை அதன் பெருமையோடு பாடுக என்று கூற,

### *அருஞ்சொற் பொருள்*

விறலி – விறல்படப் பாடி ஆடுபவள். நேயம் - அன்பு. செல்வமடந்தை- திருமகள். வீறு – வேறு ஒன்றற்கு இல்லாத பெருமை. ஆறு – அற்று அற்று ஒழுக்காகச் செல்லும் ஒழுங்கு முறை.

## விறலி தென்பாண்டி நாட்டுத் தலங்களைப் பாடுதல்

297. ... ... ... —பெருக்கம்

298. திகழ்பூ வுலகிற் சிவலோகம் என்னப்
பகர்கூடல் ஆலவாய் பாடி - மிகமால்

299. பிறிக்கும் அடியார் பிறவிக் கருவேர்
பறிக்கும் புனவாயில் பாடி - குறிக்கும் மால்

300. சங்கம் திகிரிதணந்து மழுமான் எடுக்கும்
நங்கள் குற்ருலநகர் பாடி - தங்கு ஒருபால்

301. பெண்மைத் திருக்கோலப் பெம்மான் இனிதுறையும்
உண்மைத் திருவாப்பனூர் பாடி - திண்மையற

302. வாட்டும் பிறவிவழி மறித்து ஞானவழி
காட்டும் திருவேடகம் பாடி - நாட்டின்

303. விரவு திருவெண்ணீற்றின் மெய்யன்பர் கூட்டம்
பரவு திருநெல்வேலி பாடி - புரவுமுனை

304. சேர்திரு இராகவன் முன்சேனையுடன் கண்டு தொழச்
சார்திரு இராமேச்சுரம் பாடி - ஏர்தருபொன்

305. கொம்பர்அருள் தான்ஐஒரு கூறுஇலங்கும் கோலத்து
நம்பரன் ஆடானை நகர்பாடி - வம்பர்

306. புரம்குன்ற வாள்நகை செய் பொன்மலை வில்செல்வன்
பரம்குன்ற மாநகர் பாடி - உரம்கொள்

307. விடைக்குஞ்சரம் உகைப்பார் வீற்றிருக்கக் காணி
படைக்கும் திருச்சுழியல் பாடி - கிடைக்கும் அகத்து

308. ஆசை உடைச் சிற்சபையில் ஐயன் திருச்சிலம்பின்
ஓசையுடைத் திருப்புத்தூர் பாடி - தேசுநலம்

309. தாங்குதிருத் தேர்வீதிச் சைவஆகமம் வேதம்
ஓங்கு திருக்கானப்பேர் ஊர்பாடி - வாங்கும்

310. தன்இக்கு ஒடும் குன்ற மதன்தன்னை எரித்தார்
பனிக்கொடும் குன்றநகர் பாடி - தொனிக்குமறைப்

311. பாவணம் பாடும் பரமன் திருக்கோயில்
பூவணம் பாடும் பொழுதிலே.

*பொழிப்புரை*

செல்வம் தன் முழுப் பெருமையோடு விளங்கும் இப்பூவுல கத்தில் உள்ள சிவலோகமாகும் இது என்று எல்லோரும் கூறும் சிறப்பு அமைந்த நான்மாடக்கூடல், திருவாலவாய் என்றெல்லாம் கூறப்பெறுகின்ற மதுரையைப் பாடி,

மேன்மேல் வளரும் தன்மையனவாகிய அவ்வாசைகளை நீக்கும் அடியவர்களின் பிறப்பெடுப்பதற்குக் காரணமாக இருக்கின்ற இருவினையெனப்படும் வேரை அடியோடு பிடுங்கி எறிந்துவிடும் தன்மையுடையதாகிய 'திருப்புனவாசல்' என்னும் தலத்தைப் பாடி,

காரியங்களைச் செம்மையாய் மேற்கொண்டு முடித்துக் காப்பாற் றும் கடவுளாம் திருமால், சங்கு சக்கரங்களை நீக்கி மழுவாயுதத் தையும் மானையும் மேற்கொண்ட எங்கள் திருக்குற்றுலத் தலத்தைப் பாடி,

பொருந்திய ஒருபக்கம் பெண்மையாம் உமையம்மையின் அழகு வடிவமாயிருக்கும் இறைவன் இனிமையாய் எழுந்தருளி யிருக்கும் தலமும் அழிவிலாது என்றும் நிலைபெற்று விளங்கும் தலமும் ஆகிய 'திருவாப்பனூர்' என்ற தலத்தைப்பாடி,

மனவுறுதியெல்லாம் அழிந்தோடுமாறு துன்பப்படுத்துகின்ற பிறவி நோய்க்குக் கொண்டு போகும் வழியில் செல்லாது உயிர் களைத் தடுத்து அவ்வுயிர்களுக்கு இறைவனை அறியும் ஞான வழி யைக் காட்டி இறைவனை அடையச் செய்யும் 'திருவேடகம்' என்ற தலத்தைப் பாடி,

இதன் உண்மையான தன்மை இதுதான் என்று ஆராய்ந்து நிலைநாட்ட விரும்பினால், இறைவனோடு இரண்டறக் கலக்கும் தன்மையை அளிப்பதாகிய திருவெண்ணீற்றின்கண் நிலைபெற்ற உண்மை அன்பு கொண்ட அடியவர் தொகையானது என்றும் வணங்கும் திருநெல்வேலித் தலத்தைப் பாடி,

வளம் பல தந்து மக்களைக் காக்கும் நிலத்தின் முனையை அடைந்த இரகு வம்சத் தோன்றலாகிய செல்வம் நிறை இராகவன், முன்னொரு காலத்தில் தன்னுடைய குரங்குச் சேனையோடு கண்டு வணங்குதற்காக அடைந்த அழகிய 'இராமேச்சுரம்' என்னும் தலத்தைப் பாடி,

அழகு தருகின்ற பொற்கொடிபோல் தோற்றமளிக்கும் இறைவி தானே ஒரு பகுதியாய் விளங்கும் தன்மையை ஏற்றுக் கொண்டிருக் கும் நம்முடைய மேலாம் இறைவன் எழுந்தருளியிருக்கும் 'திருவாடானை' என்ற தலத்தைப்பாடி,

புதியனவாய் வியப்புக்குரிய பல செயல் செய்து யாவரையும் துன்புறுத்தும் அரக்கர் மூவர் வாழ்ந்த திரிபுரம் அழிந்து ஒழியும் வகையில் ஒளி பொருந்திய பற்கள் வெளிப்படுமாறு சிரித்தவனாகிய மகாமேரு மலையை வில்லாகக் கொண்ட கருணைச் செல்வன் எழுந்தருளி யிருப்பதும், தன்னை அடைந்த உயிர்களுக்கு மேன்மையைத் தருவதும் ஆகிய மலையாம் பெருமை வாய்ந்த நகரமாகிய திருப்பரங்குன்றம் என்னும் தலத்தைப் பாடி,

வன்மையைக் கொண்டிருக்கிற காளையாகிய யானையை ஏறிச் செலுத்தும் இறைவன் எழுந்தருளியிருப்பதற்கு உரிமையை மேற்கொண்டிருக்கிற 'திருச்சுழி நகர்' என்ற தலத்தைப் பாடி,

பிறவிப் பிணியில் சாய்க்கும் உள்ளத்து ஆசையை உடைத்து அறிவொளியைப் பரப்பும் அறிவுச் சபையாம் பொற்சபையில் ஆனந்தக் கூத்தாடும் இறைவனின் அழகிய சிலம்பொலியைத் தன்னிடத்தே நாள்தோறும் வந்து தோன்றுமாறு செய்த சிறப்புடைய 'திருப்புத்தூர்' என்ற தலத்தைப் பாடி,

ஒளியின் அழகு நிலைபெற்றுத் தங்கியிருக்கும் அழகிய தேரோடும் தெருவிலே சிவமதத்து ஆகம விதிமுறை தவறாது வாழ்பவர்களும் வேதமுறை தவறாது வாழ்பவர்களும் நெறியால் உயர்ந்து விளங்கும் 'திருக்கானப்பேர்' என்ற தலத்தைப்பாடி,

விளைக்கும் தன் வில்லாகிய கரும்போடும் வன்மையும் அழிந்து போகுமாறு மன்மதன் தன்னை எரியூட்டி அழித்தவராகிய இறைவன் எழுந்தருளியிருக்கும் குளிர்ச்சி பொருந்திய 'கொடுங்குன்றம்' எனப் பெயரமைந்த 'பிரான்மலை' என்ற தலத்தைப் பாடி,

ஒலியால் சிறப்புப்பெறும் வேதங்களையும், நாயன்மார்கள் திருவாய் மலர்ந்தருளிய தேவார திருவாசகப் பாக்களின் வண்ணம் என்ற முறைகளையும் பாடும் செயல் எப்போதும் நடந்துகொண்டிருக்கிற சிறப்புடையதும், யாவருக்கும் மேலாம் இறைவன் திருக்கோயில் கொண்டெழுந்தருளியிருக்கும் சிறப்புடையதும் ஆகிய 'திருப் பூவணத்' தலச் சிறப்புக்களை யெல்லாம் பாடிக்கொண்டிருக்கும் சமயத்திலே,

## அருஞ்சொற் பொருள்

பெருக்கம் – செல்வம். மிகு+அ+மால்—பெருகிவளர்கின்ற அந்த ஆசை. பிறிக்கும் – பிரிக்கும்; நீக்கும். தணந்து - நீக்கி. ஞானவழி - அறிவு வழி. நாட்டின் - ஆராய்ந்து நிலை நாட்டினால். விரவுதல் - கலத்தல். பரவு-காத்தல்; இங்கே நிலத்தைக் குறித்தது. ஐ – அழகு. பரன் - மேலானவன். வம்பர் - புதியர் ; புதுமைச் செயல் செய்வோர். பொன்மலை - மேரு. உரம் - வலிமை. விடைக்குஞ்சரம் - காளையாகிய யானை. உகைத்தல் - செலுத்துதல். காணி- உரிமை. கிடைக்கும் – சாயவைக்கும். சிற்சபை - சித்சபை ; அறிவுச்சபை.

தேசு - ஒளி. இக்கு - கரும்பு. பனி - குளிர்ச்சி. தொனிக்கும் — ஒலியால் சிறப்புப் பெறும்.

### *விளக்கவுரை*

மடந்தையின் விருப்பப்படித் தென்பாண்டி நாட்டுத் தலங்களின் சிறப்புக்களைப் பாட முற்பட்ட விறலி, மதுரை, திருப்புவன வாயில், குற்றாலநகர், திருவாப்பனூர், திருவேடகம், திருநெல்வேலி, இராமேச்சுரம், திருவாடானை, திருப்பரங்குன்றம், திருச்சுழிநகர், திருப்புத்தூர், திருக்கானப்பேர், பிரான்மலை, திருப்பூவணம் ஆகிய பதினான்கு தலங்களின் சிறப்புக்களைப் பாடினாள்.

பெருக்கம் - செல்வம்; பொருட் செல்வம். பொருட் செல்வம் முழுப் பெருமையோடு விளங்கும் இடம் இப்பூவுலகம். இதனை வள்ளுவர் 'பொருளிலார்க்கு இவ்வுலகம் இல்லாகியாங்கு' எனக் குறித்தார். 'பூலோக சிவலோகம்' எனக் குறிப்பர் மதுரையை ஆன்றோர். மதுரைக்கு நான்மாடக்கூடல், திருவாலவாய் முதலிய பெயர்கள் உண்டு. இவற்றின் வரலாற்று விரிவு திருவிளையாடற் புராணத்துட் காண்க.

மால்-மேல்மேல் மிகுந்தன்மையுடையது ஆதலின்மிகு,அ, மால் எனக் குறித்தார். குறிக்கொண்டு காப்பாற்றும் தன்மையுடைய திருமாலைக் 'குறிக்கும் மால்' என்றார்.

திருவெண்ணீறு இறைவனோடு இரண்டறக் கலக்கவைக்கும் நிலையை அளிப்பது என்பதை திருநீற்றுப் பதிகத்துத் தேவாரத்தால் உணரலாம்.

புரவுமுனை - மக்களுக்கு வளம்பல தந்து அவர்களைக் காப்பாற்றும் நிலத்தின் இறுதிப்பகுதி. அது தனுஷ்கோடியைக் குறித்தது.

காணி படைத்தல் - உரிமை நிலமாகத் தம்மை ஆக்கிக் கொள்ளுதல் என்பது பொருள்.

## பூவணேசன் உலாவருதல்

311. ... ... ... —நாஅணங்கு

312. நாதன் புதல்வர் நவில்நான்மறை பாடக்
கீத இசை கின்னரர் பாட - கோது இலா

313. சூழ் இசை வீணைகொடு தும்புரு நாரதர்தாம்
ஏழ் இசை இராக இயல்பாட - வாழ்முனிவர்

314. பன்னியர் பல்லாண்டு பாடத் தருநாட்டுக்
கன்னியர் தேவகானம் பாட - இன்னிசையால்

315. தெய்வப் புலமைத் திருமுதலி மூவர்
சைவச் சுருதித்தமிழ் பாட - உய்விக்கும்

316. சேண் உலவு தெய்வத் திருநீலகண்ட யாழ்ப்
பாணர் தமிழ்மாலைப் பண்பாட - பூண் அரக்கன்

317. கைநரம்பின் பாடக் கருணைபுரி வள்ளலார்
மெய்நிரம்பு மாமறுகில் மேவுதலும்,

*பொழிப்புரை*

நாக்கின் தெய்வமாகிய கலைமகளின் தலைவனும் பிரமனின் மக்களாய் அவன் வழிவந்தோர், பலகால் சொல்லிச் சொல்லிப் பயிற்சி பெறும் இருக்கு முதலாகிய நான்கு வேதங்களைப் பாடி வர,

கின்னரர்கள் வாச்சியங்களோடு ஒன்றுபடும் இசையைப் பாடி வர,

தும்புரு, நாரதர் ஆகிய இருவரும் பல்வகை நரம்புகள் சேர்ந்து இயங்கிக் கூட்டு இசையை எழுப்பக்கூடிய வீணையைக் கையிற் கொண்டு, ஏழு பண்கள், அவற்றில் அமைந்த இராகங்கள் ஆகிய வற்றை இலக்கண முறைப்படிப் பாடிவர,

என்றும் புகழுடம்போடு வாழ்கின்ற ஏழு முனிபத்தினியர்கள் 'இறைவன் பல்லாண்டு வாழ்க' என்று பல்லாண்டு பாடிவர,

கற்பக நாடாகிய தேவலோகத்துப் பெண்கள் தேவர்நாட்டு இசையைப் பாடி வர,

தெய்வப் புலமை வாய்ந்தவரும் வீடுஎன்னும் செல்வத்தை யாவ ருக்கும் அளிக்கும் முதன்மைத் தன்மை வாய்ந்தவரும் ஆகிய சம்பந்தர், நாவரசர் சுந்தரர் என்ற மூவரும் சிவனை உள்ளுறைப் பொருளாகக் கொண்ட மறையென்னும் தேவாரத் தமிழை இனிய இசையால் பாடி வர,

தன்னை அடைந்தவர்களை என்றும் வாழவைக்கும் சேய்மைத் தாகிய வானுலகத்தில் வாழ்ந்து கொண்டிருக்கிறவரும், தெய்வத் தன்மை வாய்ந்தவரும் ஆகிய திருநீலகண்ட யாழ்ப்பணர் தமிழ்த் தேவாரங்களாகிய வரிசையைப் பண்ணோடு கலந்து பாடிவர,

அன்பைப் பூண்டுள்ள அரக்கனுன இராவணன் கைநரம்பு களையே யாழ் நரம்பாக அமைத்துச் செய்யப்பட்ட யாழினால் சாம வேத இசையைப் பாடிவர,

அனைவருக்கும் அருள் புரிகின்ற கொடையிற் சிறந்த வள்ள லாம் பூவணேசன் மெய்மையன்பு வாய்ந்த அடியவர்கள் நிறைந்து

இருக்கின்ற சிறந்த தெருவிலே உலா வருதலை மேற்கொண்டு எழுந்தருளி வருதலும்.

### அருஞ்சொற் பொருள்

நா அணங்கு - நாவரசி ; கலைமகள். பன்னியர் – பத்தினியர். சுருதி - வேதம். சேண் - தூரம்; வானுலகு. மெய் - உண்மை; உண்மை அன்பு; அடியவர். மறுகு - தெரு.

### விளக்கவுரை

நாவின் தெய்வம் கலைமகள். அவள் நாதன் பிரமன். அவன் புதல்வர் பிருகு முதலிய முனிவர்கள். அவர்கள் இருக்கு, யசுர், சாம, அதர்வமென்ற நான்கு வேதங்களையும் ஓதிவந்தனர் என்ப தாம். அல்லது பிரமன் வழி வந்தவர்களாகிய பிராமணர்கள் வேதங்களை ஓதி வந்தனர் என்றும் கூறலாம். வேதம் எழுதிப் படிக்காமல் சொல்லிச் சொல்லியே படிக்க வேண்டுவதொன்றாத லின் 'நவில் நான்மறை' என்றார்.

தும்புரு, நாரதர் ஆகிய இருவரும் வீணையை வைத்துக் கொண்டு குரல், துத்தம், கைக்கிளை, உழை, இளி, விளரி, தாரம் ஆகிய ஏழிசைகளையும். அவற்றிலிருந்து தோன்றும் எழு வகைப் பாலைப் பண்களையும் பாடினார்கள்,

பல்லாண்டு கூறுதல் என்பது பல ஆண்டுகள் வாழ்வீராக என்று ஆசி கூறுதல். அது இறக்கும் நிலையுடையவர் கூறுவது முறையாகாது. ஆதலின் என்றும் இறவாது புகழுடம்பு பெற்று நிலையாக வாழும் முனிபத்தினியர் கூறினர் என்ப. முனிபத்தினியர் எழுவரின் பெயர்களை மேல் 121-ஆவது கண்ணியின் விளக்கத்திற் காண்க. தரு-கற்பகத்தரு.

இன்னிசையால் நாளும் தமிழ் பரப்பும் ஞானசம்பந்தன் முத லாகிய மூவர்களும் தேவாரப் பாக்களைத் தமிழிசையிற் கலந்து பாடி வந்தார்கள். நோய் தீர்ப்பதற்குரிய மருந்தை உண்ணச் செய்கின்ற மருத்துவர் அதை இனிமைச் சுவையுள்ள அனுபானங்களோடு கலந்து கொடுத்தலைப் போல ஞானானந்தப் பயன்களை உணர்த்தும் கருத்துக்களை இன்னிசையிற் கலந்து மக்களுக்கு ஊட்டியவர்கள் சம்பந்தர் முதலிய மூவர்கள்.

முதலி என்பதற்கு முதன்மையுடையவர். திரு-செல்வம். வீட்டின்பம் என்ற செல்வத்திற்கு முதன்மையுடையவர் என்றே குறித்தார். இம்மூவரும் மக்களை நேராக வீட்டுலகத்திற்கு அனுப் பும் வல்லமை யுடையவர் என்பதைத் 'திருமுதலி' எனக் குறித்தார். சம்பந்தர் தன் மணத்திற்கு வந்த பலர்க்கும் முத்தி வழங்கியதும், நாவரசர் தன் பெயரைப் புணையாகப் பற்றிய அப்பூதி அடிகளுக்குத்

துன்பில் பதம் வழங்கியதும், சுந்தரர் உடன்வந்த சேரமான் பெருமாளுக்கு முத்தியருளச் செய்ததும் உலகமறிந்த உண்மையன்றோ! சுருதி – இராகம்; பண்; இசை. எனவே சுருதித் தமிழ் என்பதற்கு இசைத் தமிழ் எனக் கொண்டு, சிவனைப்பற்றிய இசைத்தமிழ்ப் பாடல்களாகிய தேவாரங்களைப் பாடிவர என்றும் கொள்ளலாம்.

திருநீலகண்ட யாழ்ப்பாணர் எப்போதும் சம்பந்தருடன் தல யாத்திரை சென்று அவர் பாடும் தேவாரங்களை யாழிலமைத்துப் பாடினர் என்பதை உட்கொண்டு யாழ்ப்பாணர் தமிழ்மாலைப் பண் பாட என்றார்.

இராவணன் கைலையைத் தூக்க முயல்வதைக் கண்ட இறைவன் தன்காற் பெருவிரலால் அழுத்தவே நசுக்குண்ணும் நிலையில் இருந்த இராவணன் தன்தலை ஒன்றை ஒடித்துக் கைகளில் உள்ள நரம்புகளை எடுத்துப் பிணைத்து யாழாக அமைத்துச் சாமகீதம் பாடினான் என்பது வரலாறு. அதையே 'பூண் அரக்கன் கைநரம்பின் பாட' என்றார்.

இவர்களெல்லாம் பாடி உடன்வர இறைவன் அனைவர்க்கும் அருளை வழங்கிக் கொண்டு தேர்ப்பவனி வந்தான் எனக் கூறலாம். அன்றி இவர்களெல்லாம் ஒவ்வோர் அமயத்தில் பாடிச் சிறப்புப் பெற வேண்டும் எனக் கருதி அருள் நோக்கம் வழங்கிய வள்ளல் இப்பூவணேசன் எனவும் கூறலாம். இவ்வாறு கொண்டால் பாட என வந்த செயவென்னும் வாய்பாட்டு எச்சங்கள் காரியப் பொருளில் வந்த எச்சங்கள். அன்றிக் காரணப் பொருளில் வந்த எச்சங்களாகவே கொண்டு 'மழை பெய்ய நெல் விளைந்தது' என்றாற்போல் இவர்கள் பாடிய காரணத்தால் கருணை நோக்கு வழங்கிய இறைவன் என்றும் கொள்ளலாம்.

மெய் நிரம்பு மறுகு - மெய்மை நிலைபெற்ற தெரு. மெய்மை என்பது மெய்மை அன்பைக் குறித்து இறைவன்பால் மெய்மை அன்புகொண்ட அடியவர்களைக் குறித்தது. இருமடியாகு பெயர்.

### மடந்தையின் செயலும் இறைவன் செலவும்

317. ... ... ... —சொல் நிரம்பு

318. பண் ஆர் இசைவிறலி பாடும் தலம் எல்லாம்
கண்ணாரக் கண்ட களிகொண்டாள் - பெண்ணார்

319. அமுதம் எதிர்சென்று செம்பொன் ஆலத்தி காட்டிக்
குமுதமலர் மலர்வுகொண்டாள் - விமலரே

320. என்றாள் உமக்கு அபயம் என்றாள் கண்ணீர்ததும்ப
நின்றாள் நின்றாள்தனக்கு நீராளும் - குன்றாளும்

321. மின்னிறத்த கொன்றைஅம்தார் ஈந்தனரோ என்று அயிர்க்கப்
பொன்னிறத்தை ஈந்து அரனுர் போயினுர் - பின் ஒருத்தன்

322. போடும் கணை நுழைந்த புண்வழியில் தென்றல்
ஊடாடும் துயர்உழந்தாள்.

*பொழிப்புரை*

விறலி பாடுவதைக் கேட்டுப் பரவசமடைந்து கொண்டிருந்த மடந்தை பூவணேசன் உலாவருதலை அறிந்து எழுந்து சென்று கண்டாள்.

சொல்லால் முழுப்பயனும் நிரம்பப்பெறுகின்ற பண்கள் அமையப் பெற்ற இசையோடு பாடினியானவள் இதுவரை பாடிவந்த சிறப்பமைந்த தலங்கள் எல்லாவற்றையும் நேரில் சென்று கண்ணின் அவா அமைதி அடைகின்ற அளவில் கண்டது போன்ற மகிழ்வைக் கொண்டாள்.

பெண்மைத் தன்மை பொருந்திய அமுதம் போன்றவளாகிய மடந்தை திருத்தேரின் எதிரே சென்று, செம்பொன் தட்டினுல் ஆலத்தி எடுத்து, அல்லி மலர் ஆகிய உதடுகள் சிறிதே மலர்ச்சி பெறுதலை மேற்கொண்டாள்.

மலம் அற்றவரே! என்றுள். உமக்கு நான் அபயப் பொருள் என்று கூறினுள். கண்களில் நீர் ததும்ப நின்றுள்.

அவ்வாறு நின்ற மடந்தைக்கு நீராட்டி ஆகிய கங்கையும் மலையாட்டியாகிய உமையும் மின்னலைப் போன்ற நிறத்தை உடையனவாகிய கொன்றையாலாகிய அழகிய மாலையை இறைவன் கொடுத்து விட்டாரோ என்று யாவரும் ஐயம் கொள்ளுமாறு பொன்போலிருக்கும் பசலை நிறத்தைப் பூவணேசரும் அவளுக்குக் கொடுத்துச்சென்றுர்.

அதன் பிறகு ஒரு ஆளாகிய மன்மதன் எறிந்த அம்புகள் நுழைந்ததனுல் உண்டாகிய புண்களின் வழியாகத் தென்றற் காற்றுனது நடுநடுவே நுழைவதால் உண்டாகும் துயரத்தில் சிக்கித் தவித்தாள்.

*அருஞ்சொற் பொருள்*

விமலர் - மலம் அற்றவர். நீராள் – கங்கை. குன்றுள் - பார்வதி. அயிர்க்க- ஐயம் கொள்ள; சந்தேகிக்க. பொன்னிறம் - பசலை.

*விளக்கவுரை*

இசை இரண்டு வகைப்படும். ஒன்று மொழிப்பாட்டுக் கலக்கப் பெருத வெற்று இசை; வெறும் சுர வரிசை. இது தாளமுறை

ஒன்றுமட்டுமே அமைந்த சங்கீதம் எனப்படும். ஏனையது மொழிப் பாட்டோடு கூடிய சாகித்தியம். சாகித்தியத்தில் சொல்லின் முழுவடிவமும் பொருளுணர்ச்சியை உண்டாக்கும் முறையில் அமைந்திருக்கும் பண்ணும் கலந்திருக்கும். இதுதான் உயிர்ப் பொருள்களை முழு இன்பத்தில் ஈடுபடுத்துவது. இச்சாகித்திய நிலைப் பாட்டுக்களைத்தான் - சொல்லால் முழுப்பயனும் நிரம்பப் பெறுகிற பண்கள் அமையப்பெற்ற பாட்டுக்களைத்தான் விறலி பாடினுள் என்பதைச் 'சொல் நிரம்பு பண் ஆர் இசை' எனக் குறித்தார்.

கண்ணுரக் காணுதல் என்பது இனி எப்பொருளையும் பார்க்க வேண்டிய அவசியம் இல்லை என்று கண்ணே அமைதி அடைகின்ற முறையில் காணுதல் ஆம்.

மதுரை முதல் திருப்பூவணம் வரை உள்ள எல்லாத் தலங்களை யும் சென்று கண்டு ஆங்குள்ள இறைவர்களையெல்லாம் வணங்கிப் பெறவேண்டிய நிலையெல்லாம் இவ்வொருதலத்து இறைவனைக் கண்டு வணங்குவதன் மூலமே பெற்றுவிட்டாள். எனவே கூறப் பட்ட பதின்மூன்று தலங்களைக் கண்டு அடையும் பேறுகளையெல் லாம் இவ்வொருதலத்தைக் கண்டாலே பெற்று விடலாம் என்று அமைத்த நயம் சிறப்பாக உணரும் தன்மையுடையது.

அமுதம் பிறப்பு இறப்புக்களைப் போக்கி, நரை திரை மூப்பை யும் தவிர்த்து இன்ப மூட்டுவது. காணும் ஆடவர்க்கும் கருணைக் கண் காட்டுதல் மூலம் அவர் சாவைத் தடுத்து, வாழ்வையும் வள மைப் படுத்துதலால் இம்மடந்தையும் அமுதம் எனப்பட்டாள். ஆயின் அமுதத்தினும் ஒருவகையில் இவள் உயர்ந்து விட்டாள் என்பதாம். இவளை வெறும் அமுதம் எனக் கூருது 'பெண்மை அமைந்த அமுதம்' எனக் குறித்தார். பெண்மை என்பது கண்டா ரால் விரும்பப் பெறும் அமைதித் தன்மை என்பது பொருளாயினும் அச்சம், மடம், நாணம், பயிர்ப்பு ஆகிய நான்கு பண்புகளுக்கும் சேர்ந்த பொதுப் பெயர் பெண்மை எனக் கொள்ளலாம். இந் நான்கு பண்புகளுமே பெண்மையைச் சிறப்பிக்கிறது. அமுதத்தை விரும்பியவர்கள் எடுத்து விழுங்கலாம்; இன்பம் தரும்; சாவை நீக்கும். அதிகமானல் தெவிட்டவும் செய்யும். ஆனல் பெண்மை சேர்ந்த அமுதமோ விரும்புவர் மனநிலைக்குத் தகப் பெண்மைக் குணத்தால் அவர்களைத் தன்வயமாக்கி, அவர்களுக்கு வேண்டிய முறையில் சிறுகச் சிறுக அடிக்கடி தந்து இன்பம் விளைவிப்பதாத லின் மடந்தையைப் "பெண்ணுர் அமுதம்" என்ருர்.

உயர்ந்தோர் வருங்கால் கண்ணூறுபாடு நீங்க ஆலத்தி எடுத் தல் முறை. மடந்தையும், மணப்பெண்ணும் மாப்பிள்ளையுமாய்த் தேர்ப்பவனி வரும் இறைக் கோலத்திற்கு ஆலத்தி எடுத்தாள்.

மடந்தைப் பருவம் காமநிலையை நன்கறிந்த பருவம். அதுவே யன்றிப் பிறரறியாமல் நன்கு மறைத்து வைக்கவும் அறிந்த பருவம். அதனுல்தான் கண்டு காமம் மிக்க பொழுது செயலற்ற நிலையில் சோர்வுற்று விழாமல் எதிர் சென்று ஆலத்தி எடுக்கும் செயலில் ஈடுபடும் நிலையை அமைத்தார். ஆலத்திநீரில் இறைவடிவத்தைப் பிறர் காணுதவகையில் நன்ருகக் காணமுடிந்த நிலையினுற் புன்சிரிப் புக் கொண்டாள். புன்சிரிப்புக் கொண்டாள் என்பதைக் "குமுத மலர் மலர்வு கொண்டாள்" என்ருர்.

அபயம் என்பது பயம் இல்லாத முறையில் காத்து அமைக்கும் நிலை. பெண்மைக்கு இரக்கம் காட்டியது பெண்மை என்ற பழ மொழியை நினைத்து எல்லாரும் கங்கையும் பார்வதியும் பொன்மய மான கொன்றை மாலையைத் தந்தனர் போலும் எனக் கருதினுர்கள்.

இறைவன் நோக்கு காமத்தைத் தணிக்கும் சிறப்பு நோக்கு அல்லாத பொதுநோக்கு ஆதலின் மடந்தைக்குப் பசலை என்ற பொன்னிறம் தோன்றியது.

காதல் துன்பமுடையார்க்குத் தென்றலும் துன்பத்தை விளைவிக் கும் பொருளாதலின் தென்றல் ஊடாடும் துயர் உழந்தாள்" எனக் குறித்தார்.

# 5. அரிவை

அரிவைப் பருவம் என்பது இருபதாவது வயது முதல் இருபத் தைந்தாவது வயது முடியப் பெண்களுக்கு உளதாவதோர் பருவம். முன் கூறிய நான்கு பருவப் பெண்கள் பூவணேசன் உலாப்போகுங் கால் கண்டு காமம் கொண்டது போன்றே இவளும் பூவணேசனைக் கண்டு கொண்ட நிலையை இப்பகுதியில் கூற முற்படுகிருர்.

## அரிவையின் அழகுநிலை

[324-ஆவது கண்ணிமுதல் 333-ஆவது கண்ணிவரை பிரமன் அரிவையைப் படைத்த முறையைக் கூறுமுகத்தால் அரிவையின் எழில் நிலையைக் கூறுவது நயம் அமைந்த பகுதியாகும்]

322. ... ... ... ஆங்குஒருத்தி - சேடன்

323. பகைகொண்டு பண்டு விரித்த படம்போல்
அகல்கின்ற அல்குல் அரிவை - உகிர்கொண்டு

324. முன்ஒருகோபத்தால் முடியரிந்த சங்கரற்குப்
பின்ஒருகோபம் பெயர்த்துவரின் - அன்னவரை

325. ஏவர் தடுப்பரென எண்ணி அயன்பயந்து
தேவர் பெருமான் திருவுள்ளம் - ஆவதற்கா.

326. மின்னைத் திரட்டி மிகப்பிழிந்து சாம்புநதப்
பொன்னை உருக்கிப் புடம்இட்டுப் - பின்னை ஒன்ருய்க்

327. கூட்டிப் பிடித்துக் குழைத்து மதிநுட்பமெலாம்
காட்டித் தனித்துஇருந்து கைவருந்தப் - பூட்டிஅமுது

328. ஊறு பருவத்து ஒருபெண் உருவு ஆக்கிக்
கூறும் அழகைக் குடியேற்றி - வீறு

329. நலம்உற்ற பெண்கள் நலத்தில் தெரிந்து
திலம்அத்தனை எடுத்துச் செய்த-நிலைபெற்ற

330. பிள்ளைக் குதலைமொழிப் பெண்ணழகும் இவ்வழகுக்கு
எள்அத்தனையும் இலை என்ன - உள்ளத்தில்

331. கங்கை வெதும்ப மலைக்கன்னி கலங்கமற்ற
நங்கையர் சங்கையிலா நாண்எய்த - திங்கள்அணி

332. முக்கணனுர் மேனி முழுவதும் கண்வேண்டும்
இக்கன்னியைப் பார்க்க என்றுரைக்க - அக்கணமே

333. வண்ணமலர் வேளும் வாகை தரிக்களங்கள்
கண்ணுதல்முன் விட்டனைய காட்சியாள்,

*பொழிப்புரை*

அத் திருப்பூவணத்து நகரிலேயே அடுத்த தெருவில் இருப்ப வள் ஒருத்தி; அவள் முன்னொரு காலத்தில் ஆதிசேடன் என்ற பாம்புகளுக்குத் தலைவன் பகைமை உணர்வு கொண்டு விரித்த படத்தைப் போல அகல்கின்ற அல்குலினையுடைய அரிவைப் பருவத்தாள்.

பிரமனுனவன் (325) முன்னொரு காலத்தில் தன்மேல் வந்த சினமொன்றன் காரணமாக நகங்களைக்கொண்டு தன் தலைகளுள் ஒன்றைக் கிள்ளியெறிந்த சிவனுக்கு மறுபடியும் ஏதேனும் கோபம் மீண்டு வருமேயானுல் அவரை யாவர் தடுப்பர்? என்று நினைத்து அச்சங்கொண்டு தேவர்களுக்கு எல்லாம் தலைவனுக இருக்கின்ற அச்சங்காரனின் திருவுள்ளம் பற்றுக் கொள்ளுவதற்காக,

மின்னலை யெல்லாம் ஒன்ருகச் சேர்த்துக் கட்டி நன்ருகப் பிழிந்து தனியே கோது நீக்கி எடுத்துக்கொண்டு நாவற்பழம் போன்றிருப்பதாகிய உலோகத்தை உருகவைத்து, குற்றங்கள் இருப் பின் நீங்குவதற்காகப் புடம் வைத்துச் சிறந்ததாக்கி, குற்றம் நீங்கிய

சாம்பூநதப் பொன்னைக் கோது நீக்கிய மின்னல் பிழிவுடன்சேர்த்து ஒன்ருக்கி அமைத்து, நன்ருகக் குழைத்து, தனது நுண்ணிய அறிவை யெல்லாம் பயன்படுத்தி, தனியே ஓரிடத்து அமர்ந்து,

கைகளெல்லாம் சோர்வு கொண்டு வருந்தும் முறையில் ஒவ்வொரு அவயங்களையும் செய்து செய்து ஒன்ருக்கி, இன்பம் மேன்மேல் ஊற்றெடுக்கின்ற பருவத்தையுடைய ஒரு பெண்ணின் உருவமாகச் செய்து எல்லாராலும் புகழ்ந்து பேசப்பெறுகின்ற அழகையெல்லாம் அங்கேயே குடியிருக்குமாறு செய்து,

பிறிது ஒரு பொருளுக்கு இல்லாத பெருமையையும், அச்சம் மடம் நாணம் பயிர்ப்பு ஆகிய நன்மையையும் மிகுதியும் பொருந்திய பெண்களின் பண்புகள் எல்லாவற்றிலேயும் ஆராய்ந்து பார்த்து எள் அத்தனை எடுத்து அமைத்துச் செய்யப்பெற்ற நிலை அமைந்த சிறுபிள்ளையாகிய மழலை மொழி பேசும் பெண்ணின் அழகும், இப்போது பிரமனுல் செய்யப் பெற்ற பருவம் வாய்ந்த பெண்ணின் அழகை நோக்க எள் அத்தனை அளவுக்குக்கூட இல்லை என்று கூறுமாறு,

கங்கையானவள் மனத்திலேயே பொருமையால் வெதும்பும் நிலை பெற, மலையில் பிறந்த இளமையாட்டியாகிய பார்வதி மனம் கலக்கம் அடைய, அழகிற் சிறந்த ஏனைப் பெண்கள் திலகங்களெல்லாம் அளவில் அடங்காத வெட்கத்தை அடைய, நிலவைத் தலையில் சூடிய மூன்று கண்களையுடைய சிவனுர் இவ்வெழில் நங்கையைப் பார்ப்பதற்கு மூன்று கண்கள் போதா உடல் முழுவதும் கண்கள் இருக்கவேண்டும் என்று யாவரும் கூற, அதே சமயத்தில் அவ்விறைவன் பகைவனுகிய நிறம் அமைந்த நல்ல மலர்களையே அம்பாகக் கொண்ட மன்மதனும் வெற்றியை அடைய, எங்கள் நெற்றிக் கண்ணராம் இறை முன்னிலையில் செல்ல விட்டாற் போன்றதோற்றமுடையாள்,

### அருஞ்சொற் பொருள்

சேடன்-ஆதிசேடன் என்ற ஆயிரந்தலையுடையதாய் இப்பூவுலகத்தைத் தாங்கும் பாம்பு. உகிர்-நகம்: அயன்-பிரமன். மின்-மின்னல். சாம்புநதப் பொன்-நாவற்பழம் போன்ற ஒருவகை உலோகம்; இரும்பு. புடம் இடுதல்-மூடு போட்டு நாட்கணக்கில் சூடேற்றுதல். வீறு-வேறு ஒன்றற்கு இல்லாத புதுமைப் பெருமை. நலம்-நன்மை; அச்சம் மடம் நாணம் பயிர்ப்பு. திலம்-எள். சங்கை-அளவு. வண்ணம்-நிறம். வாகை-வெற்றி.

### விளக்கவுரை

அரிவையின் அல்குல் ஏனைய பாம்புகளின் படம் போன்று சிறு விரிவுடையதன்றி, ஆதிசேடன் பகையுணர்வு கொண்டு விரித்த போது விரிவடைந்த படத்தின் பரப்பளவை ஒத்து ஆகல்கின்றது என்பதாம்.

பிரமனுக்குத் தலைகள் ஐந்து. ஒரு முறை பிரமன், சிவன் எனது புத்திரன்; என்னுல்தான் உலகமெல்லாம் உண்டாயிற்று எனச் செருக்குக் கொண்டான். சிவன் அப்போது தோன்றி அவன் தலை கள் ஐந்தனுள் ஒன்றைத் தன் நகத்தாற் கிள்ளி யெறிந்து அவன் செருக்கை அடக்கினர் என்பது வரலாறு. இவ்வாறு இறைவனுர்க்கு ஒருமுறைபிறந்த சினத்தின் காரணமாகத் தன் ஒரு தலை போயிற்று. மீண்டும் அவருக்குக் கோபம் பிறந்தால் தடுக்க யாரிருக்கிருர்கள் என்று எண்ணி அவர் சினத்தைத் தணித்துத் தன்வயமாக்கி இழுக் கக் கூடிய அழகுத் தெய்வம் ஒன்றைப் படைக்க முற்பட்டான் பிர மன் என்பதாம்.

மின்னலை ஒன்ருக்கிப் பிழிந்து வடிகட்டி எடுத்த சாற்ருேடு புடமிட்டுக் காய்ச்சி மாற்று ஏற்றப்பெற்ற சாம்புநதப் பொன்னின் உருக்கினையும் ஒன்று சேர்த்துக் குழைத்து வைத்துக்கொண்டு அவயவங்களை யெல்லாம் செய்து அமைத்தான். கை வருந்துமாறு செய்தான். தனித்திருந்து செய்தான். தன் மதிவன்மையை யெல்லாம் பயன்படுத்திச் செய்தான். சிறுசிறு பருவநிலை உடல் களையே செய்து பழகிய அவன் அமுது ஊறும் பருவத்து நலம் திகழும் பெண்ணைப் படைத்தான். அழகு முழுவதையும் அங்கேயே குடியிருக்குமாறு செய்து தோற்றுவித்தான் என்பதாம்.

பொன் என்பது உலோகம் என்ற ஒன்றைக் குறிக்கும் தமிழ்ச் சொல். பொள் என்ருல் தோண்டப் பெறுவது; பிளக்கப் பெறுவது; வெட்டியெடுக்கப் பெறுவது என்பது பொருள். அவ்வாறு எடுக்கப் பெறும் உலோகத்தைக் குறிக்க வழங்கப் பெற்ற தூயதமிழ்ச் சொல் லாகிய பொள் என்பது, பொல் என்ருயிற்று; பொள்ளாப் பிள்ளையார் பொல்லாப் பிள்ளையார் என்ருயினதுபோல. பொலம், பொலன், பொன் என மருவியது.பொன்னை ஆடகம், பசும்பொன்,கிளிச்சிறை, சாதரூபம், சாம்பூநதம் என்றெல்லாம் பிரித்தார்கள் என்பதை மதுரைக் காஞ்சியால் அறியலாம். இவையெல்லாம் இப்போது வழங்கும் பொருளிலே உள்ள பொன்னின் வகைகள் எனக் கொண்டனர். ஆனுல் ஆடகப் பசும்பொன் என்பதைத் தங்கம் என்றும் கிளிச்சிறை என்பதைக் கிளியின் சிறகுபோன்று பச்சை நிறம் மிக்குத் திகழும் மாற்றுக் குறைந்த பொன் அல்லது செம்பு என்றும், சாதரூபம் என்பதைச் சோற்றின் நிறமாய்த் திகழும் வெள்ளி என்றும், சாம்பூநதம் என்பதை நாவற்கனியின் நிறமாய்த் திகழும் இரும்பு என்றும் கொள்ளுதல் இயைபுடையது. பெண் களின் உடல் நிறம் சுத்த சிவப்பல்ல; கருமையும் பொன்னிறமும் ஒன்று சேர்ந்தபோது தோன்றும் மாந்தளிர் போன்ற நிறம். அத ஞலேயே இங்கேயும் ஆசிரியர் பொன்னிறத்தை அளிக்கும் மின் னலைப் பிழிந்தெடுத்து வைத்துக்கொண்டு, சாம்பூநதப் பொன்னை

யும் உருக்கிக் குற்றம் நீங்கப் புடம் இட்டுப் பின்னர் இரண்டையும் ஒன்று சேர்த்துக் குழைத்துச் செய்தான் என்றார்.

உலகம் முழுதையும் தன்னுடைய நினைவு ஒன்று கொண்டே தன்னிச்சைப்படி தோற்றுவிக்கும் வல்லமையையுடைய பிரமன் தனித்த இடத்தில் இருந்து சிந்தித்துச் சிந்தித்துக் கைவருந்த அவ்வுருவத்தை அமைத்தான் என்றார். இது புறநானூற்றினுள் ஔவையார் அதியனைப் பாடும்போது, ஒருநாளில் எட்டுத்தேரினைச் செய்யும் தச்சன் ஒரு மாதம் கூடிக் கருதிச் செய்யப்பட்டதொரு தேர்ச் சக்கரத்தைப் போன்ற வலிமையுடையவன் என்று கூறிய கருத்தோடு ஒப்பிட்டுப் பார்த்துச் சுவைக்கும் திறனுடையது.

"வைகல் எண்தேர் செய்யும் தச்சன்
திங்கள் வலித்த காலன் னோனே" என்பன அவ்வடிகள்.

எப்பொருளும் இளமையாக இருக்கும்போது மிக்க அழகு கொண்டு விளங்கும். அவ்விளமைப் பெண்ணாகிய மழலைமொழி பேசும் பெண்ணின் அழகு பிரமன் இப்போது படைத்த பருவம் நிறை எழிலோவியப் பெண்ணழகை நோக்க எள் அத்தனை அளவு கூட இல்லை என்று கூறுமாறு அமைத்தான்.

இனி, மழலை மொழி பேசும் தன்மையைப் பெண்கள் எல்லாருக்கும் உரிய பொதுப் பண்பாகக் கொண்டு, இளமை வாய்ந்த சிறு பெண் குழந்தை என்று கொள்ளாது, பெண்மைப் பண்புகளில் திலமத்தனை எடுத்துச் செய்யப்பெற்ற எல்லாப் பெண்களின் அழகும் இப்பெண்ணின் அழகை நோக்க எள்ளத்தனைகூட இல்லையெனக் கொள்ளினும் குற்றம் இல்லை. மேலும், பெண்களின் பண்புகள் எல்லாவற்றிலேயும் ஆராய்ந்து பார்த்து எள் அத்தனை (திலம் அத்தனை) எடுத்துச் செய்யப்பெற்ற பெண்ணாகிய 'திலோத்தமை' என்ற பெண்ணின் அழகுகூட இவ்வரிவையின் அழகை நோக்க எள்ளத்தனை அழகுகூட இல்லை என்று கூறினாரென்றும் கொள்ளலாம்.

பிரமன் குதலை மொழிப் பெண்ணைப் படைத்த நிலையை 329, 330-ஆவது கண்ணிகளில் குறித்தார்.

யோக நிட்டையில் அமர்ந்து ஞானக்கண் கொண்டே எப்பொருளையும் ஆராய்ந்து அறியும் நிலையுடைய இறைவனும் இவளழகை முழுதும் பருகவேண்டுமாயின் உடல் முழுதும் கண்களாக இருந்தால்தான் முடியும், முக்கண்கள்போதா என்று யாவரும் கூறக் கூடிய அழகுடையவள் என்பதாம்.

முன்னொரு முறை இறைவன்மேல் மலரம்பு எய்து மாண்பின்றி எரிந்து தோல்வியுற்ற மன்மதனும் இப்பெண்ணாகிய படையை விடு

வதன் மூலம் தன் எதிரியையே வெற்றிகொள்ளும் நிலையெய்துவான் என்பதாம்.

### உலாவரும் நாளின் முதல்நாள் அரிவையும் ஆருயிர்ப் பாங்கியும் உரையாடல்

333. ... ... ... —எண்இறந்த

334. பாங்கியர் நிற்க உயிர்ப்பாங்கியுடன் ஏறி
ஓங்கிய செய்குன்றின் உள் இருத்தி - ஆங்கு அவட்குத்

335. தென்ஆர் செழுங்களபச் சேறு அணிந்தாள் தான்அணிந்த
பொன் ஆபரணமெலாம் பூட்டினுள் - மின்னுள் தன்

336. பொற்புஊர் சரீரத்தைப் புல்லி அகமகிழ்ந்தாள்
கற்பூர தாம்பூலம் கைகொடுத்தாள் - பிற்பாடு என்

337. ஊன் ஆருயிர் நீ என் உள்ளக் கருத்து எல்லாம்
மானே அறியாயோ மற்று என்ன - யான் அறியப்

338. போமோ சொல் உன் கருத்தைப் பூவணங்கோயில் கொண்டார்
தாமே அறியத்தகும் என்ன - ஆமே

339. அவர் அறிவது உன்னைக்கொண்டு அல்லவோ என்றுட்கு
எவர் அறிவும் தாம் அறியும் ஈசன் - அவிர் சடையான்

340. பின் அழகுக்கு ஒப்பு உரையாப் பேர் அம்பல வாணன்
தன் அழகுக்கு ஆரும் ஒவ்வாத் தாணுஈங்கு - உன்னழகு

341. பார்க்கவே நாளைப் பவனிவரும் என்றளவில்
கார்க்குழல் கேட்டுஉள்ளம் களிப்பு எய்தி,

*பொழிப்புரை*

இத்தகைய தோற்றம் உடையவளான அரிவை, பூவணேசன் உலாவரும் நாளின் முதல் நாளன்று, எண்ணிக்கை கடந்த தோழியர்கள் நின்று கொண்டிருக்க, அவர்களை விட்டுப் பிரிந்து உயிரேயனைய தோழியுடன் உயர்ந்திருக்கின்ற செய்யப்பெற்ற குன்று ஒன்றன்மேல் ஏறி, அவ்வுயிர்ப்பாங்கியை (அங்கே உள்ள மண்டபம் ஒன்றின்) உள்ளே அமரச் செய்து, அங்கே அவளுக்கு இனிமை பொருந்திய செழிப்புள்ள குங்குமம் கஸ்தூரி முதலியன கலந்து செய்யப் பெற்று இருக்கின்ற குழம்பை அத்தோழியின் உடலிலே அழகு பெறப் பூசினுள்; தான் அணிந்து கொண்டிருக்கிற அழகிய ஆபரணங்கள் எல்லாவற்றையும் பூட்டினுள்; மின்னற்கொடி போல் விளங்கும் உயிர்த் தோழியின் அழகு வளர்கின்ற உடலைத்

தழுவித் தன் உள்ளம் இன்புற்ருள்; கற்பூரம் முதலிய மணப் பொருள்களோடு சேர்ந்த வெற்றிலையைக் கையில் கொடுத்துச் சிறப்புச் செய்தாள்.

அதன் பிறகு (அவ்வுயிர்த் தோழியோடு பேசமுற்பட்டு) என் உடலாய், என் அருமை உயிராய் அமைந்தவளே! மான்போன்ற வளே! நீ என்னுடைய உள்ளத்தில் அடங்கிக் கிடக்கும் கருத்துக் களையெல்லாம் அறியமாட்டாயோ ? என்று கேட்க.

உன் உள்ளத்தில் அமைந்த எண்ணங்களையெல்லாம் தோழி யாகிய நான் அறிதல் என்பது முடியுமோ? சொல்வாயாக. உன் உள்ளக் கருத்தையெல்லாம் திருப்பூவணத்தைத் தம் இடமாகக் கொண்டு எழுந்தருளியுள்ள இறைவர் தாமே அறியத் தகுதியுடை யனவாகும் என்று மறுமொழி கூற,

ஆமாம் ஆமாம். அவர் என் உள்ளக் கருத்தையெல்லாம் அறிவது கூட உன்னைக் கொண்டு அல்லவா ? என்று கூறிய அரிவைப் பருவத்தாளுக்கு,

தோழியானவள், எத்தகைய நிலையுடையவர்களின் அறிவின் திறங்கள் எல்லாவற்றையும் பிறர் உதவியின்றித் தானே அறியும் முற்றறிவினனுகிய இறைவன்;

விளங்கும் சடை முடியையுடையவன்; அவனுடைய பின்புறத்து அழகுக்குக்கூட ஒப்புமையாக வேருெரு பொருளைச் சொல்லுதற்கு இயலாத அழகோடு பெரிய சபையிலே கூத்தியற்றி வாழும் நிலை யுடையவன்; அவன் முழு உருவத்து அழகுக்கு யாருமே உவமை யாக முடியாத அழகோடு என்றும் நிலைபெற்றவன்;

(அவன்) இங்கே உன்னுடைய அழகைப் பார்ப்பதற்காகவே நாளைக்குத் தேர் ஊர்ந்து உலா வருவான் என்று கூறியவுடனேயே,

மேகத்தை ஒத்த கூந்தலையுடைய அரிவை கேட்டு உள்ளம் மிக மகிழ்வு அடைந்து,

### அருஞ்சொற் பொருள்

எண் - எண்ணிக்கை. இறந்த - கடந்த. தென்- இனிமை. களபச் சேறு - குங்குமம் கஸ்தூரி முதலியன கலந்து உடம்பில் பூசிக் கொள்ளுதற்கு ஏற்ப அமைத்த ஒருவகை குழம்பு. மின்னுள் - மின்னற்கொடி போன்றவள். பொற்பு - அழகு. புல்லி - தழுவி. அவிர் சடை - விளங்கும் சடை. வாணன் - வாழ்நன். தாணு - நிலையானவன். கார் - கருமை.

### விளக்கவுரை

அரிவைப் பருவத்தாள் தன் உயிர்ப்பாங்கியை அழைத்து அவ ளுக்கு இத்துணைச் சிறப்புக்களை யெல்லாம் செய்தது தன் உள்ளத்து

எழுந்த காமநிலையை இறைவன்பால் எடுத்துரைத்துக் காரியத்தை முற்றுவிக்கத் தூதாக அனுப்பக் கருதிய காரணத்தாலேயாம். இதுவே உண்மைக் கருத்து என்பதை 'அவர் அறிவது உன்னைக் கொண்டு அல்லவோ' என்ற 339-ஆவது கண்ணியில் அமைந்த அடியால் உணரலாம்.

செய்குன்று - மகளிர் ஏறி விளையாடுதற்கென்று உயர்வாகக் குன்று போல் செயற்கை முறையிற் செய்யப்பெற்ற மேடை. தென் ஆர் செழுங்களபச் சேறு என்பதற்குத் தெற்கே உள்ள பொதியமலையில் விளையும் சந்தனத்தோடு கஸ்தூரி முதலியன சேர்த்துச் செய்யப்பெற்ற ஒருவகைக் குழம்பு என்றும் பொருள் கொள்ளலாம்.

பொன் ஆபரணம் – அழகிய நகைகள். முத்துமாலை முதலிய பிற அணிகளையும் தோழிக்கு அணிந்திருப்பாள் ஆதலினால் பொன் ஆபரணம் என்பதற்குப் பொன்னால் ஆகிய ஆபரணம் என்று உரை செய்யப்படவில்லை.

இறைவனுக்கு விழாக்காலங்களில் முன்னலங்கார அழகு பின்னலங்கார அழகு முதலியன செய்யப்படுவதுண்டு. பின்னலங்கார அழகைச் சிறப்புற அமைப்பது எங்கும் முறையாக நடைபெறும் மரபு. அதை உள்ளத்தில் கொண்ட தோழி அவன் பின்னழகு ஒப்புமையே கூறமுடியாத ஒரு சிறந்த அழகு என்றுகூறிப் பிறகு அவன் முழு உருவ அழகையும் சிறப்பித்துக் கூறக்கருதித் தன் அழகுக்கு ஆரும் ஒவ்வாத் 'தாணு' எனக் குறித்தாள். இத்தகைய உவமை கூறமுடியாத அழகு வாய்ந்த அவனே உன்னழகைக் காணும் பொருட்டு நானே வரப்போகிறான் என்று கூறியது நயம் மிகுதியும் அமைந்த ஒன்றாம்.

கார்க் குழல் என்பது மேகத்தை ஒத்த கூந்தலை உடைய பெண் எனப் பொருள்படுவதால் உவமைத் தொகைப் புறத்துப் பிறந்த அன்மொழித் தொகை. இனிக் கருமையாகிய கூந்தலையுடைய பெண் என்றும் பொருள்படுவதால் பண்புத் தொகைப் புறத்துப் பிறந்த அன்மொழித் தொகையும் ஆம்.

## அரிவை முதல்நாளைக் கழித்த முறை

341. ... ... ... —தீர்த்தன்மேல்

342. ஆசையினும் விரிவா அல்குல் பூரிப்பமுலை
வீசிய விண்ணை வெளியடைப்ப - மாசுஅகலும்

343. கன்னி புளகம்உறும் காலையில் மாலைபெற
மன்னிய காமம் வளர்ந்தேற - அந்நேரம்

344. மாலை வரக்கண்டாள் மயங்கி மறலிநிறம்
சாலமுழுச் சிவப்போ தானென்றாள் - கால்அரவம்

345. போல வரக்கண்டு பொதியின்மலைப் புலியை
வால்உருவி விட்டான் மதன்என்றாள் - பால்உருவி

346. விட்டதுபோல் வெண்ணிலவு வீசுவதை வெண்ணெருப்பாச்
சுட்டநெருப்பு ஏதுஎன்று சொல்லினாள் - முட்டக்

347. குயில்வாய் விடம்இருப்பக் கூற்றுஉதைத்தார் என்னே
இயல்வேலை நஞ்சுண்டது என்றாள் - செயல்மாரன்

348. தாழைமலர் அணியாத் தன்பகைவன் மேல்எய்யாது
ஏழையெனை எய்யும்மதி என்?என்றாள் - சூழ

349. உருகும் இனத்தோடு உயிர்த்துயிர்த்து நெஞ்சம்
சருகுபட வாடித் தளர்ந்து - முருகுஇதழித்

350. தாமக் கடவுள் திருஅஞ்செழுத்தே தாம்புணையா
யாமக் கடல்நீந்தி ஏறினாள்

*பொழிப்புரை*

(பூவணேசன் நாளை உன்னழகு பார்க்க உலாவருகிறான் என்று தோழி சொல்லக் கேட்ட அளவிலேயே உள்ளம் மிகுந்த மகிழ்வடைந்து) அடைந்தார் வினைகளையெல்லாம் தீர்த்தவனாகிய பூவணேசன் மேல் வைத்த ஆசையைக் காட்டிலும் அதிக விரிவுடையதாக அல்குல் பரப்பளவு மிக்குத் திகழ, முலைகளானவை பணைத்து விம்மி, விரிந்திருக்கின்ற ஆகாயத்தை எட்டி, வெற்றிடங்களை யெல்லாம் மறைத்துக் கொள்ள, குற்றம் இல்லாத இளமை நலம் வாய்க்கப் பெற்ற அரிவை மயிர்க் கூச்செறிதல் முதலிய காமக் குறிப்புக்களை அடையும் சமயத்தில், மயக்கத்தை அடைவித்தற்கெனவே நிலை பெற்றிருக்கும் காமம் மேன்மேல் வளர்ந்து உயர, அக்காமம் உயரும் அந்நேரத்தில் மாலைக் காலமும் வந்துவிடவே மாலைக்காலம் வந்து விட்டதென்று கண்டாள்.

மாலைக் காலத்தைக் கண்ட அரிவை மயங்கி இயமனின் நிறம் மிகுதியாக அமைந்த முழுச் சிவப்போ தான்! என்று கூறினாள்;

தென்றற் காற்றானது பாம்பைப் போல் சீறி வருவதைக் கண்டு மன்மதன் பொதிய மலையில் வாழும் புலியை வாலுருவி என்மேல் அனுப்பி விட்டான் என்றாள்;

பாலானது உருகி ஓடவிட்டது போல வெண்மையான நில வொளி வீசுவதை வெண்மையான நெருப்பாக இருந்து என்னை வந்து சுட்ட நெருப்பு எதுவாகும் என்று கூறினாள்;

இயமனைக் காலால் உதைத்த இறைவனார், குயிலின் வாய் முழுவதும் நஞ்சு அமைந்திருக்க அந்நஞ்சை உண்ணாமல் இயங்கிக் கொண்டே யிருக்கும் கடலிலே உள்ள நஞ்சை உண்டது என்ன காரணம் என்றாள்.

செயலில் கண்ணும் கருத்துமாய் இருக்கும் மன்மதன் தாழை யின் மலர்களை அணியாமல் வெறுத்துவிட்டவனும், தன் பகைவனும் ஆகிய இறைவன்மேல் தன்பகையை முடித்துக் கொள்ள எண்ணித் தன் அம்புகளை எய்யாமல் எல்லாவற்றிலும் குறைபாடுடையவளா கிய என்மேல் எடுத்துவிடுவது என்ன புத்தியோ? என்றாள்;

தன்னைச் சுற்றி இருந்து வாட்டிவருத்தும் இனத்தவராம் தோழியரோடு அடிக்கடி பெருமூச்சு எறிந்து, உள்ளமானது காய்ந்த இலைபோல் வாட்டமுற்றுத் தளர்ச்சி மிகுதியும் கொண்டு,

மணம் வீசும் கொன்றை மாலையைக் கொண்டிருக்கிற இறை வனின் திரு ஐந்தெழுத்தையே தெப்பமாகக் கொண்டு இடையிரவு என்ற கடலை நீந்திக் கரை யேறினாள்.

## அருஞ்சொற் பொருள்

தீர்த்தன்-தீர்த்துவைப்பவன்; இறைவன். வீசிய-விரிந்திருக்கிற. புளகம் உறுதல்-மயிர்க்கூச்செறிதல். மாலை-மயக்கம்; மாலைக்காலம். மறலி-இயமன். கால்-காற்று. மதன்-மன்மதன். முட்ட-முழுவதும். மாரன்-மன்மதன். இனம்-கூட்டம்; இங்கே தோழியரைக் குறித்தது. சருகுபட-காய்ந்த இலைபோல. முருகு-மணம். இதழி-கொன்றை. தாமம்-மாலை. புணை-தெப்பம். யாமக்கடல்-இரவாகிய கடல்.

## விளக்கவுரை

342 - ஆவது கண்ணிமுதல் உன்னழகைக் காண நாளைப் பூவணேசன் உலா வரப் போகிறான் என்பதைக் கேட்ட அரிவை காமம் மிகுதி பெற்ற நிலையில் அம்முதல் நாளைக் கழித்த முறையை ஆசிரியர் அழகு பெறக் கூறியுள்ளார்.

காம உணர்வுநிலை மிகும்போது உறுப்புக்கள் எல்லாம் கிளர்ச்சி பெற்றுப் பூரிப்பது இயல்பு. அரிவைக்கும் அல்குல், முலை ஆகிய இரண்டும் காமஉணர்வால் பூரித்த நிலையை 342-ஆவதுகண்ணி யால் குறித்தார்.

ஆசை என்பது குறித்த பொருளை அடையும் வரை உள்ளத்தே மேன்மேல் வளரும் இயல்பினது. இதற்குச் சிறியவர் மனப்பெருமை

போல் எல்லையே கிடையாது. அவ்வாறே அரிவையின் அல்குலும் எல்லையில்லாமல் விரிவடைந்தது. இங்கே குறித்த ஆசை இறைவனை அடையவேண்டும் என்று அவன்மேல் எழுந்த ஆசை.

அல்குல்பூரிப்ப, முலைகள் விம்மி எழுந்து ஆகாயத்தை மறைப்ப, உடல்முழுவதும் காமநிலை மிகுதலால் மயிர்களெல்லாம் குத்திட்டு நிற்கும் நிலை பெற்றாள். இந்நிலையிலும் காமம் வளர்ந்து கொண்டேயிருந்தது. இக்காமத்தை ஆசிரியர் 'மாலைபெற மன்னிய காமம்' என்று குறித்தார். இவள் மயக்கத்தைப் பெறுவதற்காகவே வந்து பொருந்திய காமம் என்பது பொருள். எனவே இவள் மயங்கி நிலையிழந்து பேசும்வரை வளரும் காமம் என்பதாம். இனி மாலை என்பதற்கு இறைவன் அணிந்த தார் எனக்கொண்டு இறைவன் மாலையைப் பெறும் பொருட்டு நிலை பெற்றுத் தங்கிய காமம் என்றும் பொருள் கொள்ளலாம்.

இயல்பாகவே எரியும் நெருப்பில் எண்ணெயும் சேர்ந்தாற் போல இயல்பாகவே காம இயல்பால் வருந்தும் நிலையில் மாலைக்காலமும் வந்து சேர்ந்தது என்பதாம்.

மாலைக்காலத்து அமைந்த செக்கர் வானத்துச் செவ்வொளியைக் கண்ட அரிவை அது கொன்றாற் போன்ற துன்பம் செய்வதை நினைத்து இம்மாலையானது கூற்றுவனே என மாறுபாடாக உணர்ந்து கூற்றுவன் நிறம் நன்றாகச் சிவந்த சிவப்புத்தானோ என்று கூறினாள்.

அடுத்துத் தென்றலைப் பார்த்துக் கூற முற்பட்டாள். தென்றல் பாம்பைப் போலச் சீறி வந்தது அவளுக்கு. கண்ட அரிவை மன்மதன் என்னைக் கொல்வதற்காகப் பொதியமலையில் வாழும் புலியை வாலுருவி (வாலில் கையை வைத்தால் அது கோபம் அடையும் போலும்) என்மேல் ஏவிவிட்டான் என்றாள். "புலியை வாலுருவி விடுதல்" என்பது ஒரு பழமொழி. தென்றற்காற்றுப் பொதியமலையில் பிறந்து காமஇயலால் நலிந்தோரைக் கொல்ல வருவதுபோல் பாய்ந்து வருவதால் காம இயலால் நலிந்தவர் அதனை 'மன்மதனால் வாலுருவி விடப்பட்ட பொதியமலை வாழ்புலி' எனக் கூறுவர்.

'வெம்புலியை வாலுருவி விட்டிடுவாய்' என்ற பத்மகிரிநாதர் தென்றல்விடு தூதிலும் கண்டு உணர்க.

வெண்ணிலவு எங்கும் பரந்திருக்கும் நிலையைப் பால் உருகி விட்டது போல் இருந்தது என்றார். 'பால் உருகுவது அத்துணைப் பொருத்தமின்று எனக் கருதிப் 'பால் அருவிவிட்டது போல்' எனக் கொண்டு பாலை அருவியாக ஓட விட்டது போல் என்று உரை கொள்வதும் உண்டு. குளிர் நிலவை, வெண்மைத் தன்மையாயிருந்து சுட்டநெருப்பு என்று காம மயக்கத்தால் கூறினாள். நெருப்பைப் போல நிலவும் சுட்டது அவளுக்கு.

இயமனை மார்க்கண்டேயருக்காக உதைத்த இறைவன் கடல் நஞ்சுண்டார். இறைவன் நஞ்சுண்ண விரும்பின் கடலை நாடிச் சென்றிருக்க வேண்டுவதில்லையே; குயிலின் வாயே நஞ்சுதானே; அதையே உண்டிருக்கலாமே என்றாள். குயிலின் வாயொலி நஞ்சு போன்று தன்னுயிரையே வெளிப்படுத்தக்கூடிய வருத்தத்தை விளை விக்கும் காரணத்தால் அவ்வாறு கூறினாள். இயல்வேலை - எப் பொழுதும் அலை அடித்து இயங்கிக்கொண்டே யிருக்கும் கடல் எனப் பொருள் கொள்க.

திருமாலும் அயனும் அடிமுடி தேட முற்பட்டுப் பிரமன் முடி யைக் காணச் சென்றபோது முடியாது திரும்பினான். திரும்பும் போது எதிர்பட்ட தாழை மலரொன்றன் துணைகொண்டு தான் பார்த்து விட்டதாகப் பொய் பேசினான். அதை ஒத்துப் பொய்ச் சான்று கூறிய காரணத்தால் தாழையை முனிந்து தான் கொள்ளாது விடுத்தார் இறைவன். இதையே "தாழை மலரணியாத் தன்பகை" என்று குறித்தார். வில்லாற்றலைத் தன்னோடொத்த ஆண்மை யுடையோரிடம் காட்ட வேண்டுமேயன்றிப் பெண்களிடம் காட்டு வது என்ன மதியுடைமையாகும் என்று கூறுவது போல் மன்மதன் செயலைப் பழித்துக் கூறினாள்.

காம மயக்கம் மிக்கவர் மாலைக்காலத்தையும், தென்றலையும் நிலவையும், குயிலையும், மன்மதனையும் பழித்துக் கூறுவதாகப் பாட் டிசைத்தல் அகத்திணை மரபு. கற்பனைக் களஞ்சியமாகிய சிவப் பிரகாசர் மாயை காம மயக்கம் கொண்டு மேற்கூறியவாறு பழித்துக் கூறிய செய்யுட்களைப் படித்து அறிந்து ஒப்பு நோக்கிக் கொள்க. (பிரபுலிங்க லீலை, பிரபுதேவர் வந்த கதி 57 முதல் 64 வரை)

'சூழ உருகும் இனம்' எனத் தோழியரைக் குறித்தார். உருக் கும் என்பது உருகும் என நின்றது. உருக்குதல் - வாட்டுதல். காம மயக்கம் கொண்டு வருந்துகிறவர்களின் மேல் தோழியர்கள் பன்னீர் முதலியன தெளித்து ஆற்ற முற்படுவார்கள். ஆனால் பன் னீரும் இவர்களுக்கு வெம்மையைத் தருவது ஆதலின் வாட்டுகின்ற தோழியர் எனக் குறித்தார்.

இறைவனின் "சிவயநம"என்ற ஐந்தெழுத்தையே தெப்பமாகக் கொண்டு இரவு என்ற கடலை நீந்தினாள் என்றுரைத்தார். பிறவி யென்னும் கடலை நீந்த இறைவன் திருவடியைத் தெப்பமாகக்கொள் வது போல இரவு என்னும் கடலை நீந்த அஞ்செழுத்தைத் தெப்ப மாகக் கொண்டாள். நாவரசரைக் கல்லில் கட்டிக் கடலில் இட்ட போது இத்திருவைந் தெழுத்தையே பற்றுக் கோடாகக் கொண்டு கடலை நீந்திக் கரையேறிய வரலாற்றை அடிப்படையில் கருதிய ஆசிரியர் இவ்வாறு அமைத்தார். காமக் கனலால் வெம்பியவர் இரவைக் கடலாக அமைத்துக் கூறுவர் என்பதை,

"வாமக் கலையல்குல் வாள்நுதலார் தஞ்சைவாணன் வெற்பில்
நாம்அக் கலவி நலம்கவர்போது நமக்களித்த
காமக் கனல் அவர் கையல்காலைக் கடும்பனிகூர்
யாமக் கடலகத்தும் தணியாது இனி என் செய்துமே" என்ற

தஞ்சைவாணன் கோவைச் செய்யுளாலும் உணரலாம்.

## உலாவரும் பூவணேசனை அரிவை கண்டு காமம் கொண்டநிலை

350. ... ... ... —சோமக்

351. கடவுட் சடாமவுலி காலைவரும் என்றென்று
அடர்பொன் பணிதிருத்தி ஆடை - இடை இறுக்கி

352. மின்னனையாள் இல்கடந்து வீதிவந்தாள் அவ்வளவில்
பொன்னனையாள் மனைக்குப் போயினேன் - தன்அனைய

353. நல்தேர் வரக்கண்டாள் நாளைவரும் என்றுரைத்த
குற்றேவற் பாங்கியைமுன் கும்பிட்டாள் - பின் தேவர்

354. தேவனைக் கும்பிட்டாள் திருத்தோள் நலம் கண்டாள்
காவி மைக்கண்ணால் பருகிக் காமுற்றாள் - மேவுசெக்கர்

355. மாலைத் துயர்ஒழிய வஞ்சி வலக்கண்ணும்
காலைக் கதிர்கண்டு கைதொழுதாள் - ஆலித்துப்

356. பையவரும் தென்றல் பகைதீர எம்பெருமான்
செய்யதிரு ஆபரணம் சேவித்தாள் - மையற்கு

357. அரண் ஆம் புயத்தானை அம்புலிப்போர் நீங்கச்
சரண அம்புயத்து அலரில் தாழ்ந்தாள் - முரண் ஆர்

358. வரிக்குயிலுக்கு அஞ்சுதொழில் மாற்றப் பெருமான்
திருக்கரத்தைக் கண்டு தரிசித்தாள் - கருப்பு விற்கை

359. பூணும் மதன் நடத்தும் போர்தவிரப் புட்பவன
வாணன் நுதற்கண்கண்டு வாழ்த்தினாள் - பாண்மிழற்றும்

360. வண்டுஆர் குழல்நெருநல் வந்த பகைக்குப் பகைதான்
தண்டாத அரன் உருவில் தான்கண்டாள்—கண்டோம்என்று

361. ஆனந்தம் மூழ்கி அறிவு வரும்முன் திருத்தேர்
தான்அந்த வீதிஒரீஇச் சார்ந்ததால்.

பொழிப்புரை

மின்னலை ஒத்தவளாகிய அரிவை (352) (மேற்கூறியவாறு முதல் நாளை மிகத் துன்பப்பட்டுக் கழித்த அரிவை, பூவணேசன் உலாவரும் நாளன்று) திங்கட் கடவுளைச் சடையில் கொண்டவனாகிய பூவணேசன் காலையில் வருவான் என்று பன்முறையும் கூறி, ஒளிவிடும் பொன்னாபரணங்களையெல்லாம் அடிக்கடித் தொட்டுத் தொட்டுத் திருத்தமான முறையில் இருக்குமாறு செய்து, இடையில் கட்டிய சேலையை நன்றாக மீண்டும் இறுக்கிக் கட்டி, வீட்டைக் கடந்து தெருவில் வந்து நின்றாள்.

அச்சமயத்தில், ஒருமுறை பொன்னனையாள் என்ற தாசியின் வீட்டிற்குக் கால் நடையாகவே சென்றவன், தன்னைப் போலவே விளங்குகின்ற நல்ல தேரில் உலா வருவதைப் பார்த்தாள்.

நாளை உன்னழகு பார்க்க உலா வருகின்றான் என்று முன்னமேயே எடுத்துக்கூறிய, சிறு வேலைகளை முட்டாது செய்யும் தோழியை முதன் முதலாகக் கும்பிட்டாள். பின்னர் தேவர்களுக்கெல்லாம் சிறந்த தேவனைக் கும்பிட்டாள். அவ்விறைவனுடைய தோளின் அழகைக் கண்டாள். நீலோற்பல மலர் போன்றதும். மைதீட்டப் பெற்றதும் ஆன கண்ணால் அவன் தோளழகைக் கண்டு காம மயக்கம் கொண்டாள்.

வஞ்சிக் கொடி போன்ற அரிவை, (நேற்றை நாள் வந்து துன்புறுத்தியதாகிய) பொருந்திய செம்மை நிறமுடைய மாலைக் காலத்தின் துன்பம் ஒழியும் பொருட்டு இறைவனின் வலக்கண்ணாக இருக்கின்ற உதய சூரியனைக் கண்டு கையெடுத்துக் கும்பிட்டு வணங்கினாள்.

முழக்கம் செய்து கொண்டு (கருமுதிர் தாய்போல்) மெல்ல அசைந்து வரும் தென்றலின் பகைமை ஒழிந்தே போகும் பொருட்டு எம் தலைவனாகிய இறைவனின் செம்மையுடைய சிறந்த ஆபரணமாகிய பாம்புக்கு வணக்கம் செய்தாள்.

நிலவானது செய்யும் போராட்டம் நீங்கி ஒழிதற்காக, காம மயக்கத்திற்கு ஒரு எல்லையாக இருந்து தடுத்து நிறுத்தும் தோள்களைக் கொண்டிருக்கும் இறைவனுடைய வணங்கத்தகும் தாமரை மலர்களாகிய திருவடிகளில் பணிந்து வணங்குகிறாள்.

மாறுபாடு அமைந்ததும், கோடுகளையுடையதும் ஆகிய குயிலுக்கு நேற்றெல்லாம் பயந்திருந்த ஒரு செயலை நீக்கிக் கொள்ளுதற்காக இறைவனின் திருக்கரங்களைக் கண்டு வணங்கினாள்.

கரும்பை வில்லாக வளைத்துக் கையில் அணிகின்ற மன்மதன் நடத்தும் சண்டையை நீக்குதற்காகப் புட்பவனம் எனப்படும் திருப்

பூவண நகரில் வாழ்பவனாகிய இறைவனின் நெற்றிக் கண்ணைக் கண்டு தன்னைக் காப்பாற்ற வேண்டி வாழ்த்துரை கூறினாள்.

இசைப்பாட்டை மெல்ல முழங்கும் வண்டுகள் பொருந்திய கூந்தலையுடைய அரிவை நேற்று வந்து துன்புறுத்திய பகைப்பொருளுக்குப் பகைப் பொருளாக உள்ளவற்றையெல்லாம் குறைபாடில்லாத இவனுடைய வடிவத்திலே கண்டாள்.

(நம்மைத் துன்புறுத்திய பொருள்களைத் துன்புற வைக்கும் பகைப் பொருளைக்) கண்டுவிட்டோம் என்று மகிழ்ச்சியில் அப்படியே ஆழ்ந்தாள். மகிழ்ச்சியில் மூழ்கி மீண்டும் அறிவு தொழிற்படும் நிலைமைக்கு அவள் வரும் முன்பேயே (இறைவன் ஏறி வந்த) அழகிய தேர்தான் (அரிவை இருந்த) அந்தத் தெருவை நீங்கி (அடுத்த தெருவைச்) சென்று அடைந்தது.

### அருஞ்சொற்பொருள்

சோமக் கடவுள் - திங்கள். சடாமவுலி - சடைமுடி. பணி-ஆபரணம். குற்றேவல் - சிறு ஏவற்காரியங்களைச் செய்பவள். காவி - நீலமலர். செக்கர்மாலை - அந்திமாலை. ஆலித்து - முழங்கி. அரண் - எல்லை. புயத்தான்-தோளுடையவன். பாண் - இசைப் பாட்டு. மிழற்றுதல் - மெல்ல ஒலித்தல். நெருநல் - நேற்று. தண்டா - குறையாத. ஒரீஇ - நீங்கி.

### விளக்கவுரை

அரிவையின் உள்ளமானது காலையில் நம்மழகைக் காண வருகிறான் என்பதிலேயே ஈடுபடுவதால் உணர்ச்சி மிகுதி காரணமாக உடல் சுருங்க ஆபரணங்கள் கீழே விழ முற்படுகின்றன. ஆதலால் அவற்றை அடிக்கடி திருத்தமாக அமைக்க வேண்டிய நிலை ஏற்படுகின்றது. உடையும் அவிழ முற்படுவதால் அதையும் இறுக்கிக் கட்ட வேண்டுவதாயிற்று. அல்லது வெளியிற் செல்ல முற்படுவோர் அணியையும், உடையையும் சரி செய்து கொண்டு செல்லுதல்போல் இவளும் இற்கடந்து வீதியில் செல்ல வேண்டியவள் சரி செய்து கொண்டு சென்றாள் என்றும் கொள்ளலாம்.

தன் அணைய நல்தேர் என்பது தன்னைப் போலவே நன்கு அலங்கரிக்கப் பெற்று எழிலோடு விளங்கும் தேர் என்பதாம். இறைவனைத் தன்னிடத்தில் அமைத்துக் கொண்டு வீதியில் வந்த தேர் இறைவனை உள்ளத்தில் அமைத்துக் கொண்டு வீதியில் ஓடிவந்து நின்ற அரிவைக்கு ஒப்புமையாக்கப் பெற்றதாகவும் கொள்ளலாம்.

கள் குடித்தவர்கள் மயக்கத்தில் மூழ்குவதுபோல் தோள் அழகு என்ற கள்ளை, நீலமலர் போன்ற அகப்பையால் முகந்து அளவுக்கும் மேலாகக் குடித்தமையால் காமம் என்ற மயக்கத்தில் ஆழ்ந்தாள் என்பதாம்.

அடுத்து அரிவையானவள் நேற்றுத் தனித்துக் காமமுற்று இருந்தபோது தன்னிடம் பகைமை காட்டித் தன்னைத் துன்புறுத்திய பொருள்களுக்கெல்லாம் துன்பத்தைக் கொடுக்கக் கூடிய பகைப் பொருள்களை இறைவன் வடிவில் கண்டாள். முதல் நாள் தன்னைத் துன்பத்தில் ஆழ்த்திய பொருள்கள் மாலைக்காலம், தென்றல், திங்கள், குயில், மன்மதன் ஆகியவை. இவைகளுக்குப் பகையாக இருந்து இவைகளுக்கு அச்சத்தை உண்டாக்கும் பொருள்களாய் இறைவனிடத்து இருப்பவை முறையே சூரியனாகிய வலக்கண், அணியாகிய பாம்பு, திருவடி, திருக்கைகள், நெற்றிக்கண் ஆகியவை. மாலைக்காலம் முதலியவற்றால் வரும் துன்பமோ, போராட்டமோ நீங்க வலக்கண் முதலாகிய உறுப்புக்களையும், அணிகளையும் வணங்கினாள் என்பதாம்.

இறைவனுக்குச் சூரியன் வலக்கண், திங்கள் இடக்கண், நெருப்பு நெற்றிக்கண் ஆகும் என்பது புராண மரபு. மாலைக்காலம் இருட்டை விளைவிப்பது. ஆதலின் அதற்குப் பகையான பொருள் தோன்றும் இளஞ் சூரியன். சூரியன் தோன்றியபோது மாலை மறைந்தோடி யொழியும். ஆதலின் மாலைக்காலத்துக்குப் பகை இளஞ் சூரியனாயிற்று.

இறைவன் ஆபரணம் பாம்பு. பாம்பு காற்றை உண்டு வாழ்வது. ஆதலின் காற்றை அப்படியே சாப்பிட்டு விடுகின்ற பகைப் பொருளாயிற்று இறைவன் அணியாகிய பாம்பு.

இறைவன் தக்கனது யாகத்தை அழிப்பதற்கு வீரபத்திரக் கடவுளாகத் திருவுருக் கொண்டபோது, அவ்வியாகத்துக்குச் சென்றிருந்த திங்களைக் காலால் தேய்த்துக் குறைத்தார். இதனைச் ''சந்திரனைத் தேய்த்தருளித் தக்கன் தலையரிந்து' என்ற திருவாசகத்தால் உணரலாம். ஆதலின் இறைவன் திருவடி திங்களுக்குப் பகைப் பொருளாயிற்று.

தக்கனது யாகத்தில் வந்திருந்த இந்திரன் குயில்வடிவு கொண்டு ஓட முயன்றபோது அதன் இறகைச் சிவனின் திருக்கரம் வெட்டினமையால் சிவனின் திருக்கைகள் குயிலுக்குப் பகைப் பொருளாயிற்று.

மன்மதனை எரித்த காரணத்தால் நெற்றிக்கண் அவனுக்குப் பகைப் பொருளாயிற்று. இவ்வாறு தனக்குப் பகைப் பொருளுக்குப் பகைப்பொருளைக் கண்டவுடனேயே மகிழ்வுகொண்டாள்என்பதாம்.

உள்ளத்தில் ஒரே சமயத்தில் இரு பேருணர்ச்சிகள் இடம்பெற முடியாது. ஆனந்தமும் அறிவும் இரு பேருணர்ச்சிகள். ஒன்று உயர்ந்தபோது ஏனையது இருக்கும் இடம் தெரியாமலேயே தாழ்ந்து நிற்கும். மிகவுயர்ந்த நிலைக்குச் சென்ற உணர்ச்சி சிறிது சிறிதாகத்

தாழ்ந்து வரவரத்தான் ஏனைய உணர்ச்சிகளும் சிறிது சிறிது தொழிற்படும். அம்முறையை ஒட்டியே அரிவையும் மிகுந்த மகிழ்ச்சியில் மூழ்கியதால் அறிவு தொழிற்படாமலேயே இருந்து விட்டது. ஆனந்தம் கொஞ்சம் கொஞ்சமாகக் குறைந்து அறிவு நிலைக்கு வருவதற்குள் இறைவன் ஏறிவந்த தேர் அத்தெருவை விட்டுச் சென்றது என்பதாம். ஒரீஇ - சொல்லிசை யளபெடை.

# 6. தெரிவை

தெரிவைப் பருவம் என்பது இருபத்தாறுவது வயதுமுதல் முப்பத்தோராவது வயதுவரை பெண்களுக்கு உளதாகும் பருவம். திருப்பூவணத்து இறைவன் உலாப்போகுங்கால் இவள் கண்டு காமம் கொண்ட நிலையை இப் பகுதியிற் கூறுகிருள்.

பொன்னனையாள் வரலாறு சிறப்பாக இப்பகுதியில் பேசப் பெறுகிறது.

## தெரிவையின் வருணனை

361. ... ... ... —ஞானந்தான்

362. தேற்றமிகப் பேரின்பம் தேடுமவர் ஆசைக்கு
மாற்றுமருந் தென்ன வருந்தெரிவை - சாற்றயன்மால்

363. கற்பத் திருணிலவோ காய்பகலோ என்னமிகப்
பொற்புற் றிருள்பழுத்த பூங்குழலாள் - கற்பத்துச்

364. சீலக் கடல்குளமோ சிற்றோடை யோவெனநீள்
நீலப் பெரிய நெடுங்கண்ணுள் - கோலமுந்நீர்க்

365. கண்ணற் பவளம் கறுப்போ விளர்ப்போவென்
றெண்ணச் சிவந்த இதழினுள் - விண்ணமுதம்

366. காறி உமிழ்புளிப்போ கைப்போவென் றிந்திரன்வாய்
ஊறிவரத் தித்திக்கும் ஒண்சொல்லாள் - வீறியபொன்

367. மேருச் சிறுபந்தோ மென்கழங்கோ என்னமிகப்
பாரித் தெழுந்த பயோதரத்தாள் - சீரித்து

368. வாய்ந்த இழையுரலோ வன்தூண மோவெனப்போய்த்
தேய்ந்து சிறுத்தொழியும் சிற்றிடையாள் - ஆய்ந்தவையம்

369. எல்லாமோர் கையளவோ இல்லையோ என்னவிண்மேல்
செல்லா மணிநிதம்பத் தேரினுள் - வில்லேறும்

370. பஞ்சி பரலோ படுநெருஞ்சி யோவெனவுள்
அஞ்சிமுகம் சேக்கும் அடியினுள் - விஞ்சுபுகழ்

371. சேர்க்குந்தென் பூவைத் திசைபோல யாவரையும்
பார்க்குந் தொறுமயக்கும் பண்பினுள் - கூர்க்கும்

272. அரிவைப் பருவத் தருட்பூவ ணேசன்
கருணைப் பவனிவரக் கண்ட - பரிசினுல்

373. காலை அரும்பிப் பகலெல்லாம் போதாகி
மாலை மலரும் மயலினுள்.

*பொழிப்புரை*

இறைவனைச் சேருதற்கு உரிய ஞானநிலையானது மிகுதியும் உள்ளத்தைத் தெளிவு படுத்துவதால் பேரின்பமாகிய வீட்டினைத் தேடிக் கொண்டிருக்கும் ஞானிகளின் ஆசையை நீக்கி அவர்களைக் காமநிலைக்குக் கொண்டுவரும் எதிர் மருந்து என்று சொல்லக்கூடிய நிலையுடைய தெரிவைப் பருவத்தாள்.

புகழ்ந்து சொல்லும் சிறப்பினையுடைய பிரமன், திருமால் முதலியவர்கள் அழிகின்ற கற்பகாலத்தில் தோன்றும் இருள்கூட (இக்கூந்தலை நோக்க) நிலவாக இருக்குமோ, காய்கின்ற சூரியனோ என்று சந்தேகம் கொள்ளுமாறு மிகுதியும் அழகுபெற்று இருள் முற்றியிருக்கின்ற பொலிவு அமைந்த கூந்தலையுடையவள்.

யுகத்தின் முடிவுக்காலத்தே உலகை அழித்த கடல்கூடக் (இவள் கண்களை நோக்க) குளமாக இருக்குமோ? சிறிய ஓடையாக இருக்குமோ? என்று ஐயம் கொள்ளுமாறு நீண்டுகொண்டிருக்கிற நீலநிறம் பொருந்திய பெரிய நற்பண்பு அமைந்த கண்களை யுடையவள்.

அழகிய சமுத்திரத்தின்கண் இருக்கின்ற நல்ல பவளம்கூடக் (இவள் இதழ்களை நோக்க) கறுப்பாக இருக்குமோ, வெள்ளையாக இருக்குமோ என்று நினைக்குமாறு சிவந்திருக்கின்ற உதடுகளை யுடையவள்.

தேவருலகில் இருக்கும் இனிமைப் பொருளாகிய அமுதமானது (இவள் சொல்லை நோக்க) காறி உமிழக்கூடிய புளிப்புடையதோ, கசப்புடையதோ என்றெண்ணும் தன்மையதும், அமுதத்தையே உண்டு கொண்டு இருப்பவனுகிய இந்திரனும் இவள் சொல்லின்பமே சிறந்ததெனக் கருதி வாய் நீர் ஊறி வருகின்ற அளவுக்கு இனிமை யுடையதும் ஆகிய சிறந்த சொல்லை யுடையவள்.

செருக்கினைக் கொண்டு உயர்த்த பொன்மயமான மகாமேரு மலையும் (இவள் முலையை நோக்க) சிறிய பந்தோ, அல்லது

மென்மையான கழற்சிக்காயோ என்று ஐயப்படுமாறு மிகுதியும் பருத்து மேல்நோக்கி எழுந்த முலைகளையுடையாள்.

இடை சிறியதா இழை சிறியதா என்ற ஐயத்தைக்கண்டு தீர்ப்ப தற்காகக் (பரீக்ஷித்துப் பார்க்க) கொண்டுவந்து அமைக்க, அமைந் திருக்கின்றநூல் இழையானது (இவள் இடையைப் பார்க்க) உரலோ, வன்மையாகிய தூணோ என்று கூறுமாறு சென்று தேய்ந்து மிகச் சிறியதாகஆகி, ஏன்! இல்லை என்று கூட—ஒழிந்துவிட்டது என்று கூடக் கருதுமாறு இருக்கும் சிறிய இடுப்பினை உடையவள்.

ஆராய்ந்த இவ்வுலகம் முழுதும் (இவள் அல்குலை நோக்க) ஓர் உள்ளங்கை அளவுகூட இருக்குமோ இருக்காதோ என்று கருதுமாறு பரந்ததும், ஆகாயத்தின் மேல் செல்லாத அழகிய தேர்த்தட்டுப் போன்றதும் ஆகிய அல்குலை யுடையவள்.

வில்லைப்போல் இருக்கின்ற பஞ்சடிக்கும் கருவியால் அடித்து வெளியேற்றப் படுகின்ற பஞ்சியைப் பரற்கற்களோ, கொல்லும் நெருஞ்சில் முள்ளோ எனக் கருதி உள்ளம் பயந்து முகம் சிவக் கின்ற காலை யுடையவள்.

தன்னை அடைந்தவர்களிடம் குறிப்பிட்ட அளவிற்கும் அப்பாற் பட்ட புகழை அடையச்செய்கின்ற அழகிய திருப்பூவணத் தலத்தில் அமைந்த திசைகள் காண்பார் யாவரையும் மயக்குமாறு போல பார்க்கும் ஒவ்வொரு முறையும் எவ்வளவு திண்மையான உள்ள முடையவர்களையும் மயக்கும் பண்பினை உடையவள்.

உள்ளத்துத் தோன்றிய உணர்ச்சியைச் சிறிது சிறிதாக வளர்க் கும் அரிவைப் பருவத்திலே அருள்தன்மை வாய்ந்த திருப்பூவண நகரத்து இறைவன் வணங்கியவர்கள் உய்வு அடையட்டும் என்ற கருணையுள்ளத்தோடு உலா வந்ததை அக்காலத்துக் கண்ட தன் மையால் காலையில் அரும்புத் தன்மையதாக இருந்து, பகல் முழு வதும் விரிந்தும் விரியாத போது என்ற நிலையில் இருந்து மாலைக் காலத்தே நன்கு விளக்கமாக மலர்ச்சியடையும் காமம் என்னும் மயக்கத்தை உடையவள்.

தெரிவை ஞானியர் உள்ளத்தை மாற்றும் மருந்து. பிரமன் மால் முதலானோர் அழியும் காலத்துத் தோன்றும் இருட்டினும் கரிய தாய கூந்தலுடையவள். ஊழி முடிவில் , உலகை அழிக்கும் கடலினும் பெரிய கண்ணுடையவள். கடற் பவளத்தினும் சிறந்த சிவந்த உதடுடையவள். அமுதத்தினும் இனிய சொல்லுடையவள். மகாமேரு மலையினும் பெரிய முலையுடையவள். இழையினும் சிறுத்த இடையுடையாள். உலக அளவிலும் பெரிய நிதம்பம் உடையவள். பஞ்சினை மிதிக்கவும் பொறுக்காத பாதமுடையவள். காண்போரை

மயக்கும் திசையைப் போல யாவரையும் மயக்கும் தன்மையுடை யாள். காம மயக்கம் உடையவள்.

### அருஞ்சொற் பொருள்

தேற்ற - தெளிவு படுத்த. சாற்று அயன் - புகழ்ந்து பேசப்படும் பிரமன். கற்பம் - உலக முடிவுக்காலம். பகல் - சூரியன். பொற்பு – அழகு. விளர்ப்பு - வெளுப்பு. கைப்பு - கசப்பு. வீறிய – செருக்கோடுள்ள. கழங்கு - சூதாடு கருவி; கழற்சிக்காய். பாரித்து - பருத்து. பயோதரம் - முன். சீரித்தல் - ஆராய்ந்து முடிவு காணல். பரல் பருக்கைக் கற்கள். சேக்கும் - சிவக்கும். கூர்க்கும் - உள்ளதை அதிகப்படுத்தி வைக்கும்.

### விளக்கவுரை

மாற்று மருந்து - இயல்பாக இருக்கும் தன்மையை அதனோடு மாறுபட்ட தன்மைக்கு மாற்றும் மருந்து. பேரின்பம் ஒன்றையே விரும்பும் ஞானியரைச் சிற்றின்ப மோகத்தில் ஈடுபடுத்தும் தன்மையை உடையவள் ஆதலின் தெரிவை 'மாற்று மருந்து' எனப்பட்டாள். இருள் பழுத்த என்பது இருள் முற்றிய அதாவது சிறந்த கருமை முற்றிய கூந்தல் என்பதாம். கூந்தலின் கருமையை நோக்க, உலக அழிவுக் காலத்து இருளின் கருமை சற்று வெளுப் பாகத் தோன்றியமைபற்றி நிலவோ, காய்பகலோ எனக் குறித்தார். கற்ப காலத்து இருளின் கருமையை விடச் சிறந்த கருமையுடையது கூந்தல் என்பது பொருள். கருப்பினும் ஓர் அழகு தோன்றியமை யால் பொற்புற்று என்ருர். 'அல்லையாண்டமைந்த மேனி அழகன்' என்ருர் கம்பரும். இயற்கையாக இருக்கும் கடலின் அளவைவிட ஊழிக்காலத்துக் கடல் அளவில் பெரியது ஆதலினுலும், கொல்லும் தன்மையுடையதாலும் அதைக் குறித்தார். இவள் கண்ணை நோக்க அது குளமாகவும், சிற்ருேடையாகவும் தோன்றியது. நீள் கண்ணுள், நீலக்கண்ணுள், பெரிய கண்ணுள், நெடுங்கண் ணுள் என்ருர். அவை முறையே நீளத்தையும், நிறத்தையும், அக லத்தையும், கொல்லும் பண்பையும் குறித்தன. பெரியோர் என்ற வழிப் பெருமை உருவத்தில் கொள்ளாது பண்பிற் கொள்ளுதல் போல் ஈண்டும் நெடுமை பண்பின்மேல் நின்றது. தெரிவை போன்ற பெண்களுடைய கண்களின் பண்பு கொலைத் தொழிலே ஆதலின் அதையே அமைத்தார். சிவப்பு மிகுமேயாளுல் கறுப்பு ஆகும்; குறையின் வெளுப்பாகத் தோன்றும். கூந்தல் கருமையில் மிகுந்திருந்தது என்று சொன்னுற்போல உதடும் சிவப்பு மிகுந்து தோன்றிற்று என்ருல் குற்றமாகும். ஆதலின் அளவான சிவப் புடையது என்பதைக் குறித்தார். இறைவனுல் செருக்கு அடக்கப் பெற்றபின் இருக்கும் மேருமலை சிறியது ஆகலின் அது சிறுபந்து, கழங்கு ஆகக் காணப்பட்டது பொருந்தாது எனக் கருதி, செருக்குற்று

இருந்தபோது அமைந்த மேருவையே குறிப்பதற்காக 'வீறிய பொன் மேரு' எனக் குறித்தார்.

## தெரிவையும் ஓவியக்காரனும்

373. ... ... ... —சாலமணம்

374. தைவந்த காவில் தனித்திருந்தோர் ஓவநூல்
கைவந் தவனைக் கடிதழைத்து - மெய்வந்த

375. பூவண வாணனஞ்சொற் பொன்னனையாட் கன்றளித்த
மாவணக் காதை வகுத்தெழுதி - ஓவியத்திற்

376. காட்டு கெனநிறைபொன் கைகொடுப்ப ஓர்படத்தில்
தீட்டி அவனவள்முன் சென்றிருந்து

### பொழிப்புரை

மணம் மிகுதியும் தடவுகின்ற சோலையில் தனிமையுடன் அமர்ந்திருந்து ஒரு (சித்திரநூல்) ஓவியநூல் வல்லவனை விரைந்து வருமாறு கூப்பிட்டு, மெய்மையின் பண்பில் வழாது நடக்கும் திருப்பூவணத்து இறைவன் அழகிய மொழிபேசும் இயல்புடையவளாம் 'பொன்னனையாள்' என்பவளுக்கு அன்றொரு நாள் இரசவாதம் செய்து அருள் கொடுத்த உயர்ந்த அழகிய காதையை வகைப்படுத்தி எழுதிச் சித்திரத்தின் மூலமாகக் காட்டுவாயாக என்று சொல்லி நிறைந்த பொன்னை அவன் கையில் கொடுப்ப,

வாங்கிய அவன் ஒரு படத்தில் அவ்வாறே எழுதி எடுத்துச் சென்று அவள் முன்னால் அமர்ந்து,

### அருஞ்சொற் பொருள்

தைவந்த-தடவிய. காவில்-சோலையில். ஓவநூல்-ஓவ்யநூல். கைவந்தவன்-தேர்ச்சி பெற்றவன். மா வண்ணம் என்பது மாவணம் என்றாயிற்று. மா - உயர்ந்த. வண்ணம் - அழகு.

### விளக்கவுரை

மிகுந்த மணம் காற்றோடு சேர்ந்து வன்மையாக அடிக்குமாயின் மூர்ச்சித்து விழநேரும் ஆதலின் மிகுந்த மணம் அங்கு இருப்போரை இலேசாக வருடிக் கொண்டு இருக்கிறது என்றார். 'மெய்வந்த' என்பதைப் பூவணநகரத்து அடைமொழியாக்கி மெய்ம்மை நெறியில் பிறழாது வந்த பூவணம் எனக் கொள்ளப் பட்டது. இனி 'மெய் வந்த' என்பதை இறைவனுக்கே அடைமொழியாக்கி யாவராலும் காணப்படாத இறைவன் உடலோடு - மெய்யோடு கூடிவந்த பூவணவாணன் என்றும் கூறலாம். தொகுத்தெழுதுதல், வகைப்

படுத்தி எழுதுதல் விரித்து எழுதுதல் என்ற மூன்றனுள் வகைப்படுத்தி எழுதுதல் வேண்டும் என்பது தெரிவை விரும்பியது. காட்டுக+என=காட்டுகென. அகரம் தொகுத்தல் விகாரம். உயர்ந்ததும், அழகியதுமாதலின் மாவணக் காதை என்றார். காதை என்பது கதையை உள்ளடக்கிய பகுதி.

ஓவியக்காரன் தான் தீட்டிய மாவணக் காதையை விரித்துரைத்தல்

## 1. பொன்னனையாளின் இல்லத்துப் பூசனை

376. ... ... ... — தோட்டலர்மென்

377. போதரசு கையாற்செய் பொன்னனையாய் பொன்னனையாள்
மாதரசு வாழ்பொன் மனையிதுபார் - கோதை

378. புலரியிற் போந்து புனல்வையை கைமேல்
பலனுய்க்க மூழ்கும் படிபார் - நலனுய்க்கும்

379. கண்மணி பூண்டுமனம் காமுறுவெண் நீறணிந்து
பெண்மணியன் னளிருக்கும் பெற்றிபார் - உண்மைத்

380. தபத்தியானப் பெண்ணரசு தாழ்விலெழுத் தஞ்சும்
செபத்தியானம் செய்யும் செயல்பார் - சுபத்தியானம்

381. செய்து சிவனைத் திருவர்ச் சனைமுடித்துக்
கைகுவித்து மாதிருக்கும் காட்சிபார்

*பொழிப்புரை*

இதழ்கள் நன்றாக விரிந்திருக்கின்ற மென்மையான தாமரை மலரில் வீற்றிருக்கின்ற பிரமன் தானாகக் கையினாற் செய்யப்பெற்ற இலக்குமி போலும் அழகுடையவளே! (தெரிவைப் பருவப்பெண்ணை விளித்தான்.)

பொன்னனையாள் என்ற பெயரினையுடைய மங்கையர்க்கரசி வாழ்கின்ற அழகிய வீடு இதுதான் பார்ப்பாயாக.

பொன்னனையாள் விடியற்காலத்தே வந்து நீர் நிறைந்த வையையிலே கைமேல் பயன் கிடைப்பதற்காக மூழ்கும் நிலையைப் பார்ப்பாயாக.

நல்வினையில் நம்மைச் செலுத்தும் கண்ணாகிய அக்கமணியை அணிந்து, மனம் விரும்பும் திருவெண்ணீற்றை அணிந்து, பெண்களுக்குள் இரத்தினமாகிய பொன்னனையாள் அமர்ந்திருக்கும் தன்மையைப் பார்ப்பாயாக.

உண்மைத் தவத்தோடு தியானத்தையும் செய்து வருகின்ற மங்கையர்களுக்கு அரசியாகிய பொன்னனையாள் உயர்வுடைய ஐந்து எழுத்தாகிய மந்திரத்தைச் செபமாக ஓதித் தியானம் செய்யும் செயலையும் பார்ப்பாயாக.

மாது ஆகிய பொன்னனையாள் நல்ல தியானத்தைச் செய்து, அதன்பின் சிவனுக்கு அழகிய அர்ச்சனையும் முடித்துக் கைகூப்பி வணங்கி அமர்ந்திருக்கின்ற தன்மையைப் பார்ப்பாயாக.

## அருஞ்சொற் பொருள்

தோடு - இதழ். போது அரசு - தாமரை மலரின் அரசனாகிய பிரமன். புலரி விடியற்காலம். படி - தன்மை. கண்மணி - உருத்திராக்ஷம், அக்கமணி.

## விளக்கவுரை

பிரமன் உலகத்தைத் தன் நினைவினாலேயே உண்டாக்குகிறான். அவனே சிறந்த உருவமொன்றைத் தன் கையினாலேயே திறம்பட இயற்ற வேண்டுமெனக் கருதிச் செய்தால் அது எவ்வளவு அழகாய் இயங்குமோ அவ்வளவு அழகுடையவள் என்று தெரிவையை விளிக்கிறான் அந்த ஓவியக்காரன். மென் போதரசு கையாற் செய்யப்பட்டவள் எனக் கூறாது 'கையாற் செய் பொன் அனையாய்'எனக் குறித்தது, பிரமன் உலகத்தை நினைவு மாத்திரையால் உண்டாக்கிப் பின் அழகு ஓவியமாகத் தானே ஒன்றை இயற்ற விரும்பியவன் தன் தாயின் (இலக்குமி-பொன்) உருவத்தைப் போலவே இயற்றினான் என்னும் கருத்தை உள்ளடக்குதற்காக. விநாயகர் திருமணம் செய்து கொள்வதற்குத் தன் தாயைப் போன்ற பெண்ணையே தேடிக் கொண்டிருக்கிறார் என்பது உலகியற் செவி வழிச் செய்தி. இவ்வாறு கூறுவதும் திருமகள் போன்ற அழகுடையவள் என்று கூறுவதும் ஒன்றெனக் கொள்ளலாகாது. தாயின் அழகு முதலியவற்றில் காணும் குறைபாடுகளைக் கண்டிருக்க முடியும் பிரமன். தான் இயற்றும் போது, அவைகளை நீக்கி நல்லழகு பெறவே அமைப்பான் ஆதலின் திருமகளினும் சிறந்த அழகுடையவளே! என்று விளித்தார் எனக் கொள்ளலாம்.

பலன் உய்க்க என்பதில் 'உய்க்க' என்பது நெல் விளைய மழை பெய்தது என்றாற்போல காரியப் பொருளிலே வந்த செயவென் வாய்பாட்டு வினையெச்சம். கண்மணி - உருத்திராக்கம். உடலில் அமைந்துள்ள கண்கள் மனம் ஒன்றுபட்ட விடத்து வழியின் இயல்பை மட்டுமே தெரிவிக்கும். நன்மை, தீமைகளை உணர்வது அவரவர்களின் அறிவாற்றலைப் பொறுத்தது. ஆனால் தன்னைக் கருத்துடனோ, கருத்தின்றியோ தொட்டவுடனேயே நல்லவழியில் செலுத்தி நன்மையைக் கொடுப்பது ஆதலின் நலனுய்க்கும்.

கண்மணி என்றார். அக்ஷம்-கண்; ஆதலின் அக்கமணி என்பதைக் கண்மணி எனக் கொண்டார் எனக் கூறலும் உண்டு. உருத்திரனின் கண் போன்றது என்ற காரணத்தால் உருத்திராக்கம் என்றலும் உண்டு. சிவச் சின்னங்களில் இரண்டாம் நிலை பெறுவது உருத்திராக்கம்-கண்மணி.

பார்த்தவர்களின் மனம் விரும்பக் கூடிய வெண்ணீறு என்றார். நீறு அனைவரையும் தன்வயம் இழுக்கும் நிலையுடையது. இதனாலேயே 'நீறு இலா நெற்றி பாழ்' என்றார். இது சிவச்சின்னங்களில் முதல் நிலை பெறுவது.

உண்மை, தவ, தியான, பெண்ணரசு என்றும் ஒற்று (ப்) இல்லையேல் உண்மைத் தவத்தி, ஆன பெண்ணரசு என்றும் பிரிக்கலாம். உடல்தவநிலை உள்ளத்தவ நிலை என்ற இரண்டனுள் உடல்தவ நிலையை மேற்கொள்ளாதவள் பொன்னனையாள். உடலால் தவநிலை கொண்ட தவசிகளாலும் உள்ளத்தைத் தியான முறையில் நிறுத்த முடியாது அல்லலுறுகின்றனர். உண்மைத்தவம் ஒருநிலைத் தியானமாகிய உள்ளத்தவமே. தியானமாகிய உள்ளத்துத் தவத்தில் சிறந்திருந்தமையால் உண்மைத் தவத் தியானப் பெண்ணரசு எனக் குறிக்கப்பட்டாள். இன்னும் காயிலை தின்னுதல் கானில் உழல்தல் முதலாகிய தவநிலையை மேற்கொள்ளாது 'உற்ற நோய் நோன்றல்' 'உயிர்க்கு உறுகண் செய்யாமை' என்ற வள்ளுவரின் தவநெறியைக் கடைப்பிடித்து அடியார்க்கு அமுது செய்தல் முதலியவற்றை மேற்கொண்டதால் 'உண்மைத் தவத்தியான' எனக் கொள்ளினும் இழுக்கில்லை.

## 2. பொன்னனையாள் கோயிலுக்குச் சென்று மீளுதல்

381. ... ... ... - பெய்வளையாள்

382. ஆயத் தொடும்பூவை அங்கணனைச் சேவிக்கக்
கோயிற் புகுந்துநின்ற கொள்கைபார் - ஏயத்

383. திருத்தஞ்சில் ஓதி திருமுன்பு சுத்த
நிருத்தஞ்செய் கோல நிலைபார் - நிருத்தம்

384. புரிந்தங்கு நின்றரிதிற் போந்து மனைக்குட்
பரிந்தங் கிருக்கும் படிபார்

*பொழிப்புரை*

பெய்யப் பெற்ற வளையலை அணிந்தவளாகிய பொன்னனையாள் தோழியர் கூட்டத்தொடும் திருப்பூவணத்துள்ள அழகிய அருட்கண்ணுடையனாகிய இறைவனை வணங்குதற்காகத் திருக்கோயி

லுக்குச் சென்று கோயிலினுள் புகுந்து நின்ற நிலையைப் பார்ப்பாயாக.

பொருந்துமாறு ஒழுங்கு செய்யப்பெற்ற அழகிய சிலவாகிய கூந்தலை யுடையாளாகிய பொன்னனையாள் எம்பெருமான் திருச்சந்நிதியில் சுத்த நிருத்தம் எனப்படும் நாட்டியத்தை ஆடும் அழகு நிலையைப் பார்ப்பாயாக.

நாட்டியமாடியபின் திருக்கோயிலினின்றும் பிரியாவிடை பெற்று வந்து வீட்டினுள் அன்புடன் அங்கு இருக்கும் தன்மையைப் பார்ப்பாயாக.

### அருஞ்சொற் பொருள்

பெய்வளை-போடப்பட்ட வளையல். ஆயம்-தோழியர் கூட்டம். ஏய+திருத்து+அம்+சில்+ஓதி. ஏய்தல்-பொருந்துதல். போந்து-வந்து. பரிந்து-அன்புகொண்டு.

### விளக்கவுரை

வளையல் ஒன்றிரண்டன்றி மிகுதியும் அணிந்திருந்தாள் என்பதற்காகப் 'பெய்வளை' எனக் குறித்தார். கண்ணுக்கு அழகு கண்ணோடிக் காத்தல். சூரியன், சந்திரன், அக்கினி ஆகிய முக்கண்களை யுடைமையால் முக்கண்ணன் என்றும், உலகத்தை தோற்றுவிப்பதற்குக் காரணமாகிய ஞானக் கண்ணை உடைமையால் காரண நேத்திரத்தான் என்றும் கூறப்படும். 'இறைவன் அடியவர்களுக்கு அருள் செய்ய முற்படும் போது 'அங்கணன்' என்ற பெயரைப் பெறுகிறான். அருள் செய்து காப்பாற்றுதலே கண்ணின் அழகு எனக் குறித்தார். 'அங்கணர் ஓலை காட்டி ஆண்டவர் தமக்கு நாடு' என்ற பெரிய புராணத் தொடராலும் இவ்வுண்மை தெளியலாம். கொள்+கை=. கொள்கைதன்னால் கொள்ளப்பட்ட-மேற் கொள்ளப்பட்டஒழுக்கம் (கை-ஒழுக்கம்).கடமை என்பது இயல்பாகநிகழ்வது; நிகழ வேண்டுவது. கொள்கை என்பது தானாக அமைத்துக்கொள்வது, அறிவொடு பட்டது. இவ்வாறு கொள்கைகளாகக் கொள்ளப்பட்டவைகள் தாம் பின்னர்க் கடமை என்று பெயர் பெறுகின்றன. பொன்னனையாள் கோயில் புகுவதைக் கொள்கையாகக் கொண்டிருந்தாளென்பது பெறப்படுகின்றது. கூந்தல் ஒப்பனையானது பொருத்தமாகத் திருத்தம் உறச் செய்யப்பட்டு இருக்கின்றது. ஓதியானது சிலவாக இருக்கின்றது என்றது குறைவான அளவுடையது என்ற பொருள் அல்ல; சிலவாகிய ஒப்பனைகளைக் கொண்டது. ஓதியில் ஒரே சமயத்தில் பல்வகை ஒப்பனை அமைப்பதுண்டு. இங்கே ஒருவித ஒப்பனை அமைக்கப்பெற்று இருக்கிறது என்பதனால் சில் ஓதி என்றார். சுத்த நிருத்தம் என்பது சொக்கம் என வழங்கப்

படும் ஒரு வகைக்கூத்து ஆகும். கோலநிலை-அழகு நிலை. போதந்து என்பது போந்து என்று ஆயிற்று. போதருதல்-வருதல். (அரிது-அரியது - முடியாதது) அரிதில்-பிரிய முடியாத நிலையில் பிரிந்து வந்து எனப் பொருள் கொள்க. அரிதிற் போந்து என்பதற்கு விரைவில் வந்து என்பது ஈண்டுப் பொருந்தாமை அறிக.

## 3. பொன்னனையாள் அடியார்க்கு அமுது அருத்துதல்

384. ... ... ... - அருந்த
385. முருந்து நகைமனைக்குள் மொய்த்தீண்டிச் செல்லும்
திருந்துதிருத் தொண்டர் திரள்பார் — வருந்தங்கள்
386. நாயன் அடியாரை நண்ணி எதிரிறைஞ்சித்
தூய அமுதருத்தும் தோற்றம் பார்.

*பொழிப்புரை*

இறக்கைகளின் அடிக் குருத்துப்போலும் பற்களில்தோன்றும் சிரிப்பை உடைய பொன்னனையாளின் வீட்டுக்குள் உணவருந்துதற்காக மொய்த்து நெருங்கிச் செல்லுகின்ற சிறந்த திருத்தொண்டர் கூட்டத்தைப் பார்ப்பாயாக.

தன் வீடுநோக்கி வருகின்ற தங்கள் தலைவனாகிய சிவனுடைய அடியவர்களை அருகே சென்று வணங்கி அழைத்துவந்து தூய அமுதத்தை உண்பிக்கின்ற காட்சியைப் பார்ப்பாயாக.

*அருஞ்சொற் பொருள்*

முருந்து-இறக்கைகளின் அடிக்குருத்து; இது பல்லிற்கு உவமை. ஈண்டுதல்-நெருங்குதல். திரள்-கூட்டம். நண்ணுதல்-அருகே செல்லுதல். இறைஞ்சி-விழுந்து வணங்கி. அருத்துதல்-உண்பித்தல்.

*விளக்கவுரை*

பறவைகளினுடைய சிறகுகளின் அடிக் குருத்தினைப் போல வெண்மையுடையனவாக இருப்பது பற்றி முருந்து நகை யென்றார். இங்கே பல்லின் தோற்றத்தைக் குறிக்கு முகத்தால் சிரிப்பை உணர்த்தி நின்றது. விருந்தினர்களை உபசரிக்கும் விருந்தோம்புகிறவர்கள், விருந்தினர்களைத் தூரத்தே கண்டபோது இன்முகம் காட்டலும், அருகில் வந்தபோது இன்சொல் கூறலும், அவர்கள் ஒத்துக்கொண்டவுடன் இனியன செய்தலும் வேண்டும் என்பது பரிமேலழகர் கூற்று. (குறள் 90-இன் விரிவுரை) அதற்கு இலக்கியமாக இந்நூலாசிரியர் இன்முகத்தோடு இருந்தாள் என்பதைக் குறிக்கப்

பொன்னனையாள் என்னுது 'முருந்து நகை' என்று கூறிய தொடரா லேயே புலப்பட வைத்தார். இரண்டாவது செயலாகிய இன்சொல் கூறல் சாதாரண விருந்தினர்க்கே ஆகும். பெரியோர்முன் தான் முன் மொழிதல் பெரும்பாவம் ஆகையால் அவர்கள் வருமுன்தானே எதிர் சென்று நிலத்தில் விழுந்து வணங்கி அழைத்து வந்தாள் என் பதை நாயன் அடியாரை நண்ணி எதிர் இறைஞ்சி என்பதனுற் கூறினுர். மூன்றும் செயலாகிய இனிதாற்றல் என்பதைத் தூய அமுதருத்தும் தோற்றம் என்பதனுற் கூறினுர். ஒரு பொருளுக்கு அமைய வேண்டிய பண்புகள் அவ்வளவும் செம்மையான முறையில் அப்பொருளிடம் அமைந்திருக்குமானுல் அப்பொருளைத் 'திருந்து' என்ற அடைமொழியோடு சேர்த்துக் குறித்தல் புலவர் மரபு. 'திருந்து மொழிமோசி' எனப் புறநானூற்றினுள் உறையூர் ஏணிச் சேரி முடமோசியார் குறிக்கப்படுகின்றுர். அவ்வாறே தொண்டர் களுக்கு வேண்டிய பண்புகள் முற்றும் நிரம்பப் பெற்றவர் என்பதைக் குறிக்கத் 'திருந்து திருத்தொண்டர்' எனக் குறித்தார். அல்லது திருந்து என்பதைத் திருவுக்கு அடைமொழியாக்கி (திரு-செல்வம்) சிறந்த செம்மையாகிய செல்வம் எனப்படும் வீடுபேற்றை விரும்பி அதற்கான தொண்டினை மேற் கொள்ளுகிறவர் எனக் கூறினும் அமையும்.

முருந்து நகையினுடைய மணைக்குள் அருந்த மொய்த்து ஈண்டிச் செல்லும் திருந்து திருத்தொண்டர் என மாற்றிப் பொருள் கொள் ளுக. மொய்த்தல் - ஒரு பொருளை வெளியே தெரிய வொட்டாது சூழ்ந்து மூடிக் கொள்ளுதல். பொன்னனையாளின் இல்லம் தெரியக் கூடாத வகையில் தொண்டர்கள் மொய்த்துக் கொண்டார்கள் எனக் குறிக்கிருர் ஆசிரியர். அற வழியினுல் வந்து உரிய முறை யில் தக்கவர்களிடம் சேர்வதனுல் அமுதுக்குத் தூய்மை என்ற அடைமொழி கொடுத்தார்.

## 4. இறைவன் சித்தவுருவத்தில் அமர்ந்திருத்தல்

386. ... ... ... ... - மேயசிவன்

387. தன்னுருவம் பொன்னுருவம் ஆகச் சமைக்கவிளம்
கன்னி சமைத்த கருஉருப்பார் - அன்னம்

388. தொடுத்த கருத்தறிந்து சுந்தரப்பேர் அண்ணல்
எடுத்தசித்த வேடத் தெழில்பார் - வடித்தவயில்

389. ஒத்தவிழி மாளிகை முன் உற்ரெருபால் யோகபட்டச்
சித்தரிறு மாந்திருக்கும் செய்கைபார்

### பொழிப்புரை

இளமைக் கன்னியாகிய பொன்னனையாள் பொருந்திய சிவ பெருமானின் வடிவத்தைப் பொன் வடிவமாகச் செய்வதற்காக வேண்டிச் செய்தமைத்திருக்கின்ற அச்சு உருவத்தைப் பார்ப் பாயாக,

அன்னம் போன்றவளாகிய பொன்னனையாள் உள்ளத்தில் அமைத்திருக்கும் கருத்தைத் தெரிந்து கொண்டு 'சுந்தரன்' என்ற பெயருடைய கடவுள் மேற்கொண்டிருக்கிற சித்தனைப் போன்ற வேஷத்தின் அழகைப் பார்ப்பாயாக.

சோமசுந்தப் பெருமானாகிய யோகபட்டம் கட்டிய சித்தர் கூர்மையாக வடிக்கப் பெற்ற வேலைப் போன்ற விழிகளையுடைய பொன்னனையாளின் வீட்டின் முன்னே வந்து ஒருபக்கத்தே செம் மாந்து அமர்ந்திருக்கும் தன்மையைப் பார்ப்பாயாக.

### அருஞ்சொற் பொருள்

கருவுரு - அச்சுவடிவம். தொடுத்த - அமைத்த. வடித்த - கூர்மையாகச் செய்யப்பெற்ற. அயில் - வேல். யோகபட்டம் - யோகம் செய்கிறவர்கள் முழந்தாளை மேல் நோக்கி மடக்கி அமரும்போது, முழந்தாளோடு முது கின் கீழ்ப்பாகத்தை இணைத்துக் கட்டப்படுவதாகிய ஒருவகை வார்ப்பட்டை.

### விளக்கவுரை

மண், உலோகம் முதலியவைகளால் பொம்மை, சிலை முதலியன செய்யும் தொழிலாளர்கள் அனைத்து வேலைப்பாடுகளும் அமையும் முறையில் அச்சு உருவம் ஒன்று செய்து வைத்துக்கொள்வார்கள். உலோகங்களை உருக்கி அந்த அச்சு உருவத்தில் வார்த்தால் செம் மையாக அமையும். அவ்வாறே பொன்னனையாளும் பின் பொன்னை உருக்கி வார்த்துச் செய்யக்கூடிய வகையில் அச்சு உருவம் ஒன்று செய்து வைத்திருந்தாள் எனக் கூறுகிறார். மனோன்மணீய முடை யாரும் 'பொதியில் நன்முகடு ஆம் பொற்புறு கரு' எனப் பொதிய மலையைக் கரு எனக் கூறியுள்ளார். தான் விரும்பிய சிலையுருவம் தோன்றுதற்குக் கரு சினை ஆக இருப்பதால் அவ்வுருவம் கரு எனப் பெயர் பெற்றது.

பொன்னனையாள் அன்னத்தின் நடையை மட்டுமே யன்றிப் பண்புகளாலும் ஒத்திருந்தமையின் அன்ன நடை எனக்கூறாது அன்னம் எனப் பொதுவாகவே கூறிவிட்டார். ஏனைய பண்புகளாவன உணவின்றி வாழமுடியாத அன்னம் நீரை நீக்கி உடன் கலந்த பாலைமட்டும் உண்ணுதல் போல, வாழ்வில் ஆசை அதாவது ஒரு இழுப்புச் சக்தி இன்றி வாழ முடியாத உள்ளம் தாழ்ந்த ஆசைகளைக் கொள்ளாது விலக்கி உயர்ந்த ஆசையாகிய

இறைவனைப் பொன்னுருவமாகச் சமைத்தல் வேண்டும் என்ற ஆசையைக் கொண்டது. குளித்தல் ஆகிய கடமையைச் செய்தல் இன்றி வாழ முடியாத அன்னம் உயர்ந்த நீரைத் தேர்ந்தெடுத்தல் போல தொழிலின் ஆக்கம் இன்றி உயர்நிலை பெற முடியாது என்று அறிந்த பொன்னனையாள் தன் உயர்வுக்கு ஏற்ப அடியார்களுக்கு அமுதருத்துதலாகிய செயலை மேற்கொண்டது.

சித்த வேடம் என்பதை இரசவாதம் செய்கிறவர்கள் — ஒரு உலோகத்தை வேறு உலோகமாக மாற்றுகிறவர்களின் வேஷம் எனக் குறிக்கலாம். இவ்வாறு வேடம் தாங்கி இரசவாதம் செய்தது மதுரைச் சோமசுந்தரப் பெருமான் நிகழ்த்திய திருவிளையாடல் ஆதலினால் சித்தவுருக் கொண்டிருந்தவரைச் சுந்தரப் பேர் அண்ணல் எனக் குறித்தார். சுந்தரப்பேர் அண்ணல் – சோமசுந்தரக் கடவுள்.

## 5. சித்தரால் சித்தம் மகிழ்ந்து எண்ணியது முடித்தல்

389 ... ... ... —அத்தகைமை

390. கண்டெதிர் சென்றுமலர்க் கால்பணிந்தன் பென்னுமயல்
கொண்டெதிர் நிற்குமவள் கொள்கைபார் - வண்டுளரும்

391. நெய்ய குழல்வருந்து நின்கருத்தே தென்றெங்கள்
அய்யர் முறுவல் அரும்புதல்பார் - தையலரி

392. காணாத் திருவுருவம் காணும் கருத்தரவப்
பூணார்க் குரைக்கும் புதுமைபார் -நீணாகச்

393. சித்தர் உரைப்படியத் தேமொழியில் விற்கரும்பொன்
அத்தனையும் முன்புவைத்த ஆர்வம்பார் - வைத்ததன்மேல்

394. நீற்றைச் சிதறியையர் நேரிழைநீ இத்தையெரி
ஏற்றப் பசும்பொன்னும் என்பதுபார் - கோற்றொடியும்

395. கட்டுசடைச் சித்தர் கருதுமுறை யேயெரிபெய்
தட்டகரும் பொன்செம்பொன் ஆனதுபார் - வட்டமுலைக்

396. கொம்பனாள் பூவணத்தெம் கோமானை ஆணிதீர்
செம்பொனாற் கண்ட திருவுருப்பார் - விம்பவாய்

397. வள்ளி முத்தம் கொள்ளும் மகப்பெற்றோன்மேனியைக்கண்
டள்ளிமுத்தம் கொள்ளுமவள் அன்புபார் - வெள்ளி வெற்பன்

398. அன்புக் கிளகியவள் அங்கை நகரேகை
தன்பொற் கபோலம் தரித்ததுபார் - வன்பிற்

399. பிடித்த விரதப் பெறும்பேறு பாவைக்
கடுத்த விசேடம் அதுபார்,

பொழிப்புரை

யோகபட்டம் கொண்டு சித்தர் ஒருவர் அமர்ந்திருக்கும் அந்தத் தன்மையைக் கண்டு, அவர் எதிர் சென்று, தாமரைமலர் போன்ற திருவடியைப் பணிந்து, அன்பு என்னும் மயக்கத்தால் கட்டுண்டு அச்சித்தரின் எதிரில் செய்வதறியாது நிற்கும் செய்கையைப் பார்ப்பாயாக.

எங்களின் தலைமை நிலையுடையராகிய அச்சித்தர், வண்டுகள் கிண்டுகின்ற கொழுமை வாய்ந்த கூந்தலையுடையவளே! துன்பம் அமைந்த உன்னுடைய கருத்து யாது ? என்று கேட்ட அவர் முகத்தில் புன்சிரிப்புத் தோன்றுவதைப் பார்ப்பாயாக.

அழகிற் சிறந்தவளாகிய பொன்னனையாள் பாம்புகளை ஆபரணமாக அணிந்த இறைவனுராகிய சித்தருக்கு, திருமாலும் பார்க்க முடியாத இறைவன் திருவுருவத்தைப் பொன்னால் செய்து காண வேண்டும் என்ற தன் கருத்தை எடுத்துரைக்கும் புதுமையைப் பார்ப்பாயாக.

நீண்ட பாம்புகளை அணிந்த இறைவராகிய சித்தர் `உன் இல்லில் உள்ள இரும்புப் பாத்திரங்களைக் கொணர்க எனக் கூறிய சொற்படி அந்தத் தேன்போலும் மொழியுடைய பொன்னனையாள் தன் இல்லில் உள்ள இரும்பு அத்தனையும் கொண்டுவந்து சித்தரின் திருமுன்பு வைத்த ஆசையைப் பார்ப்பாயாக.

வைத்த அந்த இரும்புச் சாமான்களின்மேல் தலைவராம் சித்தர் திருநீற்றைத் தூவி, நேர்மையான ஆபரணங்களை அணிந்த பெண்ணே! நீ இதை நெருப்பில் வைத்தால் பசும்பொன்னாக ஆகி விடும் என்று சொல்லுவதைப் பார்ப்பாயாக.

அழகிய வளையல் அணிந்த பொன்னனையாளும், இறுகக் கட்டிய சடையையுடைய சித்தர் எண்ணிய முறைப்படியே நெருப்பில் அமைத்துச் சூடு செய்யவே இரும்பு பொன்னாக மாறியதைப் பார்ப்பாயாக.

வட்டமாக அமைந்த முலைகளையுடைய கொம்பினை ஒத்தவள் திருப்பூவணத்து எழுந்தருளியுள்ள எம்மரசனை உரையாணியாலும் இவ்வளவு மாற்றுடையது என்று அறிய முடியாத உயர்ந்த செம் பொன்னால் செய்தமைத்த அழகு வடிவத்தைக் காண்பாயாக.

கோவைக் கனிபோன்ற வாயினையுடைய வள்ளியென்னும் குறப் பெண்ணின் முத்தங்களை ஏற்றுக் கொள்ளும் மகவாகிய முருகனைப் பெற்றவனாகிய பூவணேசனுடைய (பொன்னாற் சமைத்த) திருவுருவத்தை (ஆசை தீரக்) கண்டு கட்டித் தழுவி முத்தம் கொடுக்கும் அவள் அன்பு நிலையைப் பார்ப்பாயாக.

வெள்ளிமலையில் வீற்றிருந்தருளும் இறைவன் அப்பொன்னனை யாளின் அன்புக்கு மனமிரங்கி, அவளுடைய அழகிய கை நகங் களின் அடையாளத்தைத் தன்னுடைய அழகிய கன்னத்திலே ஏற்றுக் கொண்டதைப் பார்ப்பாயாக,

வன்மையாகக் கைப்பிடித்த விரதத்தால் விளைந்த பெரும் செல்வம் பொன்னனையாளுக்கு வந்து சேர்ந்த முறைமையைக் காண்பாயாக.

## அருஞ்சொற் பொருள்

தகைமை—தன்மை. மலர்க்கால்-தாமரை மலர்போன்ற திருவடி. உளர்தல்—கிண்டுதல். செய்ய – கொழுமையுடைய. அரி - திருமால். அரவப்பூணூர் - பாம்பணியுடையார். கரும்பொன் - இரும்பு. கோல் தொடி - அழகிய வளையலை அணிந்த பொன்னனையாள். ஆணி - உரையாணி. விம்பம் - கோவை - கனி. நகரேகை - நகம் பதிந்த கோடு. கபோலம் - கன்னம். பெறும்பேறு - பெருஞ்செல்வம்.

## விளக்கவுரை

உலகைக் காக்கும் திருமாலே கண்டறிய முடியாத உருவத்தை ஒருபெண் செய்து காணவேண்டும் என்ற,நினைத்தாலேபெருஞ்சிரிப் புக்கிடமான செயலை ஒரு சித்தரின் முன் தானே எடுத்துக் கூறு வது வியப்பு என்பதனாலேயே 'புதுமை' பார் எனக் குறித்தார்.

வைத்த அதன் மேல் என்றது அகரம் தொகுத்தல் விகாரமாக நின்று வைத்ததன் மேல் என முடிந்தது.

ஆணி தீர் செம்பொன் என்பது உரையாணியாலும் இத்துணை மாற்று எனக் கணக்கிட முடியாத உயர்ந்த நிலையுடைய செம் பொன் என்பதாம்.

விரதம் என்பது வன்மையாக விடாப்பிடியாக இருந்து மேற் கொண்ட கொள்கையை முடிப்பது. அவ்வாறு செய்து முடிப்பின் அதற்குரிய பெருஞ் செல்வமாகிய பயன் கட்டாயம் வந்து செய்த வரை அடைந்தே தீரும் என்றுரைத்தார்.

## மாவணக்காதை கேட்ட மாண்புடையாள் பூவணேசன் வருகை கேட்டல்

399. ... ... — முடித்தகுழல்

400. மாதேயென் றேவநூல் வந்தோன் வகுத்துரைக்கும்
போதே விரகம் புறம்பொசியக் - காதார்

401. குழையாள் குழைந்தறிவு கொள்ளைபோய் நெஞ்சம்
தழையாமை நின்று சருகாம் - பொழுதில்

402. திளைத்தவுமை யம்மை திருக்கையால் வைத்து
வளர்த்த தருநிழலில் வாழ்வோன் - கிளைத்துமனப்

403. பத்தி மலரவந்நாட் பானு வழிபட்டோன்
அத்தி மலர அருள்செய்தோன் - முத்தி

404. மலரமலர் புட்ப வனத்தான் பவங்கள்
புலரவரும் தேவி புரத்தான் - குலவு

405. நளச்சக்ர வர்த்திகலி நாசஞ்செய் நாதன்
இளச்சக்ர வர்த்திபணி எம்மான் - வளைச்சக்ர

406. நீளத்தான் காணாத நீளத்தான் தேவிபுகல்
தாளத்தான் சங்கார தாண்டவத்தான் - கேளொத்தான்

407. பூவணத்தெம் கோமான் பொலந்தேர் மறுகணைய
ஏவணக்கண் மின்கேட்டு.

*பொழிப்புரை*

சிக்கு நீக்கிச் சீவி முடிக்கப் பெற்றகூந்தலை யுடையவளாய்க் காதலைத் தோற்றுவிக்கும் பெண்ணே! (கூறிய முறையில் யாவும் அமைந்திருக்கும் தன்மைகளை நன்றாகக் காண்பாயாக) என்று ஓவிய நூலில் சிறப்புப் பெற்று வந்தோன் தெரிவை விரும்பியவாறே வகைப் படுத்திச் சொல்லிவரும் அப்போதே (தெரிவைக்குக்) காமநோய் புறம்பேயும் வெளிப்பட, காதில் அமையப்பெற்ற குழையையுடைவள், உடல் குழைந்து, அறிவு மயக்கமுற்று, மனம் உணர்ச்சி பெற்றுத் துள்ளிக் கிளர்ச்சி பெறாமல் அப்படியே சோர்ந்து காய்ந்த இலையைப் போல் வாடும் பொழுதில்,

இடம் பிரியாதிருந்து இறையின்பத்தில் நன்றாகத் திளைத்த இறைவி தம்முடைய அழகிய கைகளால் வைத்துண்டாக்கி வளர்த்த பாரிசாதத் தருவினுடைய நிழலில் வாழ்ந்து கொண்டிருக்கும் பூவணேசன்;

மனத்தில் உள்ள அன்பு என்னும் மலர் பல இதழ்களைத் தோற்றுவித்துக் கொண்டு மலருமாறு முன்னொரு காலத்தில் சூரியனால் வழிபடப் பெற்றவன்;

எலும்புகளெல்லாம் மலர்களாக மலருமாறு திருவருள் செய்தவன்;

தன்னை அடைந்தார்க்கு வீட்டின்பம் கிடைப்பதற்காகத் தான் மலர்ந்திருக்கின்ற புட்பவனம் என்ற ஊர்க்குடையவன்;

பிறப்புக்கள் எல்லாம் வற்றிப் போகுமாறு நன்மையைத் தரவருகின்ற 'தேவிபுரம்' என்ற பூவண நகரத்துக்கு உடையவன்;

நளன் என்னும் பேரரசனைத் தொடர்ந்த வறுமையைச் சின்ன பின்னமாக்கி யொழித்த தலைவன்;

இளன் என்னும் பேரரசனால் வணங்கப் பெற்ற எம் தலைவன்;

சங்கு, சக்கரம் ஆகியவற்றையுடைய நெடியோன் எனப்படும் திருமாலினால் அறிய முடியாத உயர்வுடையவன்;

உமையம்மையால் விருப்பத்தோடு அமைக்கப் பெறுகின்ற தாளத்தை யுடையவன்;

உலக அழிவுக்கென ஆடப்பெறும் ஒருவகை நாட்டியத்தை யுடையவன்;

தன்னை விரும்பி அடைந்தார்க்கு உறவு எனப்படும் நிலையுடைய வனாக இருப்பவன்;

திருப்பூவணங் கோயில் கொண்டெழுந் தருளியிருக்கும் எம்மரசன் ஏறி வருகின்ற அழகிய தேர் தெரிவைப் பருவத்தாள் இருக்கும் தெருவை வந்து பொருந்தவே, தேர் வந்துவிட்டது என்பதை அம்பின் வடிவுடையதாய் விளங்கும் கண்ணையுடைய மின்னற் கொடியாம் தெரிவை கேட்டு,

### அருஞ்சொற் பொருள்

விரகம் - காமநோய். பொசிய - கசிய. தழையாமை – புத்துணர்ச்சி பெறாமை. திளைத்த - இன்பத்தை இடையறாது நுகர்ந்த. கிளைத்து-இதழ்களாம் கிளைகளை உண்டாக்கி. பத்தி – அன்பு. பானு - சூரியன். அத்தி - எலும்பு. பவம்-பிறவி. கலி - கலிபுருடன்; வறுமை. வளை - சங்கு. நீளத்தான் – நெடியோனாகிய திருமால். சங்கார தாண்டவம் – அழிவுக் காலத்து ஆடும் தாண்டவம். கேள்-சுற்றம். பொலம் – அழகு. ஏ - அம்பு. மின் - மின்னலைப் போன்ற தெரிவை.

### விளக்கவுரை

மாவணக் காதை தீட்டிய ஓவியக்காரன் ஏவணக்கண் மின்னாகிய தெரிவையின் முன்நின்று விரித்துரைக்கும்போது அவள் உள்ளத்தே அடங்கியிருந்த காமநோய் வெளியே கசிந்து வரத் தொடங்கியது என்பதை 'விரகம் புறம் பொசிய' என்று குறித்தார்.

'குழையாள் குழைந்து' என்பது முரண்தொடையாகும்; பொருள் நீங்கிய சொல்லளவில்.

நெஞ்சம் தழையாமை என்பது கிளர்ந்தெழும் புத்துணர் வுடையதாய் சுறுசுறுப்புடன் திகழும் ஒருவகைத் தன்மை யில்லா திருத்தல்.

உள்ளத்தில் அன்பு மிகுதிப்பட வணங்கிய சூரியனுக்கு அருள் செய்தோன் என்றார். சூரியன் என்பதற்கேற்ப அவன் உள்ளத்தைக் குளமாகக் கொண்டு அன்பு என்னும் தாமரை மலர் பல இதழ்க

ளாகிய கிளைகளை உண்டாக்கிக் கொண்டு மலர வழிபட்டான் என நயம்பட அமைத்தார்.

தருமஞ்ஞன் என்னும் அந்தணன் கங்கைக்குச் சென்று கரைப்பதற்காக உடன் கொண்டுவந்த தந்தையின் எலும்புடன் மணிகர்ணிகா தீர்த்தக் கரையில் அமர்ந்திருக்க அவ்வெலும்பை அத்தீர்த்தத்தில் தாமரை, குவளை ஆகிய பூக்களாக மாறி மலருமாறு அருள் செய்தான் என்பதாம்.

புட்பவனம் இடத்தால் மலர்ந்தது. அது தன்னை வந்தடைந்த உயிர்க்கு முத்தியை மலரவைப்பது. மலர வைத்தல் என்பது அடைய வைத்தல் என்னும் பொருள் தந்தது.

'தேவிபுரம்' என்பது திருப்பூவணத்துக்கு வழங்கும் பெயர்களுள் ஒன்று.

நளமன்னனைப் பற்றிய கலியைத் திருப்பூவணநாதன் நீக்கிய வரலாறு முன் 24-ஆவது கண்ணியிலேயும் குறித்தார்.

'இளன்' என்ற மன்னன், தன்னிடம் வந்த ஆண்களைப் பெண்களாக மாற்றும் வனமொன்றில் அறியாது புகுந்து பெண்ணுருக் கொண்டான். பின்னர் சில முனிவர் ஆணைப்படி அசுவமேதம் செய்து இத்தலத்திறைவனை வணங்கிப் பழைய நிலை பெற்றான்.

மாவலி மன்னனுக்காக நீண்ட திருக்கோலம் கொண்ட காரணத்தால் திருமால் நீளத்தான் எனப்பட்டான். நீளத்தானாலும் காணமுடியாத உயர்வுடையவன் என அடியைத் தேடிக் காண முடியாத வரலாற்றை உள்ளுறையாக வைத்துக் கூறினார்.

இறைவன் தாண்டவமாடுங்கால் இறைவி தாளமுறை அமைக்கும் மரபை ஒட்டித் 'தேவி புகல் தாளத்தான்' என்றார். சங்கார தாண்டவம் என்பது உலகை அழித்தபின் சுடலையில் நின்றாடும் ஒரு வகை நாட்டியம்.

ஏ - அம்பு. அம்பினைப் போன்ற கண்ணுடையவள் என்பதை ஏ வண்ணக்கண் என்றார். வண்ணம் என்பது வணம் என இடைக் குறைந்தது.

## தெரிவை சென்று தீவணனைத் தெரிசித்தல்

407. ... ... ... எதிர் சென்றாள் - தீவணத்தன்

408. தெய்வத் திருமேனிச் செஞ்சோதியும் முகமும்
கைவைத்த வீரமழுக் காட்சியும் - உய்வித்த

409. காவித் திருநீல கண்டமும் கொன்றைஅம்தார்
மேவிப் பரிமளிக்கும் மெய்ப்புயமும் - தாவிப்

410. பொழியும் கருணைப் புனிதநதி பொங்கி
வழியும் திருக் கண்மலரும் - மொழியும்மறைப்

411. பண்மணக்கும் சீதப் பவளத் திருவாயும்
விண்மணக்கும் கங்கை விரிசடையும் - பெண்மணக்கும்

412. செம்பாதியும் போய்த் தெரிசித்தாள்; மார்புஇருக்கும்
வம்புஆர் முலைத்தழும்பை வாழ்த்தினள் - மொய்ம்புஏறும்

413. சீலவளைத் தழும்பின் சீர்புகழ்ந்து பொன்னனையாள்
கோலநகக் குறியைக் கும்பிட்டாள்.

*பொழிப்புரை*

(பூவணத்திறைவன் பொலிவுபெற உலாவரும் தேர் தம் தெருவை அடைந்துவிட்டது என்பதைத் தெரிவை கேட்டு) அத் தேரின் எதிர் சென்று நின்றாள்;

நெருப்பைப் போன்ற நிறமுடைய அவ்விறைவனின் தெய்வத் தன்மை வாய்ந்த அழகிய உடலிலே பொங்கித் ததும்பும் செம்மை ஒளியையும், அவ்வொளி தவழும் திருமுகத்தையும்,

கையில் பிடித்துக் கொண்டிருக்கிற வீரத்தை விளக்கும் மழுவாயுதத்தின் தோற்றத்தையும்,

ஒருகாலத்தில் உலகத்தையே நஞ்சை ஏற்றுக் காப்பாற்றிய நீல மலர் போன்ற அழகிய நீல கண்டமென்னும் கழுத்தையும்,

கொன்றையாலாகிய அழகிய மாலையானது பொருந்தி யிருந்து மணம் வீசுகின்ற மெய்ம்மையை நிலைநாட்டிய தோள்களையும்,

இடம் விட்டு விட்டுக் குதித்துச் செல்லும் அருள் என்னும் தூய ஆறானது மிகுந்து வழிந்து கொண்டே யிருக்கிற அழகிய கண்க ளாகிய தாமரை மலர்களையும்,

சொல்லப் பெறுகின்ற வேத இசை எப்பொழுதும் மணம் வீசு கின்ற குளிர்ச்சியையுடைய பவளம் போன்ற அழகிய வாயையும்,

தேவருலகத்தை வாழவைக்கும் கங்கையாற்றை ஏற்றுக் கொண் டிருக்கின்ற விரிந்த சடையையும்,

பெண்மையானது மணம் வீசுகின்ற இறைவியின் பக்கமாகிய நேர் பாதிப் பக்கத்தையும் அருகில் நின்று வணங்கினாள்;

இறைவனுடைய மார்பிலே அமைந்திருக்கும் கச்சுப்பொருந்திய முலைகள் அழுந்தியதால் உண்டான வடுவைப் பார்த்து வாழ்த்துரை கூறினாள்;

(இறைவனுடைய) தோளினிடத்து அமைந்து உயர்ந்து செல்லும் நிலையுடையதாய் விளங்கும் வளையல் அழுந்தியதால் உண்டாய வடுவின் சிறப்பினைப் புகழ்ந்து, பொன்னனையாள் (அள்ளி முத்தம் இட்டபோது தோன்றிய) நகத்தழும்பைக் கும்பிட்டாள்.

### அருஞ்சொற் பொருள்

தீவணத்தன்–நெருப்பின் நிறத்தையுடையவன். மழுக்காட்சி–மழுவின் தோற்றம். காவி-நீலமலர். பரிமளிக்கும்-மணம் வீசும். பண்-இசை. சீதம்–குளிர்ச்சி. செம்பாதி–நேர்பாதி. வம்பு-கச்சு. மொய்ம்பு–தோள். சிலம்-நிலை. கோலம்-அழகு.

### விளக்கவுரை

திருப்பாற்கடலைக் கடைந்தகாலத்து எழுந்த நஞ்சானது மூவுலகத்தையும் அழிக்க முற்பட்டபோது அதை உண்டு உலகத்தை உய்வித்தான் ஆதலின் 'உய்வித்த காவித் திருநீலகண்டம்' என்றார்.

மெய்மைத்தன்மை என்பது அழியாமல் நிலை பெற்றிருக்கும் தன்மை. ஒரு பொருள் உருவத்தால் இருந்து பண்பால் இல்லையாக இருப்பது ஒருவகை. உருவத்தாலும் பண்பாலும் என்றும் அழியாதிருப்பதே அப்பொருளின் முழு உண்மைத் தன்மையாகும். கொன்றை மாலையை ஏற்றுக் கொண்டிருப்பதால் உருவத்தால் இருக்கிறது என்பதை உணர்த்திய தோள் பண்பாலும்தான் இருக்கிறேன் என்பதைத் தெரிவிக்கின்றது. தோளின் பண்பு இரண்டு. ஒன்று வீரர் நிறைந்த போர்க்களத்தில் அஞ்சாத வீரத்தை விளைவிப்பது; மற்றையது மாதர் நிறைந்த ஏர்க் களத்தில் எஞ்சாத காதலைத் தோற்றுவது. மகாமேரு மலையை வில்லாக வளைத்துத் தான் இருக்கிறேன் என்றதை உணர்த்திய தோள் இப்போது தெரிவைக்குக் காமத்தை உண்டாக்கும் வழியாலும் தான் இருக்கிறேன் என்பதை உணர்த்தியது. எனவே மெய்ப்புயம் என்பதற்கு உருவத்தாலும் பண்பாலும் தான் இருப்பதை அறிவிக்கும் தோள் எனப் பொருள் செய்தல் வேண்டும்.

இறைவன் கண்களிலேயிருந்து அருள் ஆறு எப்பொழுதும் குதித்துத் தாவி விரைந்து ஓடி வந்து கொண்டே யிருக்குமாதலின் 'கருணைப் புனிதநதி பொங்கி வழியும் திருக்கண் மலர்' என்றார்.

இறைவன் வேதத்தை அருளியவன் ஆதலின் 'மொழியும் மறைப் பண் மணக்கும் திருவாய்' என்றார். அவ்வேதம் எழுதப் பெறாமல் மொழியப் பெற்றே பயிற்சியடைய வேண்டுமாதலின் 'மொழியும் மறை' என அடைமொழி கொடுத்து வழங்கினார்.

## தெரிவை இறைவனைப் பார்த்துச் சில கேட்டல்

413. ... ... ... - நீலமிடற்று

414. எந்தையை நோக்கி இதழித் திருப்புயத்தால்
வந்த விரகநோய் மாற்றுதற்குச் - சொந்த

415. மருந்தறியீர் வேளூர் வயித்தியர் என்றுஆங்கே
இருந்தபரிசு என்னோ இயம்பீர் - திருந்துகையில்

416. நிற்கும் தொகைவளையை நீர்கொண்டீர் கூடலிலே
விற்கும் தொழில் மறந்துவிட்டீரோ - நற்கள்

417. வழியும்மலர்க் கொன்றை தரமாட்டீர்க்கு ஆரூரின்
மொழியும் பெயர் என்? மொழியீர் - பழிஅஞ்சும்

418. ஆடல் தவிர அறுபத்து மூன்றோ முன்
கூடல் நகர்ஆடல் கூறுவீர் - ஓடுகண்ணீர்

419. ஊற்றை மறைக்க உபாயம்அறியீர் வையை
ஆற்றை மறைக்க அறிவீரோ - சாற்றீர்என்று

420. அன்னம் உரைத்தாள்.

### பொழிப்புரை

நீல நிறம் அமைந்த கழுத்தையுடைய எம் தந்தையாகிய இறைவனைப் பார்த்து, அன்னத்தை ஒத்தவளாகிய தெரிவை (420) உம்முடைய கொன்றை மாலையணிந்த அழகிய திருத்தோளால் எனக்கு வந்து பொருந்திய காமமென்னும் நோயை மாற்றியமைப்பதற்கு உமக்கே உரியதான மருந்து என்ன? என்பதைத் தெரிந்து கொள்ளாத நீர், புள்ளிருக்கு வேளூரில் வயித்தியர் என்ற பெயரையும் வைத்துக்கொண்டு அமர்ந்தருளி யிருக்கும் முறைதான் என்ன? சொல்வீராக;

திருத்தமாகச் செய்யப் பெற்றதும், கையில் கீழே விழாமல் திறம் பெற நிற்கும் தன்மையோடு கூட்டமாக இருப்பதும் ஆகிய வளையலை இப்போது வாங்கிக் கொண்ட நீர் மதுரையிலே வளையலை விற்கும் உமது தொழிலை மறந்து விட்டீரோ? சொல்வீராக;

மிகுதியாகத் தேன் வழிந்தோடும் மலர்களால் செய்யப் பெற்ற கொன்றை மாலையைத் தரமாட்டாத உம்மைத் திருவாரூரில் தியாகேசர் எனக் கூறும் பெயரின் பொருள்தான் என்ன ? சொல்வீராக ;

பழியஞ்சின திருவிளையாடல் என்ற ஒரு திருவிளையாடல் தவிர நீவிர் முன்னொருகாலத்தில் மதுரையில் ஆடிய திருவிளையாடலின் மொத்தத் தொகை அறுபத்து மூன்றுதானே? கூறுவீராக.

ஓடுகின்ற என் கண்ணீர் தோன்றும் சுரப்பைத் தடுப்பதற்குரிய வழியைத் தெரியாத நீவிர் வையையாற்றைத் தடுத்து நிறுத்துதற்கு மட்டும் வழி அறிவீரோ? கூறுவீராக என்று கூறினாள்.

### அருஞ்சொற் பொருள்

இதழி-கொன்றை. விரகநோய்-காமநோய். பரிசு-தன்மை. தொகைவளை-கூட்டமாக இருக்கும் பல வளையல். உபாயம்-வழி.

### விளக்கவுரை

புள்ளிருக்கு வேளூரில் இருக்கும் இறைவன் திருநாமம் 'வைத்திய நாதன்' என்பது. தன்னுடைய தோளால் ஒருத்திக்கு விளைந்த நோயைத் தீர்ப்பதற்குரிய மருந்து என்ன? என்று தெரியாத இவருக்கு 'வயித்திய நாதன்' என்ற பெயர் எதற்கு? என வினவுகின்றாள். 'அழுக்கை அழுக்கால் போக்கு' என்றாற் போலத் தோளால் வந்த நோயைத் தோளைத் தந்தோ அல்லது தோளில் அமைந்த மாலையைத் தந்தோ போக்கலாம் என்ற சொந்த மருந்தை-வேறு மூலிகைகளைத் தேடிக்கொண்டு வந்து மருந்தாக்கித் தரவேண்டாத சொந்த மருந்தைக் கூட நீர் தெரிந்துகொள்ளவில்லையே என்று நயம்பெறக் கூறினாள். இது,

> 'வாதக்கா லாந் தமக்கு மைத்துனர்க்கு நீரிழிவாம்
> போதப் பெருவயிரும் பிள்ளைதனக்—கோதக்கேள்
> வந்தவினை தீர்க்க வகையறியார் வேளூரர்
> எந்தவினை தீர்ப்பா ரிவர்''

என்ற தனிப்பாடற் செய்யுளை நினைவுபடுத்துகிறது.

காமமயக்கம் ஏற்படுங்கால் கைவளை கழன்று விழுதல் இயல்பு. தெரிவையும் தனக்குக் கைவளை கழன்று வீழ்ந்தமைக்குக் காரணம் பூவணத்திறைவனே ஆதலின் கைவளையைக் கொண்டவன் அவன் எனக் கருதினாள். மதுரையில் வளையல் விற்றல் என்ற திருவிளையாடல் புரிந்து பெயர் பெற்ற நீ என் வளையலை என்னிடத்தில் இருக்குமாறு செய்யாமல் வாங்கிக் கொண்ட முறை ஏனோ? என்று கூறினாள். விற்கும் தொழிலை மறந்து வாங்கும் தொழிலைக் கொண்டீரே ஏன்? என்றாள்.

திருவாரூரில் எழுந்தருளியிருக்கும் இறைவன் பெயர் தியாகேசர் என்பது. தியாகம் செய்பவர் என்ற பேர் எனக்குச் சாதாரண மாலை

ஒன்று கேட்ட பிறகும் தராத நினக்கு எவ்வாறு பொருந்தும் என்ருள்.

பழியை அஞ்சுபவன் நீ என்பது உண்மையானல் – அப்படிப் பட்ட திருவிளையாடல் ஒன்றை மதுரையில் நீ புரிந்தவன் என்பது உண்மையானல் உன்ஞல்-நீ மாலை தராத காரணத்தால் நான் இறக்கும் போது உன்மேல் பழியொன்று உண்டாகுமே; அதற்கு நீ அஞ்சுவதாகத் தோற்றவில்லையே; ஆதலின் பழியஞ்சாத நீ மதுரையில் விளையாடிய திருவிளையாடல்கள் பழியஞ்சிய திருவிளையாடல் நீங்க மொத்தமே அறுபத்து மூன்று தானே? என வினவிஞள்.

என் கண்ணிலிருந்து பெருகிவரும் நீரூற்றைத்தடுத்து நிறுத்தும் வழியறியாத நீ வையையாற்றை அணைகட்டித் தடுக்க மட்டும் அறிந்தீரோ? என்பது இறைவன் பிட்டுக்கு மண் சுமந்து வையையாற்றை அடைக்க முற்பட்ட திருவிளையாடலை அடிப்படையாகக் கொண்டது.

இவ்வளவும் தெரிவை தன் காமமயக்கத்தைத் தீர்க்கவேண்டும் என்ற வேண்டுகோளை இத்தகைய விஞக்களை அமைத்துக் கேட்ப தன் மூலம் அமைத்தாள் என்பதாம்.

இறைவனே என் காமநோயைத் தீர்த்து, கைவளையை விழாமற் செய்து, கொன்றைமாலை தந்து, என் கண்ணீரைத்தடுத்து நிறுத்துக; இல்லையாஞல் யான் இறந்து படுவேன்; நின்மேற் பழி சால நிலை நிற்கும் என்று கூறிஞள் என்பதாம்.

## இறைவன் செலவும் தெரிவை நிலையும்

420. ..................அரஞர் ஆகத்து அழகியமின்
தன்னை நினைத்து அஞ்சிஞர் தார்கொடுக்கப்-பின்னைமதன்

421. காவி ஒழிந்த கணைகிடக்கும் தூணியெனப்
பாவை கிடந்தாள் நடந்தான் பைந்தாரான்-பூவை

422. உரிய உடற்கு உயிர்உண்டுஎன்ன உயிர்த்து
நிரைவளையார்க்கு ஐயத்தை நீத்தாள்.

*பொழிப்புரை*

(தெரிவையின் கேள்விகளைச் செவிமடுத்த) சிவஞர் உடலின் ஒருபக்கத்தே அமைந்துள்ள அழகிய மின்னம்மை என்ற பெயர் பூண்ட இறைவியை நினைத்து, (அவள் சினங்கொள்வள் என்று கருதி) க் கொன்றை மாலையைத் தெரிவைக்குக் கொடுப்பதற்குப் பயந்தார்.

எப்பொழுதும் முன்பக்கம் வராது பின்பக்கமே இருந்து போர் செய்யும் மன்மதன் அம்பு ஐந்தனுள் நீலமலர் அம்பு தவிர ஏனைய மலரம்புகள் வைக்கப்பெற்ற அம்புப்புட்டில் என்று கருதுமாறு தெரிவை தெருவில் கிடந்தாள்.

செய்வதற்கு வேறு வழியின்மையால் பசிய கொன்றைமாலையை உடைய இறைவனும் தேரிலேறி அடுத்த தெருவுக்குச் சென்றான்.

நாகணவாய்ப் புள்ளனைய மொழி பேசும் தெரிவைப் பருவத்தாள் தனக்கு உரிமையுடைய உடலுக்கு உயிர் என்ற ஒரு பொருள் உண்டு என்ற கருத்தை விளக்க மூச்சுவிட்டு, வரிசையாக வளையலை அணிந்துகொண்டிருக்கின்ற பெண்களுக்குத் தோன்றிய உயிர் இருக்கிறதோ இல்லையோ என்ற ஐயப்பாட்டைப் போக்கினாள்.

### அருஞ்சொற் பொருள்

ஆகம் - உடல். தூணி – அம்புப்புட்டில்; அம்பு அருந்தூணி. பூவை - நாகணவாய்ப்புள். நிரைவளை - வரிசையாக அமைத்த வளையல்.

### விளக்கவுரை

தெரிவையின் வினாவில் அமைந்த உட்பொருளைச் செவிசாய்த் துணர்ந்த இறைவன் எதைக் காப்பாற்றாவிடினும் தன் பெயரை யாவது காப்பாற்றிக் கொள்ளலாம் என்ற எண்ணத்தாற்போலும் மாலை கொடுக்க முன்வந்தார். முன்வந்தவர் மின்னனையாள் என்ற பெயரமைந்த இறைவி சினங்கொள்வாளே என்று அஞ்சிப் போய் விட்டார் என்பதாம்.

இந்நிலையில் மன்மதன் சாவை விளைவிக்கும் நீல மலர்க்கணை ஒன்று தவிர ஏனை நான்கு கணைகளையும் அவள்மேல் எய்து விட்டான். நான்கு மலர்க்கணைகளையும் ஏற்றுக்கிடக்கும் தெரிவை அம்பருத்தூணியாகக் காட்சியளிக்கும் நிலைபெற்றாள் என்பதாம். எனவே தெரிவையை மன்மதனின் நாற்கணையோடு கிடக்கும் அம்புப்புட்டில் என அழைத்தார்.

இனி ஈண்டுக் கூறிய பொருளேயன்றி அவள் உறுப்பு நிலையை விளக்கிக் கூறியதாகக்கொள்ளும் உரை ஈண்டைக்கு ஏற்புடைய தில்லையென அறிக. மன்மதன் நீலமலர் அம்பும் ஏவப்பட்டு உயிரிழந்துவிட்டாளோ என்ற ஐயத்தைத் தெரிவைப் பருவத்தாள் மூச்சு விடுவதன்மூலம் நீக்கினாள் என்பதாம்.

# 7. பேரிளம் பெண்

பேரிளம் பெண் என்பாள் 32 வயதுமுதல் 40 வயதுவரை அமைந்த பருவமுடையவள். திருப்பூவணத்து இறைவன் உலாப் போகுங்கால் இப் பருவப் பெண்ணின் நிலைபற்றி ஆசிரியர் கூற முற்படுகிறார். இப்பகுதியை ஆசிரியர் பேரிளம் பெண்ணின் வருணனை, அவள் நடத்திய ஆசிரியத் தொழில், இறைவன் தேர்ப்பவனி வருகிறான் என்பதைக் கேட்டல், இறைவனிடம் தன் கருத்தைக் கூறல், இறைவன் அருள் செய்தல் என ஐந்து பகுதியாகப் பிரித்துக் கூறுகிறார்.

## பேரிளம் பெண்ணின் வருணனை

இவ்வருணனை 423-ஆம் கண்ணியிலிருந்து, 445-ஆம் கண்ணிவரை கூறப்படுகின்றது.

## பேரிளம் பெண்ணின் தன்மை

422. ... ... ... - தெரிவைக்கு

423. அடுத்த பருவ மலர்வேள் இரதி
எடுத்தனைய ளாம்பே ரிளம்பெண்-தொடுத்தமதன்

424. நீலவம் பொன்றொழிய நின்றநால் அம்புசெயும்
சீலமுங்கண் டெவ்வெவர்க்கும் செப்புவாள்-சால

425. வினைநீடு மன்மதவேள் வேதாந்த சாரத்
தனுபோக முற்றும் அறிந்தாள்-தனிமூவர்

426. கானத் திருமுறையைக் கைவிடாள் பண்ணோடும்
பானற் பெருவிழியாள் பாடுவாள்

தெரிவை என்ற பருவத்திற்கு அடுத்த பருவத்தாள் இவள். மலர் அம்புகளைக் கையிலே கொண்டிருக்கின்ற மன்மதனின் மனைவியாம் இரதியை ஒத்தவள். மன்மதனால் விடப்படும் அம்புகளில் நீலோற்பல மலராகிய அம்பு ஒன்று தவிர ஏனைய நான்கு அம்புகள் செய்யும் செயல் வகைகளை ஆராய்ந்து யாவர்க்கும் மிகுதியும் சொல்லும் நிலையுடையவள். மன்மதனால் அமைக்கப் பெற்ற காமவினை நீளுதற்குக் காரணமாகிய 'வேதாந்தம்' என்று பரியயாமாகச் சொல்லப்படுகின்ற இன்பத்துறை நூலின் தெளிவாகிய சாரத்தின் அனுபவம் முழுவதும் அறிந்தவள். ஒப்புமையில்லாத சம்பந்தர், நாவரசர், சுந்தரர் ஆகிய மூவராலும் இயற்றப்

பெற்ற இசை அமைப்பினைப் பெற்ற திருமுறையை எப்போதும் கையில் கொண்டிருப்பவள். நீலமலர் போன்ற பெரிய கண்ணை யுடைய அவள் பண்முறையோடும் அத்திருமுறைகளைப் பாடுவாள்.

### அருஞ்சொற் பொருள்

எடுத்தனையள் – ஒத்தவள். சீலம் - ஒழுக்கம், செயல். கானம் - இசை. பானல் – நீலோற்பலமலர். சாலச்செப்புவாள் எனவும், மன்மதவேள் வினைநீடு வேதாந்தம் எனவும் மாற்றிப் பொருள் கொள்ளப்பட்டன.

### விளக்கவுரை

'வேள்' என்ற சொல் முருகன், மன்மதன் ஆகிய இருவரையும் குறிப்பதாதலின் பொதுமை நீக்கி மன்மதனையே குறிக்க மலர்வேள் என்றும் மன்மதவேள் என்றும் கூறினர். மன்மதனின் மலரம்பு ஐந்தன் பெயரும் வினையும் செயலும்:—

1. தாமரைப்பூ—பேச்சும் நினைவும்
2. மாம்பூ—மூச்செறிந்து வருந்துதல்
3. அசோகம்பூ—உள வெதுப்பும் உணவு வெறுத்தலும்
4. முல்லைப்பூ—அழுதலும் பிதற்றலும்
5. நீலோற்பலப்பூ—மயக்கமும் அதிர்ச்சியும். (மரணம்).

மன்மதனின் நீல அம்பு மரணத்தைத் தருவது ஆதலின் அவ் வம்பு ஒழிந்த ஏனைய அம்புகள் செய்யும் செயல்களை உரைக்கும் தன் மையுடையாள் எனக் குறித்தார். மோகநூல், காமநூல், மன்மத நூல், மன்மதவேள் வேதாந்தம் என்பன ஒருபொருட் சொற்கள். படித்தாள் எனக் கூருது அனுபோக வாயிலாக முற்றுமறிந்தாள் என்று கூறிய நயம் உணர்ந்து பார்க்கத் தக்கது. பிரம, விட்டுணு, உருத்திரர்களாகிய கடவுளர்களும் மூவர் எனப்படுவராயினும் அவர் களுக்கு ஒப்புமையுடையவரும் உயர்ந்தவரும் ஆகிய வேறு கடவு ளர்களும் உண்டு என்பதைக் குறித்து ஒப்புமை யாண்டும் கிடை யாதவர் இங்கே குறிப்பிட்ட நாயன்மார்கள் தாம் என்பதற்காகத் தனி என்ற அடை மொழி சேர்த்துத் தனி மூவர் என்ருர்.

## கொங்கை வருணனை

426. ... ... ... - ஆனையுரித்

427. தாரைச் சயிக்கவிரண் டானை தலைகீழாப்
பாரப் பெருந்தவஞ்செய் பான்மைபோல் - வாரென்

428. முகபடா நீக்கி முனிந்தா டவர்மேல்
இகலிக் கிரிவீழ் இபம்போல் - அகமகிழ

429. உந்தி மடுவென் றுரைக்கு மதுபார்க்க
வந்த துணைச்சக்கர வாளம்போல் - முந்தத்

430. திருப்பனந் தாளிலிங்கம் திண்கலைச்சிக் காக
விருப்பினுடன் சாய்ந்த விதம்போல் - பருப்பதம்போல்

431. இன்னம் பருக்கில் இடைதாங்கும் தாங்காதென்
றுன்னி அதுபார்க்க உற்றதுபோல் - தன்னைவிழை

432. மாந்தருக்கு மோக மகோததியைக் கையணைத்து
நீந்தக் கவிழ்த்தகுட நீர்மைபோல் - நேர்ந்திட்

433. டெதிர்த்துவரு வாரையெல்லாம் யாம்சயித்தோம் என்ன
மத்ததிலுத்துச் சாய்ந்த வகைபோல் - கதித்திடத்திண்

434. கோல்பிடித்த செங்கைக் குடைபோல் தலைகீழா
மால்பிடிக்க நின்ற மணிவரைபோல் - சால்பகல

435. மட்டுண் டடங்காது வம்பில் தலையிட்டு
முட்டுண்டு பின்குனியும் மூர்க்கர்போல் - கிட்டும்

436. வளநீல ரோம மணிக்கயிறு பூட்டி
இளநீர் இறக்கும் இயல்போல் - இளைஞோரால்

437. ஆடி விசையோய்ந் தயர்ந்துவீழ் பம்பரம்போல்
கோடி முகங்கவிழ்ந்த கொங்கையாள்

*பொழிப்புரை*

யானையை உரித்துப் போர்த்துக் கொண்ட சிவனை வெற்றி கொள்வதற்காக இரண்டு யானைகள் தலைகீழாக இருந்து கொண்டு பாரமாகிய பெரிய தவம் செய்து கொண்டிருக்கும் தன்மை போலவும், ஆடவர்களின் மேல் கோபம் கொண்டு கச்சு என்று சொல்லக் கூடிய முகபடாத்தை நீக்கி மாறுபட்டு மலையிலிருந்து கீழ் நோக்குகின்ற மதயானை போலவும், கொப்பூழை மடு என்று அனைவரும் சொல்வதை நேரில் பார்த்து அறிவதற்காக மனமகிழ்வோடு வந்த இரண்டாகிய சக்கரவாள மலையைப் போலவும் முன்னொரு காலத்தில் திருப்பனந்தாள் என்ற தலத்திலுள்ள இலிங்கமானது அன்பு வலிமையைக் கொண்ட கலைச்சி என்பவளுக்காக இரங்கி விருப்பத்தினோடு சற்றுச் சாய்ந்து கொடுத்த தன்மை போலவும், மலையைப் போல் இனிமேலும் பெரியதாக வளர்ச்சி பெறுவோமேயானால் இடுப்புத் தாங்குமோ தாங்காதோ என்று எண்ணி அவ்விடுப்பின் தன்மை எவ்வாறுள்ளது என்று பார்ப்பதற்குப் பொருந்தியது போலவும், தன்னை விரும்புகின்ற மக்களுக்கு உண்டாகின்ற காம இச்சை

என்னும் சமுத்திரத்தைக் கையணைத்து நீந்துவதற்காகக் கவிழ்த்துப் போடப்பட்டிருக்கின்ற குடங்களைப்போலவும், சண்டை செய்வ தற்கு உடன்பட்டு எதிர்த்து வருகின்றவர்க ளெல்லாரையும் யாம் வெற்றி பெற்று விட்டோம் என்று தற்பெருமைப் பட்டிருந்து யாரும் வராத காரணத்தால் அலுத்துப் போய்ச் சாய்ந்திருக்கிற தன்மை போலவும், இந்திரன் கோபித்த காரணத்தால் பசுக்களை விரட்டுதற்காகக் கொள்ளப்படும் வலிய கோலைப்பிடித்த செம்மை யான கையினுல் திருமாலின் அவதாரமான கண்ணன் குடை போல் பிடிக்க அவ்வாறே நின்று மழையைத் தடுத்த அழகிய கோவர்த்தன மலை தலைகீழாக இருப்பது போலவும், பெருந்தன்மை நீங்குமாறு நல்லொழுக்க வரன் முறையில் கட்டுப்பட்டு அடங்காமல் வீண் செயலில் தலையிட்டு அறிஞர்களால் மொத்துண்டு பின்னர் அறிவுநிலையை நினைத்துப் பின்குனிகின்ற அறிவிலிகள் போலவும், (சிலேடை) (காண்பவர்களுடைய அறிவு என்னும் கள்ளினை மிகுதி யும் உண்டு அடக்கமின்றியிருந்து பின் கச்சினுள் தலையிட்டு அது அடக்கிய காரணத்தால் மொத்துண்டு பின்னர் ஆணவம் இழந்து குனிந்திருக்கின்ற மூர்க்கர்) அடைவதற்குக் காரணமாக இருக்கின்ற வளப்பம் பொருந்திய நீல நிறமாகிய உரோமாவலி என்று சொல்லப் படும் அழகிய கயிற்றினைப் பூட்டிக் கீழே இறக்கப் படுகின்ற இள நீரின் தன்மை போலவும், இளைஞர்களால் கயிறுகொண்டு வேக மாக முறுக்கி விடப்பட்ட காரணத்தால் ஆடி வேகம் ஒழிந்து சோர்ந்து விழுகின்ற பம்பரத்தைப் போலவும் வளைந்து முகம் கவிழ்ந்து இருக்கின்ற முலையினை யுடையவள்.

## அருஞ்சொற் பொருள்

வார்-கச்சு. முகபடாம்-யானையின் முகத்தில் அணியப்படும் ஒருவகைத் துணி. இகலுதல்-மாறுபடுதல். இபம்-மதயானை. உந்தி-கொப்பூழ். மடு-நீர் மிகுதியும் கொண்ட ஆழமான இடம். துணை-இரண்டு. உன்னி-நினைத்து. மகோததி-சமுத்திரம். நேர்தல்-உடன்படல். மட்டு-எல்லை, அறிவு என்னும் கள். வம்பு-கச்சு, வீண் செயல். கோடி-வளைந்து.

## விளக்கவுரை

இறைவன் யாகத்தில் தோன்றிய யானையை உரித்துப் போர்த் துக் கொண்ட காரணத்தால் தன் இனத்தைக் கொன்ருன் எனக் கருதி அவனை வெல்ல இரண்டு யானைகள் தலை கீழாகத் தவம் செய் கின்றன எனக் குறித்தார். தாடகை என்னும் மங்கை நல்லாள் திருப்பனந்தாள் இறைவனைப் பூசித்து வரும் நாளுள் ஒருநாள் பூசை யின் போது பூமாலை எடுத்து இறைவனுக்குச் சாத்த எழுந்த காலை அவளாடை நழுவ அதனை முழங்கையால் இடுக்கிக் கொண்டு மாலை சாத்த முடியாமல் தவிக்க, இறைவன் இரக்க முற்றுத் தானே

சற்றுச் சாய்ந்து மாலையை ஏற்றருளினுன் என்பது புராணவரலாறு. கலை காரணமாகச் சிறப்புப் பெற்றமையின் அவள் பெயர் கலைச்சி என்றே வழங்கலாயிற்று. அன்பினுல் திண்ணியளாதலின் திண் கலைச்சி எனப்பட்டாள்.

யானை தலைகீழாகத் தவம் செய்வது போல், மதயானை போல், சக்கரவாள மலைபோல், இலிங்கம் சாய்ந்தது போல், இடையைப் பார்க்க வந்தது போல், குடத்தைப் போல், அலுத்துச் சாய்ந்த வகைபோல், கோவர்த்தனகிரி தலைகீழாக இருப்பது போல், மூர்க்கர் போல், இளநீர் இறக்கும் இயல் போல், அயர்ந்து வீழ் பம்பரம்போல் கவிழ்ந்த கொங்கை என முடிபு கொள்ளுக.

## கண்ணுள், அல்குலாள், குழலாள்

437. ... ... ... - நீடுலகில்

438. திக்கு விசயம் செலுத்தி மதனுவம்
புக்க விசிகம் புரைகண்ணுள் - மிக்குலகம்

439. நாடும் திருமால் நடத்தி ஞல்துகைப்புண்டு
ஆடும் படம்போலும் அல்குலாள் - கூடிய

440. மேல்வீசு நள்ளிருளின் மேனிதெரி யாதுநிலாக்
கால்வீசும் போதுதெரி காருடல்போல் - நான்மாடச்

441. செய்யநகர் வேந்தாற் சிறையிற்சின் ஞள்கிடந்து
மெய்யிளைத்து மீண்டுவரு மேகம்போல் - சைய

442. மடந்தை மணவாளன் வாழ்சேதுக் கைதை
குடைந்துவரு வண்டின் குழாம்போல் - மிடைந்துமலர்

443. மாலைமரு வாததினுன் மாமலர் பூத்துதிர்ந்த
சோலையது போலும் சுரிகுழலாள்

### பொழிப்புரை

நீண்ட உலகத்தில் திசைதோறும் சென்று வெற்றி பெற்றுத் திரும்பி வந்து மன்மதனுடைய அம்பருத் தூணியில் புகுந்த அம்பினை ஒத்த கண்களையுடையவள்.

உலகத்தினரால் மிகவும் விரும்பிப் பேசப்படுகின்றதாகிய திருமாலின் நடனத்தினுல் மிதிக்கப் பட்டுச் சோர்வு பெற்ற காளிங்கன் என்னும் பாம்பின் படத்தைப் போன்ற அல்குலை யுடையவள்.

மேலே படுகின்ற மிகுந்த நள் என்னும் ஒலிவருகின்ற இருட்டில் நிறம் தெரியாதிருந்து, நில்வானது தன் ஒளியை வீசும்போது

தெளிவாக அறிய முடிகின்ற கருமையாய உடல் போலவும், நான் மாடக் கூடல் என்று சொல்லப்படும் மதுரை என்ற செம்மையாகிய நகரத்தின் அரசனுன உக்கிரபாண்டியனுல் சிறை வைக்கப்பட்டுச் சில நாட்கள் அங்கேயே கிடந்து உடல் இளைத்து மீண்டு வருகின்ற மேகம் போலவும், மலைமடந்தையாகிய பார்வதியின் கணவனுகிய இறைவன் வாழ்கின்ற சேதுவில் உள்ள தாழம்பூவில் அமைந்த மகரந்தப் பொடிகளைக் குடைந்து வருகின்ற வண்டுக் கூட்டம் போலவும், மலர்மாலைகளை நெருங்க வைக்கப் பெருத காரணத்தால் சிறந்த மலர்கள் பூத்துக் கொட்டிப் போயிருக்கின்ற சோலையைப் போலவும், இருக்கின்ற கூந்தலை உடையவள். கடைசியில் வளைவு கொண்டிருக்கிற கூந்தலை யுடையவள்.

### அருஞ்சொற் பொருள்

ஆவம் - அம்புகள் வைக்கப்பெறும் புட்டில். விசிகம் - அம்பு. துகைப் புண்ணுதல் - மிதிக்கப் பெறுதல். சையமடந்தை - மலைமடந்தை; பார்வதி. சேது – இராமேஸ்வரம். கைதை - தாழை. மேல் வீசு கூடிய நள்ளிருள் என்றும், மலர்மாலை மிடைந்து மருவாததினுல் என்றும் சொல் மாற்றிப் பொருள் செய்யப் பெற்றன.

### விளக்கவுரை

திருமால் கண்ணனுகப் பிறந்து காளிங்கன் என்னும் பாம்பின் மேல் காளிங்கமர்த்தனம் செய்தபோது கண்ணபிரானின் திருவடிகளால் மிதிபட்டு நின்ற காளிங்கனின் படம் அல்குலுக்கு உவமையாக்கப்பட்டது.

## முத்தாரமும் வைத்த பரிவும்

443. ... ... ... — சாலமைக்கு

444. மேவும் அகத்தொழிய வெண்டரள மேலிலையென்
றுவலுறத் தோட்கணியா ஆரத்தாள் - பூவணத்தெம்

445. புத்தமுத வாரியின்மேற் பொன்னனையாள் வைத்தபரி
வத்தனையும் வைக்கும் அளவினுள்

### பொழிப்புரை

உவமையாகச் சொல்லுதற்குப் பொருத்தமாயுள்ள மூங்கிலுக்கு வெண்மையான முத்துக்கள் உள்ளிருக்கின்றனவே யன்றி மேலே இல்லை என்று கருதி விருப்பம் உண்டாகுமாறு தோளுக்கு அணிந்திருக்கின்ற முத்துமாலையை உடையவள்.

திருப்பூவணத்திலே யுள்ள புதுமையானதாகிய அமிழ்தக் கடலின் மேல் பொன்னனையாள் கொண்டிருந்த அன்பு எவ்

வளவோ அவ்வளவு அன்பைக் கொண்டிருக்கும் நிலைமை யுடைய வள்.

### அருஞ்சொற் பொருள்

சாலுதல் - அமைதல். அமை - மூங்கில். தாளம் - முத்து. ஆரம் - முத்து மாலை. அமுதவாரி - அமுதக் கடல். பரிவு - அன்பு.

### விளக்கவுரை

மூங்கிலோடு தன் தோளை ஒப்பிட்டுக் கண்ட பேரிளம் பெண் மூங்கிலுக்கு முத்துக்கள் உள்ளிருக்கின்றனவேயன்றி மேலில்லை எனக் கண்டு ஆவலோடு முத்துமாலையை மேலே அணிந்தாள். பொன்னனையாளின் அன்பு இறைவனையே சித்தவுருக் கொண்டு வந்து இரசவாதம் செய்தருளுமாறு செய்தது. இவள் அன்பும் உலா வந்து அருள் செய்யுமாறு அமைந்தது ஆதலின் பொன்னனை யாளின் அன்போடு ஒப்பிட்டுக் கூறியுள்ளார். ஒரு பொருளைச் சுவைக்குங்கால் அதற்குரிய ஒருவகைச் சுவையினைத் தருதலே எப்பொருட்கும் இயல்பு. ஆயின் ஒவ்வொரு முறை சுவைக்கும் போதும் புதுப் புதுவகையான பற்பல சுவைகளைத் தருகின்ற காரணத் தால் அமுதக் கடல் என்னுது புத்தமுதக் கடல் என இறைவனைக் குறித்தார்.

## பேரிளம் பெண்ணின் ஆசிரியத் தொழில்

445. ... ... ... — மெத்தநிலை

446. ஓங்கு மணிமாடத் துள்ளோர் அரியணையில்
பூங்கவரி கால்வீசப் போயிருந்து - பாங்குறையும்

447. முற்பருவப் பெண்கட்கு மோகநூல் அவ்வவர்தம்
சொற்பருவம் கண்டுகண்டு சொல்லுங்கால் - பொற்பிற்

448. சிலர்கேட்கப் பாடம் சிலர்கேட்க அர்த்தம்
சிலர்கேட்கச் சங்கை தெளிவித் - துலகேழின்

449. மன்மதனூல் கைவந்தோர் மற்றிலையென் றாசிரியத்
தன்மை செலுத்தும் தறுவாயில்

### பொழிப்புரை

மிகுதியான தூண்கள் உயர்ந்து இருக்கின்ற அழகிய மாளிகை யின் உள்ளே சென்று அங்கே அமைந்துள்ள சிங்கத்தின் வடிவில் செய்யப்பட்ட அணையின் மேல் அழகிய கவரிகள் காற்றை வீச அமர்ந்து, பக்கத்திலே தங்கியிருக்கின்ற பேதை முதல் தெரிவை வரை உள்ள அறுவகைப் பருவத்துப் பெண்களுக்கு மோகநூற்

பொருள்களை அவ்வப் பருவத்தார்களின் சொல் நிலையையும் பருவ நிலையையும் ஆராய்ந்து சொல்லிக் கொண்டு வந்தாள்.

அப்போது, அழகிய முறையில் சிலர் மூலபாடத்தின் முறை அமைப்பினைக் கேட்க, சிலர் மூலபாடத்துக்குரிய பொருள் முறைகளைக் கேட்க, சிலர் முன்னுக்குப் பின் முரணுதல் போன்றும் தம் அனுபவத்திற்கும் நூற்கருத்திற்கும் முரணுதல் போன்றும் தோன்றலால் வரும் சந்தேகங்களைக் கேட்க அவைகளுக்கெல்லாம் உரிய முறையில் விடை கூறி அச் சங்கைகளைத் தெளிவித்தாள்.

ஏழு உலகிலும் மன்மதனூலில் தேர்ச்சியடைந்தவர் வேறு யாரும் இல்லை என்று சொல்லுகின்ற முறையில் ஆசிரியத் தொழிலை நடத்துகின்ற சமயத்தில்.

### அருஞ்சொற் பொருள்

நிலை - தூண். அரியணை - சிங்கவடிவில் செய்யப் பெற்ற அணை (சிம்மாசனம்) அமர்வோரின் உடலை அணைப்பது என்பதாலும், அணையுமாறு அண்டையில் உள்ளவர் உள்ளங்களைத் தூண்டுவதாலும் அது அணை எனப் பெயர் பெற்றது. கால் - காற்று. சங்கை - ஐயம். தறுவாயில் - சமயத்தில்.

### விளக்கவுரை

தூண்கள் உயர்ந்திருக்கின்ற மாடம் என்பதனாலேயே மாடத்தின் உயர்வும் தெரிகிறது. உபாத்தியாயத் தொழில் எனக் கூறுது ஆசிரியத் தன்மை என்று கூறியதற்கு ஏற்பச் சங்கை தெளிவித்து எனக் கூறினார். ஆசு - குற்றங்களை (ஐயங்களை), இரியர் - ஓட்டுபவர்.

## பேரிளம் பெண் இறைவன் உலாவருதலை அறிதல்

449. ... ... ... — தொன்மை

450. அவனசையாமல் அணுவசையா தென்னும்
புவனப் பழமொழிக்குப் புத்தேள் - உவமை

451. தெரிக்குந்தெய் வங்கள் சிகாமணி தோன்றி
மரிக்குந்தெய் வங்கள் மணாளன் - பரிக்கும்

452. அயனுக்கும் இந்திரற்கும் அங்கேழ் முளரி
நயனற்கும் தேவர்க்கும் நாயன் - பயனெக்கும்

453. வையைநதித் தீரன் மணிகர் ணிகைத்தீர்த்தன்
சைவநிறை புட்பவனத் தம்பிரான் - தெய்வமறை

454. யார்ப்பவனி யெங்கும் அதிரக் கறங்குதிருத்
தேர்ப்பவனி வீதிவரல் செப்பினர்

### பொழிப்புரை

பழைமையானவன் ஆகிய அந்த இறைவன் அசையாத முன்னம் அணு (மிக நுட்பப் பொருள்)க் கூட அசையாது என்று சொல்லக்கூடிய உலகப் பழமொழிக்குக் காரணமான இறைவன்;

உவமை சொல்லப்படும் தெய்வங்கள் பலவற்றுக்கும் நாயகமணி போன்றவன்;

தோன்றி அழியும் தெய்வங்களுக் கெல்லாம் தலைவன்;

உலகத்தைத் தோற்றுவிக்கும் பிரமனுக்கும், இந்திரனுக்கும், அழகிய நிறம் அமைந்த தாமரைக் கண்ணனாகிய திருமாலுக்கும், ஏனைய தேவர்களுக்கும் தலைவன்;

பயன் தருதலில் ஒப்புமையாகக் கருதப்படுகிற வையை நதிக் கரையில் உள்ளவன்;

மணிகர்ணிகைத் தீர்த்தத்திற்கு உரியவன்;

சிவநெறி தழைத் தோங்கும் திருப்பூவணம் என அழைக்கப் படும் புட்பவனத்தில் உள்ள உயிர்கள் தம்முடைய தலைவன்;

இத்தகைய இறைவன், தெய்வத் தன்மை பொருந்திய மறை கள் ஒலிக்கும் ஒலி உலகமெங்கும் அதிர்ந்து ஒலிக்க, சுழலும் தன்மைத்தாகிய அழகிய தேரிலே தெருவழியாக உலா வருகின்ற தைச் (சிலர் வந்து) சொன்னார்கள்.

### அருஞ்சொற் பொருள்

புவனப் பழமொழி - உலகப் பழமொழி. புத்தேள் - கடவுள். தெரிக்கும் - சொல்லும். சிகாமணி - தலைமை இரத்தினம். மரிக்கும் - இறக்கும். மன்னான் - தலைவன். பரிக்கும் - உண்டாக்கும், தோற்றுவிக்கும். கேழ் - நிறம். முளரி - தாமரை. ஆர்ப்பு -ஆரவாரம், ஒலி. கறங்குதல் - சுழலுதல்.

### விளக்கவுரை

'அவனன்றி ஓரணுவும் அசையாது' என்பது பழமொழி. பழமொழி என்ற சொல்லே அதன் பழமையை உணர்த்துகின்ற காரணத்தால் தொன்மை என்ற அடைமொழியைப் பழமொழிக்குச் சேர்க்காது 'அவன்' என்ற சொல்லுக்கே சேர்க்கப் பெற்றது. 'அணுவும் அசையாது' என்றதில் உள்ள சிறப்பும்மை மறைந்து அணு அசையாது என நின்றது. இறைவன் உவமைகளின் மூலமாக உணர்த்தப்பட முடியாதவன்; ஆதலினால் உவமை சொல்லி உணர்த்தப்படும் தெய்வங்கள் பலவற்றுக்கும் நாயக மணியாய் இருக்கிறான் எனக் குறித்தார். தோன்றி அழிகின்ற தெய்வங்களின் தலைவன் என்பது 'செத்துப் பிறக்கின்ற தெய்வங்

கள் மணவாள' என்ற குமரகுருபர சுவாமிகள் அருள்வாக்கோடு ஒப்பிட்டு நோக்கக் கூடியது. அம் கேழ் முளரி நயனன்—செந்தாமரைக் கண்ணன். வையை நதித் தீரன் என்பதற்கு மதுரைத் தலைவன் என்றும் கொள்ளலாம். பூவணநகரில் உள்ள தீர்த்தங்களுள் வையையும் ஒன்றாதலின் வையை நதித்தீரன் என்பதற்கு வையை தீர்த்தக் கரையில் இருப்பவன் எனக் கொள்ளுதலே சிறந்தது. மணிகர்ணிகை திருப்பூவணத்துத் தோன்றிய வரலாறு பதினேழாவது கண்ணியாலும் அதன் உரையாலும் அறியப்பட்டது நிறை புட்பவனம் என்பது முக்கால வினைத்தொகை ஆதலின் மூன்று காலத்தும் சைவநெறி தழைக்கும் புட்பவனம் என்பது பெறப்பட்டது. சைவநெறி தழைப்பதற்குக் காரணமாகிய புட்பவனம் என்றும் கொள்ளலாம்; அடுகுழிசி மணிமேகலை என்பது போல.

## கேட்ட பேரிளம் பெண்ணின் செயல்

454\. ... ... ... — போர்ப்பவனி

455\. சென்றிளைஞர் ஆவி செகுத்துண்ணும் கண்ணார்க்கு
மன்றவுரை செய்நூல் மறந்தெழுந்தாள் -முன்றில்

456\. கடந்தாள் திருவீதி கண்டாள்தேர் முன்னே
நடந்தாள் சிவனை நயந்தாள் - தடந்தேரை

457\. ஓடாமை வேண்டி ஒருகோடி தண்டனிட்டாள்
நீடா தரங்கூர நேர்நின்றாள்

*பொழிப்புரை*

போர்க்கோலம் மேற்கொண்டு உலாச் சென்று இளைஞர்களுடைய உயிரை அழித்து அவைகளையே உணவாக உண்ணும் கண்களைப் பெற்றிருக்கின்ற முன்பருவப் பெண்களுக்கு மோகநூற் பொருளைத் தெளிவாகச் சொல்லிக் கொண்டிருந்த செயலையும் மறந்து எழுந்தாள்; முற்றத்தைக் கடந்தாள்; வீதியில் வந்தாள்; தேரின் முன்னே சென்றாள்; சிவனை விரும்பினாள்; விரைவாக இறைவனைக் கொண்டு செல்லுகின்ற பெரிய தேரை 'ஓடாமல் இரு என்ற வேண்டுகோளை விடுத்துத் தேருக்குக் கோடி முறை விழுந்து வணங்கினாள்; நீண்ட அன்பானது மேன்மேல் வளர்ந்தெழச் செயலற்று இறைவனெதிரே நின்றாள்.

*அருஞ்சொற் பொருள்*

செகுத்து - அழித்து. மன்ற - தெளிவாக. ஆதரம் - அன்பு.

### விளக்கவுரை

அறிவும் உணர்ச்சியும் இரு மாறுபட்ட பண்புகள். இரண்டும் சமநிலையில் இருக்கும்போதுதான் செம்மையான செயல் நடைபெறும். ஒன்றின் ஒன்று மிகுவதாயின் இயற்கை முறைக்கு மாறுபட்ட செயல்களே நிகழும். இறைவன் உலாவருதலைக் கேட்டவுடன் உணர்ச்சி மிகுந்தெழ, அறிவு தாழ்ந்த காரணத்தால் செய்யும் வினையை மறந்தாள். பெண்மைக் குரியனவும் அறிவைக் கொண்டு அமைக்கப் படுவனவுமாகிய அச்சம், மடம், நாணம், பயிர்ப்பு முதலியவைகளையும் நீக்கி வீதியில் சென்றாள்; உணர்ச்சியின் நிலை மேலும் எழுவதால் தேரைத் தெண்டனிட்டாள். இராமன் வந்துவிட்டான் எனக் கேட்டதால் உண்டான உணர்ச்சி மிகுதியில் செய்வதறியாது வேலைக்காரிகளையும் வணங்கிய பரதன் செயலோடு ஒப்பிடத் தக்கது. மேலும் உணர்ச்சி மிகுதிப்படச் செய்வதறியாது நின்றாள். இக்கருத்துக்களை 'நீடு ஆதரங் கூர' என்ற தொடரில் நயமுற அமைத்தார் ஆசிரியர். காலப்போக்கில் உணர்ச்சி சிறிது குறையக் குறைய அறிவு தலைதூக்குவதன் காரணமாக அவளிடம் சொல் தோன்றுகிறது (மிகுந்த உணர்ச்சி நிலையில் சொல் தோன்றாது). அவள் இறைவனை நோக்கிக் கூறியவைகளை இனிக் கூற முற்படுகிறார்.

## பேரிளம் பெண் இறைவனிடம் கூறியவை

457. ... ... ... — வீடாத

458. நாமக் கயிலைமலை நாதா புராதனா
காமப் பகையையடர் கண்ணுளா - வாமக்

459. கவுரி திருக்கணவா கங்கைமண வாளா
பவன் கவனவிடைப் பாகா - உவமையில்பொற்

460. கச்சேற்ற கொம்மைமுலைக் கன்னியரை வீதியிலே
பிச்சேற்ற வந்த பெருமானே - மைச்சேற்கட்

461. பாவணங் கோசைபயில் பாண்டிப் பழம்பதியாம்
பூவணங் கோயில்கொண்ட புண்ணியா - மேவநினைந்

462. தானாத மாலை அடுத்து மடல் ஏந்தினேன்
தேனார்வா யூறநின்று தேங்கினேன் - ஆனாத

463. வண்டு விழக்கண்ணீர் மல்கினேன் பொன்பூத்தேன்
விண்டலர் தூற்ற வெளிநின்றேன் - மண்டி

464. வருமார்வத்துற்றேன் மலர்க்கொன்றை யானேன்
திருமார்வத் துற்றணையச் செய்துன்—அருள்தாராய்

465. என்றாளை......

### பொழிப்புரை

அழியாத மிகுந்த புகழைக் கொண்ட கயிலை மலைக்குத் தலைவனே!

பழமை யானவனே!

காமம் என்ற பகையை அழித்த நெற்றிக் கண்ணை உடையவனே!

இடப்பக்கத்தேயுள்ள எம்பெருமாட்டியின் கணவனே!

கங்கை (என்பவளின்) தலைவனே!

காற்றைப் போல் வேகமாகச் செல்லுகின்ற காளையை வாகனமாகக் கொண்ட பாகனே!

### அருஞ்சொற் பொருள்

உவமை சொல்ல முடியாத அழகிய கச்சினை ஏற்றுக்கொண்டிருக்கிற கொம்மையைப் போன்ற முலைகளையுடைய பெண்களைப் பித்துண்டாகுமாறு செய்வதற்காகத் தெருவில் வந்த பெருமானே!

கருமை பொருந்தியதும், கெண்டை மீனைப் போன்றதும் ஆகிய கண்ணுடையவள் செய்யுள் தலைவி ஆகிய கலைமகள் தமிழோசை பயின்று கொண்டிருக்கிற பாண்டியநாட்டுப் பழமையாகிய பதியாகும் திருப்பூவணத்துள் கோயில்கொண்டு எழுந்தருளியிருக்கிற புண்ணிய மூர்த்தியே!

உம்மைப் பொருந்த நினைத்து முடியாத காரணத்தால் அமைதியடையாத மயக்கத்தை அடுத்து, மடல் என்ற சிறு பிரபந்தம் அமைக்கும் கருத்தை உள்ளத்திற் கொண்டவள் ஆனேன். அமைந்த வாயில் இன்பத்தேன் ஊற நின்று நிலைகுலைந்தேன். அமையாத வளையல்கள் கழன்று விழ, கண்களில் நீர் மல்கும் நிலையடைந்தேன். பசலை நிறத்தை அடைந்தேன். ஊரார் பழிச்சொல்லை வாய்விட்டுச் சொல்லித் தூற்ற வெளி நின்றேன். மேன்மேலும் பெருகி வருகின்ற அன்பின் எழுச்சியை அடைந்தேன். மன்மதனால் விடப்படுகின்ற மலரம்புகளுக்கு நான் ஒருத்தியாகவே நின்று ஏற்படும் நிலை அடைந்தேன். ஆதலினால் அழகிய மார்பிலே பொருத்தமுற அணையச்செய்து உன்னுடைய அருளைத் தருவாயாக என்று கூறினாள்,

### அருஞ்சொற் பொருள்

1. வீடாத – அழியாத. நாமம் - புகழ். அடர் - கொல்லும். வாமம் - இடது. பவனகவனம் – காற்றைப் போன்ற வேகம். பா அணங்கு - கலைமகள்.

## பேரிளம் பெண் தன்னைக் கொன்றையாக ஆக்கிக் கூறும் சிலேடை

| பெண்ணுக்கு | கொன்றைக்கு |
| --- | --- |

**1. மேவ நினைந்து ஆனாத மாலை அடுத்து மடல் ஏந்தினேன்**

| | |
| --- | --- |
| உம்மைப் பொருந்த நினைந்து (முடியாமையின்) அமையாத மயக்கத்தைப் பொருந்தி மடல் என்ற சிறுபிரபந்தம் அமைக்கும் கருத்தை உள்ளத்திற் கொண்டேன். | அடுத்து ஆனாத மாலை மேல் நினைந்து மடல் ஏந்தினேன். உம்மை அடுத்து நீங்காத மாலையாகப் பொருந்த நினைந்து அதற்கேற்ற இதழ்களை கொண்டேன். |

**2. தேனார் வாயூற நின்று தேங்கினேன்**

| | |
| --- | --- |
| ஆர்வாய் தேன் ஊற நின்று தேங்கினேன் - அமைந்த வாயில் இன்பத்தேன் ஊறுதலால் நின்று நிலைகுலைந்தேன் | ஊறி நின்று நிறையப் பெற்றேன், (தேனார் – தேன் தேங்குதல் - நிறைதல்.) |

**3. ஆனாத வண்டு விழக் கண்ணீர் மல்கினேன்**

| | |
| --- | --- |
| அமையாத வளையல் விழ, கண்ணில் நீர் நிறையப் பெற்றேன். (வண்டு - வளையல். கண்ணீர் - விழிநீர்.) | அமையாத வண்டுகள் வந்து கிண்டுதலால் தேன் வெளியாகும் நிலை அடைந்தேன். (கண்ணீர் - கள்+நீர்–தேன்.) |

**4. பொன் பூத்தேன்**

| | |
| --- | --- |
| பசலைப் பூக்கப் பெற்றேன் | பொன்னிறமான பூக்களைப் பூத்தேன். |

**5. வண்டு அலர் தூற்ற வெளி நின்றேன்**

| | |
| --- | --- |
| ஊரார் பழிச்சொல்லை வாய் விட்டுத் தூற்ற வெளியில் நின்றேன். (அலர் - பிறர் கூறும் பழி.) | மலர்கள் வெளிப்பட்டு மிகுதியாகத் தோற்றமுற வெளி நின்றேன். |

**6. மண்டிவரு மார்வத்துற்றேன்**

| | |
| --- | --- |
| மேன்மேலும் பெருகிவரும் அன்பின் எழுச்சியை அடைந்தேன். (மண்டி வரும்+ஆர்வத்து+உற்றேன்.) | அன்பு பெரும் மார்பகத்தை அடைந்தேன். (மார்வம் - மார்பம் - மார்பகம்.) |

**7. மலர்க் கொன்றையானேன்**

| | |
| --- | --- |
| மன்மதன் விடுகின்ற மலரம்புகளுக்கு நான் ஒருத்தியாகவே இருந்தேன். (மலர்க்கு+ஒன்றை+ ஆனேன்.) | மலர் ஆகிய கொன்றை ஆனேன். (மலர்+கொன்றை + ஆனேன்.) |

*விளக்கவுரை*

பித்து என்ற சொல் பிச்சு என நின்றது போலி. கலைமகள் தமிழோசையைச் செம்மையுற அறிந்து கொள்ளுதற் பொருட்டுத் திருப்பூவணம் வந்து தமிழோசை பயில்கிருள் என்பதை மைச் சேல் கண் பாவணங்கு ஓசை பயில் பாண்டிப் பழம்பதியாம் பூவணம், என்ருர். காப்புச் செய்யுளில் 'வெண்பாவை யுலாம் பூவை' எனக் குறித்ததும் இதனை வலியுறுத்தும். கொன்றையைத் தலைவிக்கு உவமையாக ஈண்டுக் காட்டியிருத்தல் போலவே அருணைக் கலம்பக ஆசிரியரும் வேறு முறையில் கொன்றையோடு உவமை அமைத் துள்ளார்.

## இறைவன் அருள் செய்தல்

464\. ... ... ... — அருள்தாராய்

465\. என்ருளை நோக்கி இடர்நோக்கிச் சம்பரனை
வென்ருனை யீசன் விலக்கிஞன் - நின்ருள்.

*பொழிப்புரை*

இறைவன், இவ்வாறு கூறிய பேரிளம் பெண்ணை நோக்கி அவள் துன்பத்தைப் பார்த்து, சாம்பராசுரனை வென்ற மன்மதனை விலக்கிஞன். (மன்மதன் சற்று விலகவே) பேரிளம் பெண்ணும் உயிர்பெற்று நின்ருள்.

## இறைவன் உலாப் போந்த திறன்

465\. ... ... ... — அப்

466\. பேதை முதலாகப் பேரிளம் பெணீருக
மாதர் பலர்மயங்க மாதேவன் - சோதிப்

467\. படர்வார் சடையெம் பரம்பரன் என்றும்
அடைவார் வினை தீர்க்கும் அம்மான் - அடியார்

468\. குழாமருச் சந்நிதியெங் கோமான் அதிரும்
முழாவருக் கோயில் முதல்வன் - விழாவருத்

469\. தேருடையான் எங்கள் திருப்பூ வணக்காசி
ஊருடையான் போந்தான் உலா.

*பொழிப்புரை*

இவ்வாறு பேதைப் பருவத்தாள் முதல் பேரிளம் பெண் பருவத்தாள் ஈருக உள்ள பெண்கள் பலரும் மயங்க, பெருந்தேவன்—

ஒளியுடைய நிலவானது படர்ந்து செல்லும் நீண்ட சடையுடைய எம்முடைய மேன்மைக் கடவுள் - எக்காலத்தும் தன்னை வந்து அடைகின்ற அடியவர்களின் வினைகளைத் தொலைக்கின்ற இறைவன் - அடியவர் கூட்டம் என்றும் நீங்காதிருக்கின்ற திருமுன்பினை உடைய எம்முடை அரசன் - ஒலிக்கின்ற குடமுழாவினுடைய ஒலி என்றும் நீங்காதிருக்கின்ற கோயிலின் முதலுரிமையாளன் - சிறப்புக் குறையாத தேரை உடையவன் - எங்களுடைய திருப்பூவணம் என வழங்கப்படும் காசி என்ற ஊரைச் சொந்தமாக உடையவன் உலா வந்தனன்.

*விளக்கவுரை*

'சம்பரனுக்கு ஒரு பகைவா' என்ற கந்த புராணக் கருத்தையும் உடன்கொண்டு மன்மதனைச் சம்பரனை வென்றான் எனக் குறித்தார். சோதி என்பதனைத் தனியாகவே நிறுத்தி 'ஒளி வடிவமானவனே' என்று தனி விளியாகவும் அமைக்கலாம். இறைவனுடைய திருவோலக்க மண்டபத்தில் இறைவனுக்கு முன்னர் எப்போதும் அடியவர் கூட்டம் இருந்து கொண்டே யிருத்தலில் 'அடியார் குழாம் அருச் சந்நிதி' யென்றார். தேருக்கு அமையவேண்டிய பல்வகைச் சிறப்புக்களும் நீங்காது அமைந்த தேர் என்பதாம். காலக் குறைபாட்டினால் சில கோயில்களில் விழா அற்றுக் கிடக்கின்ற தேர்களை உள்ளத்தில் கொண்ட காரணத்தால் விழாவில் குறைபாடில்லாத் தேர் எனக் குறித்ததாகவும் கொள்ளலாம். தன்னை அடைந்தோர்க்கு வீட்டின்பத்தைக் கொடுக்கும் சிறப்புடையது காசி. இவ்வாறே திருப்பூவணத் தலமும் தன்னை அடைந்தோர்க்கு வீட்டின்பத்தைக் கொடுப்பது ஆதலின் திருப்பூவணத்தையும் காசி என்றே குறிப்பிட்டார். போந்தான் என்பதற்குப் போனான் என்பதைவிட 'வந்தான்' என்ற பொருள் நயமுடையதாகவும், மங்கல முறையாகவும் தோற்றுவதாதலில் அவ்வாறே கொள்ளப் பட்டது. போதருதல் - வருதல். 'பொலங்குழை மகளிரெல்லாம் பொதுவுற நோக்கிப் போந்தேன்' என்ற கம்பராமாயணத் தொடருக்கும் வந்தேன்' என்றே ஆன்றோர்களால் பொருள்கொள்ளப் பட்டுள்ளது.

இந்நூலைப் பொன் என்று ஆரம்பித்து உலா என்று முடித்துள்ள சிறப்பால் இது ஏனைய உலாக்களுக்கெல்லாம் சிறந்த உலாவாக அழகிய உலாவாக - பொன் உலாவாகாத் திகழும் பெருமையுடையது என்பது இயற்கையின் - எளிமையின் வந்த இனிய நயமாகும்.

